# கல்கி

## பொருளடக்கம்

மார்ச் 11, 1956



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# நைலான்கள்

## நாகரீகத்தை அறிவுறுத்துகின்றன...



பாரகான் நைலான் புடவைகளின் கவர்ச்சி தரும் பார்வைக்கு இணையே இல்லை. தரத்திலும், பார்வையிலும் இறக்குமதியாகும் உயர்தர துணியுடன் போட்டியிடுகின்றன. பாரகான் நைலான் புடவைகளின் இழுத்தால் நீண்டுகொடுக்கும் தன்மை உங்களை அதிசயிக்க வைக்கும். நீங்கள் அவைகளை தினமும் சிரமமில்லாமல் துவைக்கலாம், அவை சுருங்குவதில்லை.

உங்களுக்கு நைலான் புடவைகள்
வேண்டும்பொழுது

**பாரகான்**

என்று கேளுங்கள்

உடனே கட்டிக்கொள்ளும் படியான
6 கெஜ புடவை ஒரு
பெட்டியில்
கிடைக்கிறது.



உங்கள் வழக்கமான கடையில் விசாரியுங்கள்.

**பாரகான் டெக்ஸ்டைல் மில்ஸ்**

வொர்லி, பம்பாய் 13




டீலக்ஸ் ரேயான் க்ரேப்கள், கலர்களிலும்,
பிரிண்ட் செய்யப்பட்டும் தயாரிக்கின்றார்கள்.

PT-99:1 TM



மலர் 15
இதழ் 32

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மன்மத ஆண்டு
மாசி மீ 28

# தேசத்தின் செல்வ நிலை

கோடை காலம், மழை காலம் என்பது போல் இப்பொழுதெல்லாம் இன்னொரு காலத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். அதுதான் பட்ஜெட் காலம்.

பெப்ருவரி—மார்ச்சு வந்து விட்டால் மக்கள் ரயிலடியிலும், பஸ் ஸ்டாண்டிலும் எங்கு நான்கு பேர்களாகக் கூடினாலும் பட்ஜெட்டைப் பற்றியே பேசுகின்றனர்.

இந்த மாதத்தில் ராஜ்ய சர்க்கார்களும், மத்திய சர்க்காரும் பட்ஜெட்டுகளைச் சமர்ப்பிக்கின்றனர். ராஜ்ய சட்டசபைகளிலும் தில்லி மக்கள் சபையிலும்விவாதங்கள் நடைபெறுகின்றன.

இந்த வருஷம் சென்னை நிதி மந்திரி திரு சுப்பிரமணியம் சமர்ப்பித்துள்ள பட்ஜெட்டுக்கும் தில்லி நிதிமந்திரி திரு தேசமுக் சமர்ப்பித்துள்ள பட்ஜெட்டுக்கும் பொதுவாக நல்ல வரவேற்பே இருந்துள்ளன.

இந்தப் பட்ஜெட்டுகள் பற்றுக்குறை பட்ஜெட்டுகள்தான் என்றாலும் இந்தப் பற்றுக் குறை பட்ஜெட்டுகள் சமர்ப்பித்துள்ள காலத்தையும் சூழ்நிலையையும் கவனிக்கும் போது இவை திருப்தி தரும் பட்ஜெட்டுகள் என்றே கூறவேண்டும்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தை பாரத தேசம் வெற்றிகரமாக முடித்துவிட்டு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் வகுத்து, அதில் அடியெடுத்து வைக்கும் காலம். ஆம்; முதல் ஐந்தாண்டுத் திட்டம் இந்த மார்ச் மாதத்துடன் முடிவடைகிறது. இந்த முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் பாரதம் சாதித்துள்ள சாதனை என்ன என்று யோசிக்க வேண்டும்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் தொடக்க காலத்தில் தேசத்தில் உணவுப் பற்றுக்குறை தலைவிரித்தாடிக் கொண்டிருந்தது. வருஷத்துக்கு 150 கோடி ரூபாய் பெறுமானமுள்ள உணவுப் பொருள்கள் மேல் நாட்டிலிருந்து இறக்குமதி செய்து வந்தோம். இப்பொழுது அந்த நிலை அடியோடு மாறிவிட்டது. தேசத்தில் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் பயனாக உணவுப் பஞ்சம் அறவே நீங்கிவிட்டது. பயங்கரமான புயல், வெள்ளம் முதலிய இயற்கை உற்பாதங்கள் ஏற்பட்டும் நமது உணவு நிலை சீர்கேடு அடையவில்லை. நமக்குப் போதிய உணவு கிடைக்கிறது. வெளி நாட்டுக்குக்கூட உணவு தான்யங்களை ஏற்றுமதி செய்யக்கூடிய நிலையில் இன்று இருக்கிறோம். மேல் நாட்டுக்கு உணவு தான்ய வகைக்கென்று போய்க் கொண்டிருந்த 150 கோடி ரூபாய் நின்று விட்டது.

இது தவிர, சென்ற ஐந்தாண்டுக் காலத்தில் தனி முதலாளிகளும் சர்க்காரும் பல பெரிய தொழிற்சாலைகள் ஏற்படுத்தி லாபகரமாக நடத்தி வருகிறார்கள். உற்பத்தியும் அளவுக்கு மிஞ்சி, குறித்த லட்சிய எண்ணிக்கைக்கு மிஞ்சியே பெருகி விட்டது!

இந்த நிலையில் பாரதத்தின் தலைவர்கள், முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் வெற்றியில் நம்பிக்கை கொண்டு மிக விரிவான, மிகப் பெரிய ரூ. 4800 கோடிக்கும் மேலே செலவாகும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை வகுத்திருக்கிறார்கள். இது ஏப்ரல் மாதத்திலிருந்து தொடங்குகிறது. பிரமிக்கத்தக்க இந்த இரண்டாவது திட்டத்துக்கு நிதி தேடித் தருவது நிதி மந்திரிகளின் பொறுப்பாகி விடுகிறது! இந்தப் பொறுப்புணர்ச்சியுடன்தான் நிதி மந்திரிகள் பட்ஜெட் வெளியிட்டிருக்கிறார்கள்!

ஆளும் கட்சியாகிய காங்கிரஸ் கட்சி சோஷலிஸ சமுதாயத்தை உருவாக்கும் லட்சியத்தை மேற்கொண்டிருக்கிறது. எல்லாத் தொழில் துறைகளையும் சர்க்கார் மேற்கொள்ளத் தொடங்கினால் சர்க்காரிடம் மக்கள் திருப்தி காண்பிக்க மாட்டார்கள். தனி முதலாளிகள் ஊக்கங் கொண்டு பல தொழில்கள் செய்ய முடியாது.

தனி நபர்களின் உற்சாக மின்மையாலும் தேசம் முன்னேறுவது கடினம். அதனால் நிதி மந்திரி இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்துக்கு நிதி தேடவேண்டும் என்னும் நிலையில் நாட்டில் உள்ள எல்லாத் தொழில்களையுமே தேசியமாக்க முடியாதல்லவா!

இத்தனை அம்சங்களையும் மனத்திற்கொண்டு, மத்திய சர்க்கார் நிதி மந்திரியும் நமது ராஜ்ய சர்க்கார் நிதிமந்திரியும் பட்ஜெட் தயாரித்திருக்கிறார்கள். அத்துடன் எடுத்ததற்கெல்லாம் குறை கூறும் எதிர்க் கட்சித் தரப்பினருடைய பாராட்டுதல்களையும் பெற்றிருப்பதே இவ் வருஷத்திய பட்ஜெட் திருப்திதரும் பட்ஜெட் என்பதை எடுத்துக் காட்டுகிறது.

தேசமுக் சமர்ப்பித்த பட்ஜெட்டில் சுமார் 34 கோடி ரூபாய் வருமானம் கிடைக்கும் அளவுக்கு வரி விதித்திருக்கிறார். கண்ணாடித் தொழிலுக்கு உபயோகமாகும் திரவத் தங்கம், தாவர எண்ணெய், துணிகள் ஆகிய வற்றின் மீது வரி உயர்த்தியிருக்கிறார். தந்தி, ரிஜிஸ்தர் முதலிய தபால் கட்டணங்களை உயர்த்தியிருக்கிறார். கம்பெனிகள் மீது 'சூபர் டாக்ஸ்' அதாவது குறிப்பிட்ட அளவுக்கு மேல் வரும் அதிக வருமானத்தின் மீது வரி விதித்திருக்கிறார். இத்தனை வரிகளும் சாதாரணப் பாமர மக்களைப் பாதிப்பதில்லை. பொதுவாக, வரி கொடுக்கும் நிலையிலுள்ளவர்களையே கொடுக்கச் செய்கிறது. பன்னிரண்டணாவுக்குத் தந்தி கொடுப்பவர், மேலும் ஓரணா கொடுப்பதற்குத் தயங்க மாட்டார். ஆகவே பொதுவாக தேசமுக் அவர்களின் வரிவிதிப்பில் குறையும் கஷ்டமும் காண்பவர்கள் குறைவு.

நம் நாட்டிலிருந்து முக்கியமாக ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களில் ஒன்று தேயிலை. அதன் மீது ராத்தலுக்கு இரண்டணா வீதம் வரி குறைத்திருக்கிறார். இதன் காரணமாகத் தேயிலை ஏற்றுமதி அதிகரிக்கலாம்.

இவ்வளவு வரி விதித்தும் சுமார் பதினெட்டு கோடி ரூபாய்க்கு வழி கண்டு பிடிக்க வேண்டியிருக்கிறது! வரிகளின் மூலம் கிடைக்கும் வருமானம் எதிர்பார்ப்பதற்கு மேல் கிடைத்து, இந்தத் துண்டு விழும் தொகையைச் சரிக்கட்ட வேண்டும். அல்லது வேறு வழி வகைகளைக் கண்டுபிடிக்க வேண்டும்.

மற்ற ராஜ்ய சர்க்கார்களும் பற்றுக்குறை பட்ஜெட்டுகள் தயாரித்து, சிறு சிறு தொகையைச் சரிக்கட்ட முடியாமல் துண்டாகவே வைத்துள்ளன. இதற்கு முக்கிய காரணம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம்தான்.

சென்னை சர்க்கார் பட்ஜெட்டில் மூன்றுகோடி சொச்சம் ரூபாய் துண்டு விழுகிறது. இதில் சுமார் ஒன்றரைக் கோடி ரூபாய் புது வரிகள் மூலம் சரிக்கட்டப்பார்க்கிறார் நமது நிதிமந்திரி.

முக்கியமாகப் பெரிய தொழிற்சாலைகளுக்கு 30 சத விகிதம் அதிகமாக மின்சாரக் கட்டணம் விதிக்கப்பட்டிருக்கிறது. பொதுவாக, பெரிய தொழிற்சாலைகளுக்குக் கொடுக்கப்படும் மின்சாரக் கட்டணம், வீட்டு உபயோகத்துக்குக் கொடுக்கப்படும் மின்சாரக் கட்டணத்தை விட மிகக் குறைவு. மேலும் பல ஆண்டுகளாக இந்தத் தொழிற்சாலை மின்சாரத்தின் மீது வரி விதிக்காமல் இருந்திருக்கிறார்கள். அதனால் இந்தக் கட்டணம் பற்றிப் பெரிய தொழிற்சாலைகளை நடத்தும் முதலாளிகள் அதிகமாகவருத்தப்படமாட்டார்கள்.

ஆனால் இந்த வரி புதிதாக ஆரம்பிக்கப்படவிருக்கும் சிறு கிராமத் தொழில்களைப் பாதிக்காதோ என்று சிலர் நினைக்கலாம். மக்களின் பொருளாதார நிலை உயர்வதற்குச் சிறு கைத் தொழில்கள் வளர வேண்டும் என்று சொல்லி வருகிறார்கள். அத்துடன் கிராமத் தச்சரும் கொல்லரும் மின்சார இயந்திரங்களைத் தங்கள் தொழில்களுக்கு உபயோகிக்க வேண்டும் என்று, மின்சாரத்தினால் மரத்தை அறுக்கும் வாளும், இரும்பை அடிக்கும் சம்மட்டியும் கிராமந்தோறும் கொண்டு சென்று, மக்களை மின்சார யந்திரங்களை உபயோகிக்கப் பழக்கப்படுத்த முயலும்போது, இத்தகைய வரி விதிப்பு சர்க்காரின் நோக்கத்துக்கு முரணாக இல்லையா என்று நினைக்கலாம். ஆனால் இந்த அதிகப்படி வரி புதிதாக ஆரம்பிக்கப்பட்ட தொழிற்சாலைகளுக்கு விதிக்கப் போவதில்லை என்று நிதி மந்திரி தெளிவாகக் கூறியிருக்கிறார்.

சர்க்கரைக்கு வரி விதித்திருப்பது பற்றிச் சிலர் குறைப்படுவதாகத் தெரிகிறது. சர்க்கரை வரி ஏழை பணக்காரர் யாவரையும் பாதிக்கும் வரி என்று தோன்றலாம். ஆனால் வருஷத்துக்குத் தலைக்கு ஐந்தணாத்தான் ஒரு நபர் கொடுக்கவேண்டியிருக்கும் என்பதையும் ஸ்பஷ்டமாகக் கூறியிருக்கிறார் நிதி மந்திரி.

மொத்தத்தில் வரி விதிப்பு என்றால் யாருக்கும் கசப்பாக இருக்கும். ஆனால் பல முன்னேற்றத் திட்டங்கள் வகுத்து நிறைவேற்றப்படும் இச்சமயத்தில் வரி விதிக்காமல் பணம் திரட்டுவது முடியாத காரியம். மக்களிடமிருந்து கடனாகவும், வரிகளின் மூலமும் பணம் வாங்காவிட்டால் எனில் சர்க்கார் திட்டங்கள் நிறைவேற்ற வழியில்லாமல் போகும். இந்த ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் அதிகத் தொழில்கள் ஏற்பட இருப்பதாலும், ஏற்கனவே திறமையுள்ள தொழிற்சாலைகள் நன்கு வேலை செய்து வருவதாலும் நாட்டின் செல்வ நிலை நிச்சயம் உயரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அதற்குத் தக்கபடி பணச் செலாவணி அதிகரித்து, பற்றுக்குறை பட்ஜெட்டுகள் நிறைவுபெறும் என்று எதிர்பார்க்கிறோம்.

# நிலக்கரி தரும் நெய்வேலி

இந்தியா சுதந்திரம் பெற்று எட்டு ஆண்டுகள் ஆகின்றன. இந்த எட்டு ஆண்டுகளில் பல துறைகளில் சிறந்த முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. பெரிய பெரிய அணைக் கட்டுகள் கட்டப்பட்டு வருகின்றன. பெரிய பெரிய மின்சார நிலையங்களும் தொழிற்சாலைகளும் அமைக்கப்பட்டு வருகின்றன. இவைகள் எல்லாம் தென்னாட்டைவிட வடநாட்டில்தான் அதிகம் என்று எல்லாரும் புகார் சொல்லிக் கொண்டு வந்தார்கள். அதில் ஓரளவு உண்மையும் இருக்கிறது என்பதை இப்பொழுது எல்லாரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

வடநாட்டில் ஆனாலும் தென்னாட்டில் ஆனாலும் தேசத்திலிருந்து வறுமை ஒழிய வேண்டும்; செல்வம் செழிக்க வேண்டும்.

வறுமை ஒழியவும், செல்வம் செழிக்கவும், உற்பத்தி பெருகவும், இயந்திர வசதிகள் வளரவும், நாகரிக வாழ்க்கைச் சாதனங்கள் பெருகவும் நேரடியாக உதவும் இரும்பும், நிலக்கரியும் தமிழ் நாட்டில் இருக்கின்றன. அவைகளை உடனே உபயோகப்படுத்த முயல வேண்டும் என்று நாட்டு நலத்தில் அக்கறை கொண்ட அனைவரும் வற்புறுத்தி வந்தார்கள்.

நிலக்கரியையும், இரும்பையும் பூமிக்குள்ளிருந்து எடுத்து உபயோகப்படுத்தும் துறையில் கவனம் செலுத்தித் தீவிரமாக வேலை செய்தால்தான் இன்று தமிழ் நாட்டில் தொழில் துறையில் ஏற்பட்டிருக்கும் பல பிரச்னைகளைச் சமாளிக்க முடியும்.

அப்படிக் காரிய சித்தி பெறக்கூடிய முயற்சியை, நெய்வேலியில் 'லிக்னைட்' என்னும் பழுப்பு நிலக்கரியை வெட்டி எடுக்கும் திருப்பணியைத் தீவிரமாக்கத் தொடங்கியிருக்கிறார்கள். நெய்வேலியில் பூமிக்கு அடியில் இருக்கும் நிலக்கரியை எடுப்பதில் உள்ள மிகப் பெரிய இடையூறான நீரோட்டத்தின் அழுத்தத்தைக் குறைப்பதற்கு முயன்று வருகிறார்கள்.

நானூறு அடி ஆழத்துக்குக் கீழேயுள்ள தண்ணீரின் அழுத்தத்தைக் குறைப்பதற்கு நிமிஷத்துக்கு ஆயிரம் காலன் வீதம் இறைக்கும் சுமார் இருபது குழாய்களைக் கொண்டு தண்ணீரை இறைக்க ஆரம்பித்துவிட்டார்கள். நமது கைத்தொழில் மந்திரி கனம் பக்தவத்சலம் சென்ற பெப்ருவரி மாதம் 29ல் தண்ணீர் இறைக்கும் வேலையைத் துவக்கி வைத்தார்.

இந்தக் குழாய்கள் நூறு நாட்கள் இரவு பகல் இருபத்து நாலு மணி நேரமும் தண்ணீரை இறைத்தால் பழுப்பு நிலக்கரிக்கு அடியில் உள்ள நீரின் அழுத்தம் குறையும். அப்பொழுது நிலக்கரியை எவ்வித இடையூறும் இல்லாமல் தாராளமாக எடுக்கலாம் என்று நிபுணர்கள் திட்டமிட்டிருக்கிறார்கள்.

இந்தச் சோதனை வெற்றி பெற்றால் இந்திய சர்க்கார் எழுபது கோடி ரூபாய் வரையில் செலவு செய்து இது சம்பந்தமான திட்டங்களை எல்லாம் நிறைவேற்றி வைக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளப் போகிறார்கள்.

கோடிக்கணக்கான ரூபாய் செலவாகும் இந்தத் திட்டத்தின் மூலம் தமிழ் நாட்டின் உருவத்தையே மாற்றி விடலாம். இப்பொழுது இந்த மாகாணத்தில் உற்பத்தியாகும் மின்சாரத்தைப் போல இரண்டு மடங்கு மின்சாரத்தை நெய்வேலியிலேயே உற்பத்தி செய்யலாம். இதன் மூலம் இப்பொழுதுள்ள தொழிற்சாலைகளுக்கு வேண்டிய அளவு மின்சாரத்துக்கும் அதிகமாகவே தாராளமாகக் கொடுக்கலாம். மின்சார சக்தியைக் கொண்டு ஊற்றுத் தண்ணீரை இறைத்து வயல்களுக்கும் பாய்ச்ச வசதி செய்யலாம். மற்றும் பற்பல சிறு கைத்தொழில்களும், பெரும் கைத்தொழில்களும் மின்சார சக்தியை நன்கு பயன்படுத்திக் கொண்டு ஓங்கிப் பெருகலாம்.

தமிழ் நாட்டுக்கு வேண்டிய ரஸாயன எருவை நெய்வேலியிலேயே தயாரித்து விடலாம். அதற்கு வேண்டிய எல்லா வசதிகளும் அங்கு கிடைக்கப் போகிறது.

உருக்குத் தொழிற்சாலைகள் உண்டாக்கலாம். அதன் மூலம் இதர நாடுகளின் உதவியில்லாமலே அற்புதமான இயந்திரங்களைத் தமிழ் நாட்டில் உற்பத்தி செய்யலாம்.

இன்னும் எத்தனை எத்தனையோ உப தொழில்கள் வளருவதற்கு இடம் இருக்கிறது! கண்ணாடித் தொழிற்சாலை உண்டாவதற்கு வேண்டிய அபூர்வ மண் நெய்வேலியில் இருப்பதாக பூதத்துவ ஆராய்ச்சி நிபுணர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

இதனால் தமிழ்நாட்டில் உள்ள வேலையில்லாத் திண்டாட்டம் ஓரளவு உடனே குறையும். பல ஆயிரக்கணக்கான மக்களுக்கு வேலை கிடைக்கும். தமிழ் மக்கள் தன்னம்பிக்கையுடன் வாழ முடியும். அத்துடன் இதுவரை நெய்வேலியில் செலவாகியிருக்கும் ஒன்றரைக் கோடி ரூபாயும் விழலுக்கு இறைத்த நீராகாமல் காப்பாற்ற முடியும்.

இந்தக் காரியங்கள் எல்லாம் உருவாவதற்கு, தமிழ்நாடு தொழில் வளத்தில் மகோன்னதமடைவதற்கு வசதியுள்ள இந்தத் திட்டத்தை வெற்றிகரமாக்கும் பொறுப்பு இன்று நெய்வேலியில் தொண்டாற்றும் நிபுணர்களிடம்தான் இருக்கிறது. அவர்கள் தேச நலத்தைக் கருத்தில் கொண்டு மிகுந்த சிரத்தையுடன், இரவு பகல் தூங்காமல், தேக சுகத்தைக் கருதாமல், குற்றம் குறை சொல்வதற்கு இடம் ஏற்படாமல், இடைவிடாத ஊக்கத்துடனே சோதனை நடத்தி அதை வெற்றியாக்கி, தமிழ் நாட்டின் வளத்தைப் பெருக்க உதவ வேண்டும்.

நெய்வேலியில் இன்று சோதனையில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் ஊட்டும் வகையில் இந்திய சர்க்காரும் நடந்து கொள்ள வேண்டும். இவ்வாறு நடந்தால் தமிழ் நாட்டில் இல்லை என்ற கொடுமையை இல்லையாகச் செய்து விடலாம்.

# அறிஞர் காட்டும் நம்பிக்கை ஒளி

கும் கும் என்று இருள் சூழ்ந்திருந்தது. பாதை சரியாகத் தெரியவில்லை. 'ஹோய்' என்று கவர்க் கோழியின் பயங்கரச் சத்தம் வேறு. வானத்தில் நட்சத்திரங்களையெல்லாம் மறைத்துக் கொண்டு மேகம் அடர்ந்திருந்தது. ஒரு வழிப்போக்கன் தட்டுத் தடுமாறி நடந்து போய்க் கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில் ஒரு மின்னல் பளீர் என்று வெட்டியது. கொஞ்சம் வெளிச்சம் வந்தது. அந்த வழிப்போக்கன் உள்ளத்தில் சற்றுத் தைரியம் ஏற்பட்டது. பத்தடி தூரம், தைரியமாக நடக்கலாம் என்று தோன்றியது!

இந்த வழிப்போக்கனின் நிலையில்தான் இன்றைய உலகமிருக்கிறது. உலகத்துக்குத் தைரியம் ஊட்ட வந்த ஒரு மின்வெட்டாக வந்தது டாக்டர் கில்பெர்ட் மூர்ரேயின் பேச்சு.



டாக்டர் கில்பர்ட் முர்ரே

**யார் இந்த கில்பெர்ட்முர்ரே!**

டாக்டர் கில்பர்ட் முர்ரே தொண்ணூறு வயதான தொண்டு கிழவர். கிரேக்க இலக்கியத்தில் ஆழ்ந்த படிப்பும், உலக அறிஞர்களிடையே பெரு மதிப்பும் பெற்றவர். அவர் லீக் ஆப் நேஷன்ஸ், ஐ. நா. சபையின் கல்வி ஸ்தாபனம் ஆகிய பல ஸ்தாபனங்களிலிருந்து அரும்பணி புரிந்திருக்கிறார். அவர் தமது தொண்ணூறாவது பிறந்த நாளன்று இங்கிலாந்து ரேடியோ நிலையத்தில் (பி. பி. ஸி. யில்) ஒரு சொற்பொழிவு வாற்றினார். அந்தப் பேச்சு சென்ற வாரம் "ஹிந்து" பத்திரிகையில் வெளியாகி யிருக்கிறது. அதில் சில பகுதிகளைப் பாருங்கள்:

"என் அளவுகடந்த நீண்ட வாழ்வில் பெரும்பாலும் சுறுசுறுப்பாக வேலை செய்து வந்திருக்கிறேன். அந்த வேலைகளை யெல்லாம் இரண்டு லட்சியத்தைக் கொண்டு செய்து வந்திருக்கிறேன். ஒன்று கிரேக்க மொழியையும் பண்பாட்டையும் பரப்புவது. மற்றையது உலக சமாதானத்தை நிலைநாட்டுவது.

உலகில் சாந்தியும் சமாதானமும் நிலவவில்லையெனில் நாம் தோல்லந்தோம். ஆனால் இன்றோ சாந்தி 'வாழ்வதா சாவதா!' என்று கேட்டுக் கொண்டே யிருக்கிறது.

அதுமட்டு மல்ல; லட்சியங்களுக்கு எதிராக இருந்த பகை, இப்பொழுது மிகப் பலம் பொருந்தி விளங்குகிறது. 1914-ம் ஆண்டைக் காட்டிலும் 1939 லிருந்ததை விடவும் இன்று அதிகபலமும் கடுமையும்பெற்று விளங்குகிறது. முதல் மகாயுத்தம் மனிதனைக் காட்டுமிராண்டியாக்கியது என்றால், இரண்டாவது மகாயுத்தம் அதைவிடக் கீழ் நிலைக்குக் கொண்டு உய்த்துவிட்டது. மொத்தத்தில் உலகில் அங்கங்கே பலாத்காரமும் கொடுங்கோன்மையும் சிதறிக் கிடக்கின்றன. இதன் காரணமாக மனிதப் பண்பாட்டுக்கே சோதனை ஏற்பட்டிருக்கிறது.

இந்தச் சூழ்நிலையில் நாகரிகத்தைக் காப்பாற்ற நாம் செய்ய வேண்டியது என்ன? இந்தக் கேள்விக்குப் பதில் ஸர் வின்ஸ்டன் சர்ச்சில் வெகு நாட்களுக்கு முன்பே எடுத்துக் கூறி விட்டார்.

'நாம் செய்ய வேண்டிய காரியம் ஒன்றே ஒன்றுதான். அதுவும் மிக எளியதுதான். அதாவது பத்து, நூறு, லட்சம் தனிமனிதர்கள் கெடுதல்களுக்குப் பதிலாக நல்ல காரியங்களை செய்வது என்று தீர்மானித்துக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்து உலக மக்களின் நல்லாசி பெற வேண்டும்' என்றார். இதுதான் இப்பொழுது நமக்குத் தேவை என்றால், நாம் பிழைத்து விட்டோம் என்று எண்ணலாம். ஏனெனில் இந்த உணர்ச்சி நம்மிடமிருக்கிறது. பரிபூரணமாக இல்லாவிட்டாலும், நல்ல காரியம் செய்யவேண்டும் என்ற உணர்ச்சி கிட்டத் தட்ட நிறையவே இருக்கிறது ஆனால் அது மட்டும் போதாதே! நம்மைச் சுற்றி எந்த நிமிஷமும் வெடிக்கும் பயங்கரக் குண்டுகள் அதிகமாகக் கிடக்கின்றனவே! நம்மைச் சுற்றி அதிகமாகத் தீ பரவி யிருக்கிறதே! ஒரு காரணமு மின்றிக் கெடுதல் செய்யச் சதிகள் நடக்கின்றனவே என்று சோர்வடையலாம். இத்தனைக் கிடையிலும் நமது உயர் பண்பு தாழ்ந்துவிட வில்லை. அதனால் நமது பண்பாட்டை நிச்சயம் காப்பாற்றியே தீருவோம்!"

இவ்வாறு பேசி யிருக்கிறார் கில்பெர்ட் முர்ரே. அவர் பேசிய பேச்சு, நமது நாட்டின் சூழ்நிலைக்கும் பொருந்தும். சென்ற ஆண்டு 'கல்கி' காங்கிரஸ் மலரில் நமது தலைவர் ராஜாஜி குறிப்பிட்ட உண்மையை இங்கே நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்:

"சுயநலக் கருத்தும் மோசமும் பலவிதத் திருட்டுச் சுபாவமும் குறைந்தாலொழிய, சமூகமானது சுகவாழ்க்கை அடையாது.

செல்வ நிலை உயர்வது மட்டும் போதாது. சமுதாயம் சுகமாக இருக்க வேண்டுமானால் பண்பட்டவர்கள் என்கிற கூட்டம் நல்ல யோக்கியர்களாக இருக்க வேண்டும். படித்தவர்கள், தேர்தலில் நிற்க ஆசைப்படுபவர்கள், வியாபாரிகள் முதலியவர்கள் பாபத்துக்குப் பயந்தவர்களாக இருக்க வேண்டும். இவர்கள் உள்ளங்களில் அன்பும், அறிவும், சத்தியமும் முழு இடம் பெறு விட்டால் சமூக முன்னேற்றத்துக்கு வழியில்லை.

இதுதான் மிகப் பெரியதும் அடிப்படையானதுமான தேசியத் திட்டம். இதற்கு ஐந்தாண்டு காலம் வரையும் கணக்குப் போட வேண்டியதில்லை. ஒரு ஆண்டே போதும்.

நம் மக்களின் உள்ளங்களை முன்னுளில் கரைத்து ஆட் கொண்ட நல்லார்கள் அனைவரும் அருள்வார்களாக!"

அட்டைப்படம்

## எங்கும் நிறைந்தவன்

எங்கும் நிறைந்த ஈசனை நம் முன்னோர்கள் பல படியாகப் பக்தி செய்து பாடிப் பரமானந்தம் அடைந்திருக்கிறார்கள். மரத்திலும் இலிங்கத்திலும் ஆண்டவனைக் கண்டு ஆனந்தித்திருக்கிறார்கள். அது மட்டுமல்ல; தங்களை நாயகியாகவும் ஆண்டவனை நாயகனாகவும் பாவித்து, காதல் செய்தும் ஊடியும் அவர்கள் அந்த நிலைகளில் நின்று பாடிய பாடல்கள் தமிழ் இலக்கியத்துக்கு அரும் பொக்கிஷம். பக்தர்களுக்கு, பக்திச் சுவை பெருக்கும் வற்றாத ஊற்று.

விண்ணிலும் மண்ணிலும் நீரிலும் நெருப்பிலும் நிறைந்துள்ள ஈசன் மீது காதல் கொண்டு பாடும் நாயகியின் தோற்றத்தை, மகா சிவராத்திரி வாரத்தில் வெளியாகும் இவ் விதழின் அட்டைச் சித்திரமாக வழங்குகிறார் நமது ஓவியர் மணியம்.

ஆசிரியர் **சோமு** எழுதும்




# கடல் கண்ட கனவு

**ஏப்ரல் 15 "கல்கி"**

தமிழ்ப் புத்தாண்டு மலரில் ஆரம்பமாகிறது

# என்ன சேதி?

## ராமகிருஷ்ண ஜயந்தி

எல்லோரிடத்தும் அகலிருந்தது. அகலில் எண்ணெயிருந்தது. எண்ணெயில் திரியுமிருந்தது. அந்தத் திரியும் ஒரு காலத்தில் எரிந்திருந்தது. இப்பொழுதுதான் எரியவில்லை. அந்தத் திரியைப் பற்ற வைக்கத் தீபம் இல்லாமல்தான் எல்லாரும் ஏங்கிக் கொண்டிருந்தனர். ஏன், இந்த அணைந்த திரிகள் எரியவே போவதில்லையோ என்றுதான் எண்ணினார்கள். அப்போது ஒரு சுடர் இலேசாக ஒளி விட்டது. அது நாளாக நாளாக மிகப் பெரிதாகச் சுடர் விட்டுப் பிரகாசித்தது. நூற்றுக் கணக்கான பேர் அந்தத் தீபச் சுடரில் தங்கள் அணைந்த விளக்கை ஏற்றிச் சென்றனர். அப்படிப் பிரகாசமாக வீசிய ஜோதிதான் ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.



ராம கிருஷ்ணர் தோன்றிய காலத்தில் பாரத நாட்டில் ஹிந்து தர்மம் இருக்கிற இடம் தெரியாமலிருந்தது. மக்கள் நமது தர்மத்தின் சக்தியை அறியாமலிருந்தனர். நரேந்திரர் என்பவர் நிரீசுவர வாதியாகவே இருந்தார். அந்த நாட்களில் காளிகோயில் பூசாரியாக இருந்த ஒருவர், பயித்தியம் போல் பக்தி செய்து கொண்டிருந்த ஒருவர், 'கடவுள் இருக்கிறார். நான் காட்டுகிறேன்' என்றார். நூற்றுக் கணக்கான பேர்களின் இதயத்தில் ஞான தீபத்தை ஏற்றி வைத்தார். நரேந்திரர் உள்ளத்திலும் ஏற்றிவைத்தார். அந்த ஒளி உலகம் முழுதும் பரவியது. நரேந்திரர் விவேகானந்தர் ஆனார்.

ராமகிருஷ்ண பரமஹம்ஸர் பல சாதனைகள் செய்து தாயைப் பணிந்தார். பல கதைகள் கூறி ஞானத்தைப் போதித்தார். ஹிந்து, முஸ்லிம், கிறிஸ்து ஆகிய எல்லா மத கோட்பாடுகளையும் சாதனைகளையும் அனுஷ்டித்து எங்கும் நிறைந்திருப்பவன், எம்மதமும் கூறும் ஈசன் ஒருவனே என்பதைக் கண்டார்.

அவருடைய சாதனைகளும் வாழ்க்கை முறையும் அவர் கூறிய அறவுரைகளும், இன்றும் மங்காத் தீபச் சுடராக ஒளி வீசித் திகழ்கின்றன. அவற்றைப் படித்தும், கேட்டும் பாரத நாட்டில் நூற்றுக் கணக்கானவர் பயனடைந்து வருகின்றனர். அந்த மகான் பிறந்த நாள் மார்ச்சு 14-ம் தேதி. அந்த ஜயந்திக் கொண்டாட்டம் நாடெங்கும் நடைபெறுகிறது. கிண்டி காந்தி மண்டபத்திலும் விசேஷப் பிரார்த்தனைக் கூட்டம் 14-ந் தேதி மாலை நடைபெறும்.

அமரதீபமாக நின்று ஞான ஒளி வீசும் அந்த மகானின் அஞ்சலியிலே தமிழ் மக்கள் அனைவரும் கலந்துகொள்ளவேண்டுமென்று விரும்புகிறோம்.



புண்ணிய நன்னாளான மகாமக தினத்தில் தேச தேசத்து மக்களெல்லாம் கூடிக் கும்பகோணம் மகாமகக் குளத்தை ஜன சமுத்திரமாகச் செய்து விட்டனர். இந்த ஜன சமுத்திரத்துக்கு அன்னமிட்டு உபசரிக்கும் கைங்கர்யத்தைப் பலர் ஏற்றுப் பிரமாதமாக நிர்வகித்தனர். காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளின் திருவுள்ளப்படி, நமது ராஜ்யத்தைச் சேர்ந்த [illegible] கும்பகோணத்தில் நடத்திய விருந்தைப் படத்தில் காணலாம்.

## பட்ஜெட் ரகசியம்

இந்திய சர்க்காரும் இதர ராஜ்ய சர்க்கார்களும் பிரதி வருஷமும் எத்தனையோ தீர்க்க யோசனைக்குப் பிறகு பட்ஜெட்டைத் தயார் செய்து லோக சபையிலும், சட்ட சபைகளிலும் சமர்ப்பிக்கிறார்கள்.

பின்னரே வியாபாரிகளும், தொழிலதிபர்களும், பொது மக்களும் நடப்பு வருஷத்தில் வரவு செலவு விவரங்களைக் குறித்துத் திருப்தியோ அதிருப்தியோ அடைவார்கள். அது வரை பட்ஜெட் விவரங்கள் பத்திரமாகவும்,



பெப்ருவரி 20-ல் பொள்ளாச்சி ஒரே திருவிழாக் கோலத்துடன் விளங்கியது. அன்றைய தினம் ஒரு லட்சத்து ஐம்பத்து இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் செலவில் புதிதாகக் கட்டப்பட்ட நாச்சிமுத்துக் கவுண்டர் பிரசவ விடுதியையும், அவர் உருவச் சிலையையும் ஒரிசா கவர்னர் திரு பி. எஸ். குமாரசாமி ராஜா திறந்து வைத்தார். இந்தச் செலவைக் காலஞ்சென்ற நாச்சிமுத்துக் கவுண்டரின் குமாரர் திரு மகாலிங்கம் எம். எல். ஏ. யும், ஏ. பி. டி. ஸ்தாபனத்தாரும் வழங்கியிருக்கிறார்கள் என்பது பாராட்டுதற்குரிய செயலாகும். நாச்சிமுத்துக் கவுண்டர் மனைவி ஸ்ரீமதி ருக்மிணி அம்மாள் கொடுத்த இருபதினாயிரம் ரூபாய் நன்கொடையில் உருவாகிய விசேஷ வார்டைத் திரு வி. பி. சுப்பையா திறந்து வைத்தார். ஏ. பி. டி. கம்பெனி, கவுண்டர் அன்று கம்பெனி வழங்கிய நன்கொடையும், ஸ்தல அபிவிருத்தித் திட்டத்தின் மான்யமும் சேர்த்து சுமார் முப்பதினாயிரம் ரூபாய் செலவில் கட்டப்பட்ட ஜெனரல் வார்டைச் சுகாதார மந்திரி திரு ஏ. பி. ஷெட்டி திறந்து வைத்தார். இந்தத் திறப்பு விழா வைபவத்துக்கு ஸர் முத்தையா செட்டியார் தலைமை வகித்துச் சிறப்பித்தார். நிதி மந்திரி திரு சுப்பிரமணியம் வரவேற்புரை நிகழ்த்தினார்.

பொள்ளாச்சியில் புதிதாகக் கட்டப்பட்ட நாச்சிமுத்துக் கவுண்டர் பிரசவ விடுதிக் கட்டடத்தையும், விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்த தலைவர்களையும், முடிவில் நன்றியுரை கூறிய திரு மகாலிங்கம் எம். எல். ஏ. அவர்களையும் மேலே படத்தில் காணலாம். மேலே இருப்பது காலஞ்சென்ற திரு நாச்சிமுத்துக் கவுண்டர் அவர்களின் திருவுருவப் படம்.

பகிரங்கமாகாமலும், யாருமறியாமல் பரம ரகசியமாகக் காப்பாற்றப்படும்.

முன்கூட்டி பட்ஜெட் விவரங்கள் வெளியானால் அதனால் தேச நலனுக்கு எத்தனையோ விதமான குந்தகங்கள் விளையக்கூடும். அத்துடன் சர்க்காரின் அந்தஸ்துக்கும் ஹானி விளையும்.

இவ்வருஷத்திய மத்தியசர்க்கார் பட்ஜெட் ரகசியம் பம்பாயில் அம்பலமாகியிருப்பது கண்டு ஆச்சரியமடைகிறோம். பட்ஜெட் விவரங்கள் யாவும் 'ஸைக்ளோஸ்டைலி'ல் பிரதி எடுக்கப்பட்டு பம்பாய் மார்க்கெட்டில் விற்கப்பட்டதாகவும், அதன் காரணமாகச் சில கள்ள மார்க்கெட்காரர்கள் மில் துணிகளைப் பதுக்கி வைத்து விட்டார்களென்றும் செய்தி வெளியாகியிருக்கிறது.

இந்தியப் பிரதமர் நேரு இது பற்றி லோகசபையில் ஆச்சரியம் தெரிவித்திருப்பதுடன் இந்த வருஷத்திய பட்ஜெட்டின் தன்மை காரணமாக இதனால் பெரிய தீங்கு ஏதும் நேர்ந்து விடாது என்றும் அறிவித்திருக்கிறார்.

தேச நலனுக்குகந்த பல முன்னேற்றத் திட்டங்களையும், ஏற்பாடுகளையும் செய்து வரும் நமது சர்க்காரில் அநேக ரகசியங்களும் முன்கூட்டி வெளியிடக் கூடாத காரியங்களும் எவ்வளவோ இருக்கின்றன. அத்தகைய ரகசியங்கள் முன்னதாகவே வெளியாகி விட்டால் அதைவிட ஆபத்தான காரியம் வேறு இருக்க முடியாதல்லவா? இந்த முறை ரகசியம் வெளியானதினால் அதிகக் கேடு ஏற்படவில்லை என்பது உண்மையானாலும், பொதுவாக இதைத் தடுத்து நிறுத்த வேண்டும்.

இரகசியம் எப்படி வெளியாயிற்று என்பதைக் கண்டு பிடித்துக் குற்றவாளிக்குத்

# எடைக்கு எடை போடுங்கள்




ஐந்தாண்டுத் திட்டத்தில் தெற்குக்குப் போதிய பங்கு கிடைக்கவில்லை என்பது பொதுவான குறை.

தகுந்த தண்டனை கொடுக்கப் போவதாக நேருஜி சொல்லி யிருக்கிறார்.

இது மிகவும் அவசியமான நடவடிக்கை தான். ஆயினும் இம்மாதிரியான சம்பவம் இனி எப்போதுமே ஏற்படாமலிருக்கத் தான் முதலில் நடவடிக்கை எடுக்க வேண்டும். வெளியிலுள்ள குற்றவாளிகளைக் கண்டு பிடித்துத் தண்டனை அளிப்பது மட்டும் போதாது. சர்க்கார் பாதையில் எந்த இடத்திலும் ஓட்டை விழாமல் பார்த்துக் கொண்டால்தான் சர்க்கார் அந்தஸ்தும் தேசநலனும் பாதுகாக்கப்படும்.

## பயிற்சிக் கல்லூரி

"அறிவொளி வீசுபவர்கள் அதைப் பிறருக்கும் அள்ளி வழங்குவார்கள்" என்பது அறிஞர் பிளேட்டோவின் அரிய கருத்து. குழந்தைச் செல்வங்களின் அறியாமையாகிய இருளைப் போக்கி அறிவு ஒளி வீசச் செய்கிறவர்கள் பள்ளி ஆசிரியர்கள். இந்தப் பள்ளி ஆசிரியர்களைப் பயிற்றுவிக்கும் சென்னையிலுள்ள சைதாப் பேட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியின் நூற்றாண்டு விழா பெப்ருவரி 29-ந் தேதி, மார்ச் 1, 2 ஆகிய மூன்று தினங்களிலும் வெகு விமரிசையாக நடந்தேறியது.

நூற்றாண்டு விழா கொண்டாடப்பட்ட முதல் நாளன்று நிகழ்ச்சிகள் யாவும் நம் தமிழ் மொழியிலேயே நடந்தன. சென்னை முதன் மந்திரி திரு காமராஜ் நூற்றாண்டு விழாவைத் துவக்கி வைத்தார். கலாசாலைத் தலைவர் திரு பெருமாள் முதலியார் கல்லூரி அறிக்கையை வாசித்தளித்தார். தொடக்க விழாவுக்கு ஏராளமாக மக்கள் வந்து குழுமி யிருந்தனர்.

சென்னைக் கல்வி இலாகாத் தலைவர் திரு சுந்தரவடிவேலு நூற்றாண்டு விழா கல்விக் கண் காட்சியைத் திறந்து வைத்தார். 'ஆயிரம் தடவை கேட்பதை விட ஒரு தடவை கண்ணால் பார்ப்பது மேலானது' என்ற சீனப் பழமொழிக் கிணங்க, இக் கண் காட்சி அறிவூட்டும் சிறந்த கலைக் கண்காட்சியாகத் திகழ்ந்தது. இவ்வைபவத்தில் அண்ணாமலை சர்வ கலாசாலைத் தலைவர் திரு டி. எம். நாராயணசாமி பிள்ளை மாடல் பள்ளி மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கினார். விழாவில் உயர்பள்ளி மாணவர்களின் கலை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

இரண்டாம் நாள் நிகழ்ச்சி சென்னை ராஜ்யக் கல்வி மந்திரி திரு சி. சுப்பிரமணியம் அவர்களின் தலைமையில் ஆரம்பமாகியது. நூற்றாண்டு விழாச் சொற்

பொழிலைச் சென்னைப் பல்கலைக் கழகத் தலைவர் திரு லக்ஷ்மணசாமி முதலியார் நிகழ்த்துகையில், ஆசிரியருக்கு இருக்க வேண்டிய பண்புகளைப் பற்றிக் குறிப்பிட்டார். நூற்றாண்டு விழா நினைவை யொட்டிச் சர்க்கார் ஆயிரம் ரூபாய் பரிசு வழங்க முன் வந்திருக்கும் நற்செய்தியை நிதி மந்திரி அறிவித்தார்.

கடைசி தினத்தன்று நடந்த விளையாட்டு நிகழ்ச்சிகளை விவசாய மந்திரி திரு பக்தவத்ஸலம் ஆரம்பித்து வைத்தார். விளையாட்டுப் போட்டியில் பங்கெடுத்துக் கொண்டவர்களுக்கு ராமநாதபுரம் ராஜா பரிசுகள் வழங்கினர்.

சைதாப்பேட்டை ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி நூறு ஆண்டு காலமாக அரிய சேவை செய்து வந்திருக்கிறது. இந்தக் கல்லூரி அகில உலகப் புகழ் பெற்ற உப ஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன், காலஞ்சென்ற வி. எஸ். சீனிவாச சாஸ்திரியார், ஸர் சாமுவேல் ரங்கநாதன் முதலியவர்களை மாணவர்களாகப் பெற்ற பெருமையை அடைந்திருக்கிறது என்றாலே அதன் சிறப்பு தெள்ளத் தெளிய விளங்கு மல்லவா? இக்கல்லூரி இன்னும் வளர்ந்து, வருங்கால பாரதச் செல்வங்களுக்கு அறிவூட்டும் ஆசிரியர்களை மேலும் வழங்கி வரவேண்டும் என்பதே நமது விருப்பம்.

முதன்முறையாக சென்னை நகரின் சிறந்த தியேட்டர்

# மிட்லண்டில்

# மார்ச் 10உ முதல் தென்னாடெங்கும்



நடேஷ் ஆர்ட் பிக்சர்ஸ்




# ஆசை




| | |
|---|---|
| * ஜெமினி கணேசன் | * பத்மினி |
| * வி. நாகையா | * பி. சாந்தகுமாரி |
| * பி. எஸ். வீரப்பா | * ராஜசுலோசனா |
| * டி. பாலசுப்ரமண்யம் | * எம். ஆர். சந்தானலக்ஷ்மி |
| * என். எஸ். கிருஷ்ணன் | * டி. ஏ. மதுரம் |

* பேபி பார்வதி ஆகியோர் நடிப்பது

வசனம்: இளங்கோவன் ● சங்கீதம்: டி. ஆர். பாப்பா

ஸ்டுடியோ: வாஹினி & நியூடோன்




செங்கல்பட்டு ரயில்வே ஸ்டேஷனைத் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் வந்தடைய இன்னும் நேரம் இருந்தது. நான் பெட்டியையும் படுக்கையையும் விட்டு அதன்மேல் உட்கார்ந்து கொண்டேன். பிளாட்பாரத்தில் கும்பல் அசாத்தியமாக இருந்தது.

"ஸார்! தயவுசெய்து இந்தச் சாமான்களைக் கொஞ்சம் பார்த்துக் கொள்கிறீர்களா? போய்க் காப்பி சாப்பிட்டு விட்டு வந்து விடுகிறேன்" என்ற குரலைக் கேட்டுத் திரும்பினேன்.

கதர் ஜிப்பாவும், வேஷ்டியும் தரித்து மூக்குக்கண்ணாடியும் மூகமுமாகச் சுமார் மூப்பத்தைந்து வயது மதிக்கத் தக்க மனிதர் என்னெதிரே நின்றுகொண் டிருந்தார். அவர் கைகளில் ஒரு சிறு கைப் பெட்டியும் பையும் இருந்தன.

"ஆகா, தாராளமாய்ப் போய் வாருங்கள்" என்றேன்.

ஐந்து நிமிட நேரத்தில் அவர் திரும்பி வந்து உட்கார்ந்து கொண்டார்.

"நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டேன்.

"நான் மதுரை போகிறேன். நீங்கள்?" என்று என்னைக் கேட்டார் அவர்.

"நானும் தான்" என்றேன்.

"அப்போது, நல்ல துணையாயிற்று!" என்றார். அதைத் தொடர்ந்து, "இன்று ரொம்பக் கூட்டம் இருக்கும் போல் இருக்கிறதே" என்றார்.

"ஆமாம், கல்யாணக் காலம் அல்லவா? கூட்டமாகத்தான் இருக்கும். வண்டியில் எப்படி இடம் கிடைக்கப் போகிறதோ? இங்கேயே இவ்வளவு கூட்டம் இருக்கிறதே! சென்னையில் எவ்வளவு கூட்டம் ஏறியிருக்கிறதோ?" என்றேன்.

சிறிது நேரத்துக் கெல்லாம் வண்டி வந்து விட்டது. பிளாட்பாரத்திலிருந்த பிரயாணிகளிடையே பெரும் பரபரப்பு. பெட்டியையும் மற்றச் சாமான்களையும் தூக்கிக் கொண்டு, மூண்டி யடித்து எப்படியோ ஏறினார்கள்.

நானும் என் புது நண்பரும் எஞ்ஜினிலிருந்து மறு கோடி வரை ஒரு தடவை இடம் தேடினோம். ஆனால் கூட்டம் ஏகமாக இருந்தது. கதவையே திறக்க முடியாமல் கதவடியில் சாமான்களைப் போட்டுக் கொண்டு பிரயாணிகள் நின்று கொண்டிருந்தார்கள்.

ஒரு பெட்டியில் மட்டும் கொஞ்சம் இடம் இருந்தது. ஆனால் அதில் ஏறிக் கொண்டிருந்தவர்கள் — கல்யாண கோஷ்டியார், கதவைத் திறக்க மறுத்தார்கள்.

ஆனால் என் புது நண்பர் விடவில்லை. எப்படியோ சமத்காரமாய்க் கதவைத் திறக்கும்படி செய்து விட்டார்.

இருவரும் இருந்த இடத்தில் இடம் செய்து கொண்டு உட்கார்ந்து கொண்டோம். சிலுசிலுவென்று வீசிய காற்று பெண்கள் கூந்தலில் சூட்டிக் கொண்டிருந்த மலரின் நறுமணத்தையும் சுமந்து வந்து எங்கள்மேல் வீசிற்று. என்ன இனிய வாசனை! மூக்கைத் துளைக்கும் ஜாதி மல்லிகையின் மணம்! ஒவ்வொரு பெண்ணின் கூந்தலிலும் ஒரு செண்டு புஷ்பம். வெள்ளை வெளேரென்று பளபளத்த ஜாதிமல்லிகை நன்றாக மலர்ந்து தன் சுகந்தத்தைப் பரப்பிக் கொண்டிருந்தது.

அதன் இனிய மணம் எனக்கு என் ஆருயிர் மனைவியின் நினைவை ஊட்டி விட்டது. அந்த இன்ப நினைவில் லயித்து மெய்ம்மறந்து சுவர்க்க அநுபவத்தை அநுபவிக்கலானேன். அதோ, என்னெதிரே என் கண்மணி கிரிஜா! முத்துப் பற்கள் தெரிய, புன்னகை பூத்த முகத்துடன், கருமையான கூந்தலில் பால் போன்ற வெண்மையான மல்லிகை மலர்கள் இதழ் விரித்து சுகந்தம் வீச, ஒயிலாய் என்னை வரவேற்கிறாள்! அவளுடன் நான் கொஞ்சிக் கொண்டிருக்கிறேன். அவள் பேசும் பேச்சுக்களைக் கேட்டு மகிழ்கிறேன். அவள் தரும் சிற்றுண்டியை மகிழ்வுடன் உண்கிறேன்; அவளுடன் கடற்கரை மணலில்

உட்கார்ந்து நேரம் போவதே தெரியாமல் அலைகளைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

இவையெல்லாம் என் மனக்கண்ணிலே தோன்றி நான் என்னை மறந்த நிலையில் இருந்தபொழுது, என் நண்பர் கனைத்து விட்டார். "அப்பப்பா! என்ன வாசனை! என்ன வாசனை! இவ்வளவு புஷ்பமா! ஒவ்வொருவரும் வைத்துக் கொண்டு மனுஷனைத் திணற அடிப்பார்கள்! பொறுக்க முடியவில்லையே! மூக்கைத் துளைக்கிறதே" என்று முகத்தைச் சுளித்துக் கொண்டார்.

"என்ன ஸார்? என்ன?" என்று ஒன்றும் புரியாமல் கேட்டேன்.

"ஸார்! வாருங்கள் வேறு வண்டிக்குப் போகலாம். மூக்கைத் துளைக்கும் இந்த மல்லிகை மணத்தை என்னால் பொறுக்க முடியவில்லை!" என்றார்.



"என்ன ஸார் எவ்வளவு இனிய வாசனை? மனத்தைக் கவரும் வாசம்! இதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லையென்கிறீர்களே! எனக்கு ஆச்சரியமாக இருக்கிறதே!" என்றேன்.

"வாசனை இனிமையாகத்தான் இருக்கிறது...ஆனால் என்னால் அதைத் தாங்க முடியவில்லை. வாருங்கள் வேறு பெட்டிக்குப் போகலாம்" என்று கைப்பெட்டியைத் தூக்கிக் கொண்டு எழுந்தார்.

"ஸார், வேண்டாம். இந்த நெரிசலில் வேறு இடம் கிடைக்காது. இங்கு ஏதோ கொஞ்சம் சௌகரியமாய் இருக்கிறது. இவ்வளவு கஷ்டப்பட்டு ஏறிவிட்டு இறங்கிப் போவதா?" என்றேன். அதற்குள் வண்டியும் புறப்பட்டுவிடவே அவர் வேறு வழியின்றி உட்கார்ந்து கொண்டார்.

வண்டி வேகமாகச் செல்லச் செல்லக் காற்று குளுமையாக வீசியது; வண்டியிலிருந்த பெண்மணிகள் சூட்டிக் கொண்டிருந்த மல்லிகையின் மணத்தை மேலும் மேலும் வண்டி முழுதும் பரப்பிக் கொண்டிருந்தது.

என் நண்பர் கண்களை மூடிக் கொண்டிருந்தார். நான் ஜாதி மல்லிகையின் மணத்தில் லயித்து விட்டேன். என் மனம் இன்ப நினைவில் ஆழ்ந்து விட்டது.

என் அருமை மனைவி கிரிஜாவுக்குத்தான் ஜாதி மல்லிகை என்றால் எத்தனை ஆசை! அதனுடைய மென்மையான சுகந்தத்தில் அவள் உயிரையே வைத்திருந்தாள்.

விவாகம் ஆகிக் குடித்தனம் ஆரம்பித்த அன்றே நான் அவளுக்காகக் கடையிலிருந்து ஜாதி மல்லிகைச் சரம் வாங்கிச் சென்றேன். அவள் அதைப் பார்த்து விட்டு முகம் மலர, "எனக்கு ஜாதி மல்லிகை என்றால் உயிர். அது தெரிந்து வாங்கிக் கொண்டு வந்திருக்கிறீர்களே!" என்றாள்.

"அப்படியா? எனக்கும் ஜாதி மல்லிகை என்றால் உயிர். 'புஷ்பேஷு ஜாதி' என்று தெரியாமலா பெரியவர்கள் கூறியிருக்கிறார்கள்? நம் இருவருக்கும் இவ் விஷயத்தில் எப்படி ஒற்றுமையோ, அதே போல் எல்லாவற்றிலும் ஒற்றுமையாக இருக்க வேண்டும்!" என்றேன்.

அதே போல் அவளும் நானும் எல்லாவற்றிலும் ஒற்றுமையாக, ஒருமை மனத்துடன் வாழ்ந்து வந்தோம். நான் என்ன எண்ணினேனோ, அதையே தான் அவளும் எண்ணினாள்.

ஆனால் எங்கள் இன்பத்தைக் காணத் தெய்வத்துக்குப் பொறுக்கவில்லை. காலனை அனுப்பி என் அருமை மனைவியை, கிடைத்தற்கரிய பொக்கிஷமாகத் திகழ்ந்த கிரிஜாவைக் கவர்ந்து சென்று விட்டது.

நான் கத்தினேன், கதறினேன். என் இதயம் ரத்தக் கண்ணீர் வடித்தது. என் வாழ்க்கையே சூன்யமாகி விட்டது. அவள் அருமையுடன் வளர்த்த மல்லிகை கூட அவள் பிரிவைத் தாளமாட்டாமல் வாடி வதங்கி விட்டது. இருந்தாலும் மன ஆறுதலுக்காக நான் என் அருமை கிரிஜாவின் புகைப்படத்தைப் பெரிய அளவில் செய்து நடுக் கூடத்தில் மாட்டித் தினமும் சாயங்கிரம் ஜாதி மல்லிகைச் சரம் வாங்கி அணிவித்து மகிழ்வேன்.

என் காசி மல்லிகையின் மணத்தை நுகரும் போதெல்லாம், அதுவும் ஜாதி மல்லிகையின் மணத்தை நுகரும்போதெல்லாம், கிரிஜா மறைந்து விட்டாள், என்னை விட்டு நிரந்தரமாகப் பிரிந்து சென்று

விட்டான் என்ற உணர்வே எனக்கு ஏற்படுவதில்லை.

மற்றச் சமயங்களில் கிரிஜாவின் பிரிவை நினைந்து வருந்தும் நான் மல்லிகையின் மணத்தை நுகர்ந்த மறு கணத்திலே என் துக்கத்தை மறந்து அவள் நேரே இருப்பது போன்ற உணர்ச்சியைப் பெறுவேன்.

அன்றும் ரயில் வண்டியில் ஏறியதும் ஜாதி மல்லிகையின் மணம் வண்டி முழுவதும் வீசவே என் மனம் தன்னை மறந்து கிரிஜாவின் இன்ப நினைவில் குதூகலத்துடன் ஆழ்ந்து விட்டது. கிரிஜா என்னுடன் பேசினாள், கொஞ்சினாள், விளையாடினாள்.



ரயில் வண்டி குலுக்கலுடன் விழுப்புரம் ஜங்ஷனில் நின்றது. என் கற்பனை மறைந்து, நான் ரயில் வண்டியில் இருப்பதையும் என் நண்பர் எதிரே உட்கார்ந்திருப்பதையும் உணர்ந்தேன். அவருடைய முக பாவத்திலிருந்து அவர் மிகவும் வேதனையால் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார் என்று தெரிந்தது. அவர் ஏன் இந்த இனிமையான மணத்தைச் சகிக்க முடியாமல் திணறுகிறார் என்பது விசித்திரமான புதிராக இருந்தது.

"ஏன், ஸார் இப்படிச் சோர்வுற்று விட்டீர்கள்?" என்று கேட்டேன்.

"என்னால் இந்த மல்லிகையின் மணத்தைப் பொறுக்க முடியவில்லை. இது காலஞ்சென்ற என் மனைவி செல்லத்தின் நினைவைக் கிளறிவிட்டு என்னை வாட்டி வதைக்கிறது" என்றார்.

சிறிது நேரம் எங்களிடையே மௌனம் நிலவியது. மேற்கொண்டு என்ன பேசுவது என்று புரியவில்லை. அவரே சிறிது நேரம் கழித்துப் பேச ஆரம்பித்தார்:

"சார்! செல்லத்துக்கு மல்லிகைப் புஷ்பம் என்றால் உயிர். தினமும் அவள் தலை நிறைய மல்லிகைப் பூவைத்தான் சூட்டிக் கொள்வாள். ஒருநாள் நான் கடையில் கதம்பம் அழகாகத் தொடுத்திருந்ததைக் கண்டு அவளுடைய கூந்தலை அது அழகு படுத்தும் என்று வாங்கிப் போனேன்.

'ஊஹூம்...எனக்குக் கதம்பம் வேண்டாம். இதில் ஒரு வாசனையும் இல்லை.

மல்லிகை ஒன்றைத்தான் நான் சூட்டிக் கொள்வேன். வேறெதுவும் எனக்கு வேண்டாம். மல்லிகையின் மணத்துக்கு வேறெதுவும் ஈடாகாது' என்றாள்.

நான் உடனே கடைத் தெருவுக்குப் போய் மல்லிகைப் பூ வாங்கி வந்து அவளுடைய கூந்தலில் அதைச் சூட்டியபின் தான் அவளுடைய முகம் மலர்ந்தது.

அன்றிலிருந்து நான் தவறாமல் மல்லிகையையே வாங்கிச் செல்வேன். அவளும் நானும் ஓருயிர் ஈருடலென வாழ்ந்தோம்.

ஒரு நாள் அவள் இலேசாகத் தலையை வலிக்கிறதென்று சொல்லிப் படுத்தவள் படுத்த படுக்கையானாள். உடல் நலம் குன்றிய அந்தச் சமயத்திலும் கூந்தலை வாரி மல்லிகை மலர் சூட ஒரு நாள் கூட அவள் தவறியதில்லை. கடைசியில் அவள் அந்த நோய்க்குப் பலியானாள். அவள் மறைந்த அன்று கூட அவள் என்னைத் தினம் வாங்கும் அளவை விட அதிகமாக மலர் வாங்கி வரச் சொல்லி அதைத் தலையில் சூட்டிக் கொண்டாள். அதை நினைக்கும் போதெல்லாம் என் மனம் அந்தச் சம்பவத்தைத் தன்னையறியாமல் நினைக்கிறது. என் அருமை மனைவியின் நினைவு வந்து என்னை வதைக்கிறது. அவளுடைய பிரிவின் தாபத்தை அதிகப்படுத்துகிறது. அதனால் மல்லிகை மலரின் மணத்தைக் கண்டே நான் அஞ்சுகிறேன். மல்லிகை மலர் இந்தப் பெட்டியிலிருந்து வேறு பெட்டிக்குப் போக வேண்டுமென்று நான் நினைப்பதற்கும் காரணம் அதுவே தான்!" என்றார்.

ரயில் விருத்தாசலம் ஜங்ஷனில் நின்றது. கல்யாண கோஷ்டியார் அங்கு இறங்கி விட்டனர்.

"அப்பாடா!" என்று பெருமூச்சு விட்டார் என் நண்பர்.

அவருடைய கதையைக் கேட்டு என் மனம் ஆச்சரியமடைந்தது.

மனிதனுடைய மனம்தான் எவ்வளவு விசித்திரமானது! எந்தக் காரணத்துக்காக நான் மல்லிகையின் மணத்தில் என்னை மறந்து இன்ப நினைவில் ஆழ்ந்து விடுகிறேனோ, அதே காரணத்துக்காக இன்னொருவர் அதே மல்லிகை பரப்பிய இனிய மணத்தைக் கண்டு பயப்படுகிறார்; துன்ப நினைவில் ஆழ்ந்து விடுகிறார்!

# பனித்துளி

"மாப்பிள்ளை ஒருவர் தந்தை வீட்டுக்குச் சென்றிருந்த தம் மனைவியைத் திருப்பி அனுப்பும்படி பல தடவை கேட்டும் மாமனார் இசையவில்லை. இதன் காரணமாக மாப்பிள்ளை உபவாசம் தொடங்கியிருக்கிறார்." —செய்தி



அட பாவமே! ஓட்டலில் சாப்பிடுவது தானே? இதற்காகப் பட்டினியா கிடக்க வேண்டும்?

★

"'சாட்-பெட்' பிரதேசத்துக்குள் அத்துமீறிப் புகுந்த பாகிஸ்தான் படைகளை உடனே விரட்டி அடித்து அனுப்பி விட்டார்கள்." —செய்தி

'சட்-புட்'டென்று தீர்த்து விட்டார்களே!

★

"சுதந்திரப் போராட்டத்தின் நாற்றாண்டு விழாவைச் சிறந்த முறையில் கொண்டாடுவதற்கு என்ன வழி!" என்று இந்திய சர்க்கார் யோசித்து வருகிறது.
—செய்தி

ஏன்? சிறந்த முறையில் கொண்டாடி விடுவதுதான் அதற்கு வழி.

"பரமக்குடியில் ஒரு தோட்டத்தில் காய்த்த தேங்காய் ஒன்றை உடைத்துப் பார்த்ததில் உள்ளே ஒரே தேங்காய்க்குள் இரண்டு தேங்காய்கள் இருந்தன."

— அதிசயச் செய்தி

இனி இத்தகைய காய்களே காய்க்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்து கொண்டு மேற்படி தோட்டக்காரர் பிள்ளையாருக்கு ஒரு இரட்டைத் தேங்காய் உடைக்கலாம்!

★

"திருமங்கலத்தில் நடைபெற்ற கறிகாய்க் காட்சியில் நூறு பவுண்டு எடையுள்ள மிகப் பெரிய தோற்றமும் கனமும்



கொண்ட முழுப் பூசணிக்காய்க்குப் பரிசு கொடுக்கப்பட்டது. இதை யாராலும் தூக்கிச் செல்ல முடியாது." —செய்தி.

சோற்றிலும் மறைக்க முடியாது!




நேயர்களைச் சில ஆண்டுகளுக்கு முன்னால் அதாவது 1947 லிருந்து 49 வரையில் ஜம்மு—காஷ்மீரில் நடந்த பயங்கர நிகழ்ச்சிகளை நினைத்துப் பார்க்கும்படி கேட்டுக் கொள்கிறேன். அந்த நாளில் தினப் பத்திரிகைகளில் அடிபட்ட பல ஊர்களின் பெயர்களை அதற்குள் மறந்திருக்க முடியாது. நௌஷாரா, ஜம்கட், ரஜௌரி, பூஞ்ச் முதலிய நகரங்களின் பெயர்கள் மறந்துவிடக் கூடிய பெயர்களா !

பாரத நாடு சுதந்திரம் பெற்றவுடன் பெற்ற சுதந்திரத்தைப் பேணிப் பாதுகாக்க முடியுமா என்று மேலே சொன்ன இடங்களில் பரீட்சை நடந்தது. பயங்கரச் சோதனை நடந்தது. இந்தச் சோதனைகளில் இந்தியாவின் இரத்தம் சிந்தப்பட்டது. சுதந்திரத் தாய் எத்தனையோ உயிர்களைப் பலி வாங்கிக் கொண்டாள். காஷ்மீரத்திலிருந்து கன்யாகுமரி வரையில் உள்ள எல்லா நாட்டு வீரர்களும் இமயமலையின் உச்சியிலும், இமயமலையின் அடிவாரத்திலும் இரவு பகல் இருபத்திநாலு மணி நேரமும் இரண்டு ஆண்டுகள் போரில் ஈடுபட்டு அபாரமான காரியங்களைச் செய்தார்கள்.

பாகிஸ்தான் ஆக்கிரமித்துக் கொண்டிருந்த பாரத பூமியை மீட்பதற்காகத் தங்கள் இன்னுயிரைத் தியாகம் செய்தார்கள். இந்துக்களும், சீக்கியர்களும், முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும் ஒன்றுபட்டு நின்று பாரதத்தின் சுதந்திரத்தைக் காப்பாற்றினார்கள். இன்றைய சுதந்திர பாரதத்தின் குருக்ஷேத்திரமாக ஜம்மு — காஷ்மீர் விளங்கியது. அதனால் ஜம்முவும் காஷ்மீரமும் நாம் போற்றி வணங்கும் புண்ணிய பூமியாக மாறிவிட்டது.

இந்த யுத்தத்திலே ஈடுபட்ட எண்ணற்ற சிப்பாய்களில் ஒருவர் அமர்நாத். அவர் பத்திரிகையாளர்களின் ஜீப் வண்டியைக் கரடுமுரடான காட்டுப் பாதையில் ஓட்டிக் கொண்டு வரும்போதே தம்முடைய வீரம் நிறைந்த சோகக் கதையைச் சொன்னார். ஜம்முவில் தங்கியிருந்த நாலு நாட்களும் இந்தப் புண்ணிய பூமியில் யாத்திரை செய்து உயிருடன் திரும்புவதற்குக் காரணமாயிருந்தவர் அமர்நாத் தான்.

இமய மலையின் செங்குத்தான உயரத்திலும், பயங்கரமான பள்ளத்திலும் உள்ள மிக மோசமான 'கச்சா' சாலைகளில் அவர் அனாயாசமாக வண்டியை ஓட்டினார். அப்படிப்பட்ட இடங்களில் பெண்மணிகள் தலையில் சூடிக் கொள்வார்களே கொண்டை ஊசி, அது போன்ற குறுகலான வளைவுகள் அடிக்கடி குறுக்கிட்டன. அந்த வளைவுகளில் மந்திரக்காரன் வித்தை காண்பிப்பது போல் லாகவமாக ஜீப் வண்டியை ஓட்டி வந்தார். அமர்நாத் கற்பனை செய்து காண முடியாத அபாயமான இடங்களில் ஜீப் வண்டியை ஓட்டும்போது கூட அவருடைய பலம் பொருந்திய கைகள் மிகவும் உறுதியாக இருந்தன. அவர் சிரித்த முகத்துடன் உற்சாகமாகவே காணப்பட்டார்.

இந்தக் காட்டு வழிகளில் அவர் எத்தனையோ உயர்தர ராணுவ அதிகாரிகளுக்கெல்லாம்

# அமர்நாத் சொன்ன கதை

ஜீப் வண்டியை ஓட்டியிருக்கிறார். எத்தனையோ மூதன் மந்திரிகளை எல்லாம் தன்னுடைய ஜீப் வண்டியில் அழைத்துச் சென்றிருக்கிறார். போர் நடந்து கொண்டிருந்த காலத்தில் எத்தனையோ அபாயமான சமயங்களில் எல்லாம் அவர் அஞ்சாமல் இந்த வழிகளில் வண்டி யோட்டியிருக்கிறார். இவரைப்போன்ற ஆயிரக் கணக்கான சிப்பாய்களின் சாகஸங்களால்தான் இன்றைய தினம் நாம் ஜம்மூ—காஷ்மீரில் வெற்றிக் கொடி பிடிக்க முடிந்தது. அவர் சொன்ன கதையைக் கேளுங்கள் :

இந்தியா — பாகிஸ்தான் பிரிவினையின் போது அமர்நாத் மேற்குப் பாகிஸ்தானில் ஒரு ராணுவ முகாமில் இருந்தார். 1947-ஆண்டில் அவர் நியாயமாக இந்தியாவுக்கு வந்திருக்க வேண்டியவர். அதற்குள் பாகிஸ்தான் ஜம்மூ-காஷ்மீர் மீது போர் தொடுக்கவே அமர்நாத் தொண்டாற்றி வந்த ராணுவ முகாமில் இருந்த வீரர்கள் கைது செய்யப்பட்டனர். அவர்களுடன் அமர்நாத்தும் கைது செய்யப்பட்டார். பாகிஸ்தான் ராணுவச் சிறையில் பல கஷ்டங்களை அனுபவித்தார். பல நாட்கள் பட்டினியும் கிடந்தார். ஒரு நாள் பாகிஸ்தானுக்கு டிமிக்கி கொடுத்துவிட்டு அவர்கள் சிறையிலிருந்து தப்பி வந்து விட்டார். ஜம்மூவில் இருந்த இந்திய ராணுவ முகாமில் வந்து சேர்ந்து விட்டார்.

அமர்நாத்துடன் அவர் குடும்பத்தைச் சேர்ந்த பத்துப் பேர்களையும் பாகிஸ்தான் வீரர்கள் கைது செய்திருந்தார்களாம். அங்கிருந்து தப்பி வரும்போது பத்துப் பேருடனும் அமர்நாத் வந்தார். ஆனால் வழியிலேயே ஐந்து பேர்கள் செத்து மடிந்து விட்டனர். அப்படித் தப்பியவர்களில் அமர்நாத் மட்டும் மீண்டும் ராணுவத்தில் சேர்ந்து தொண்டாற்ற முற்பட்டார். மற்றவர்கள் பம்பாய்க்குச் சென்று விட்டனர். அவர்களில் ஒருவர் இப்பொழுது பம்பாய் நகரில் டாக்ஸி ஓட்டிப் பிழைப்பதாகச் சொன்னார் அமர்நாத்.

இன்னும் இரண்டு ஆண்டுகளில் அமர்நாத் ராணுவ உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெறப் போகிறார். எத்தனையோ அற்புதமான சாகஸங்களை நடத்திய அமர்நாத் தம்முடைய கடைசி வாழ்க்கையைப் பம்பாயில் டாக்ஸி ஓட்டித்தான்



கழிக்கப் போவதாகச் சொன்னர். காட்டிலும் மலையிலும் அபாரமான சாமர்த்தியத்துடன் ஜீப் வண்டிகள் ஓட்டி இந்தியாவின் சுதந்திரத்தைப் பாதுகாக்கச் சேவை செய்த அமர்நாத்தின் வாழ்க்கை கடைசியில் டாக்ஸி ஓட்டுவதில் போய் முடிவதை நினைக்கும்போது வருத்தப்படாமல் இருக்க முடியவில்லை. ஆனாலும் அவருடைய உற்சாகமும், சுறுசுறுப்பும், தன்னம்பிக்கையும் மறக்க முடியாதவை.

## நௌஷாரா நினைவுச் சின்னம்

அமர்நாத் ஜீப் வண்டியை ஓட்டும்போது நௌஷாரா என்ன, யமலோகத்துக்குக் கூடப் பயப்படாமல் போய்த் திரும்பி வந்து விடலாம். ஆகையால் இந்த அபாயமான சாலைகளினூடே, கரணம் தப்பினல் மரணம் என்று சொல்லக்கூடிய பாதைகள் வழியே, தைரியமாக நௌஷாராவுக்குச் செல்வோம். ஜீப் வண்டிகள் சென்று கொண்டிருக்கும் போதே பயங்கரமான சத்தம் கேட்டது. மரங்கள் பேயாட்டம் ஆடின. அடுத்த கணம் புயல் வீசத் தொடங்கிவிட்டது. காற்றுடன் தூசியும் கலந்து வீசத்தொடங்கிவிட்டது. எதிரில் இருக்கும் பொருள்கள் ஒன்றுமே தெரியவில்லை. நெருப்பு ஜ்வாலை சூழ்ந்து கொண்டது போல் இருந்தது தூசிப் புயல். மூச்சுத் திணற ஆரம்பித்து விட்டது. இத்தனைக்கும் மத்தியில் எப்படித்தான் வழியைத் தெரிந்துகொண்டு ஜீப் வண்டியை ஓட்டினர்களோ, யாருடைய புண்ணிய பலமோ; யாருக்கும் எத்தவித ஆபத்தும் இல்லாமல் நௌஷாரா ராணுவ உயர்தர அதிகாரிகள் உணவு விடுதிக்கு வந்து சேர்ந்து விட்டோம். உணவு விடுதிக்குள் புகுந்து அதன் கதவை அடைத்தவுடன்தான் நிம்மதியாக மூச்சுவிட முடிந்தது.

நௌஷாரா முக்கியமான ராணுவ கேந்திரம். அங்குதான் மேஜர் ஜெனரல் ஆத்ம சிங் தலைமையில் வீரப் போர் புரிந்த பட்டாளம் முகாம் போட்டிருந்தது. அந்த முகாமில் இருந்த வீரர்கள் பலரும், ஆத்மசிங்கும் இந்திய நாட்டுக்காகத் தங்கள் உயிரையே தியாகம் செய்து உத்தமத் தியாகிகளாக உயர்ந்தவர்கள். அந்த வீரர்களின் நினைவை அழியாமல் காப்பாற்றுவதற்காக நௌஷாராவில் ஒரு ஞாபகார்த்த ஸ்தூபி எழுப்பப்பட்டிருக்கிறது. அந்த ஸ்தூபிக்கு அருகில் சென்று பாரத நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாத்த வீரர்களுக்கு வணக்கம் செலுத்தி விட்டு அங்கிருந்து ஜம்கட்டை நோக்கிப் புறப்பட்டோம்.

வழியில் தெரிந்த குன்றுகளை யெல்லாம் காட்டி, "இந்தக் குன்றுகளைப் பாருங்கள்!" என்றார் சிப்பாய் அமர்நாத்.

"பார்த்தோம்" என்றோம்.

"இந்தக் குன்றுகள் பல தடவை எதிரிகளால் பிடித்துக் கொள்ளப்பட்ட குன்றுகள். இவைகளைத் திருப்பி மீட்பதற்கு எத்தனை பேர் தங்கள் உயிரை விட்டிருப்பார்கள் தெரியுமா!" என்று உணர்ச்சியுடன் கேட்டார் அமர்நாத்.

அவர் கூறுவது ஒன்றும் மிகையல்ல என்பதை அந்தக் குன்றுகளில் பீரங்கிக் குண்டுகள் பட்டுச் சிதைந்து கிடக்கும் கோரக் காட்சிகள் சாட்சி கூறிக் கொண்டிருந்தன.

வழியில் பல கிராமங்கள் மனிதர்களே இல்லாமல் காலியாகக் கிடந்த பரிதாபத்தைப் பார்த்தோம். அந்தக் கிராமங்களுக்கு அப்பால் ஏகாந்தமான இடத்தில் துர்க்கை அம்மனின் சிலை ஒன்று தெரிந்தது.

"அம்மா துர்க்காதேவி! இங்கு நடந்த கோரங்களை யெல்லாம் பார்த்துத்தான் நீ கல்லாகி விட்டாயா! இல்லை; உன் உருவத்தைப் போலவே உன் இருதயமும் கல்லாகி இருந்ததா!" என்று கேட்க வேண்டும் போலிருக்கிறது என்றார் எங்களுடன் வந்த ஒரு பத்திரிகையாளர்.

"இல்லை; அந்த அம்மனின் அருளினல் தான் இந்த மட்டுமாவது யுத்தம் முடிந்தது" என்றார் அமர்நாத். அப்பொழுது அவர் குரலில் யுத்தத்தின் கொடுமையும் சமாதானத்தின் சாந்தமும் கலந்து தொனித்தன.

இந்தக் கோவிலுக்கும் அப்பால் இன்னும் சில கிராமங்கள் தென்பட்டன. இந்தக் கிராமங்களில் மக்கள் வசித்து வருகின்றனர். மேளதாளத்துடன் கல்யாணமும் செய்து கொண்டு வாழுகின்றனர். ஆமாம், நாங்கள் சென்று கொண்டிருந்த போது மேள தாளத்துடன் சென்ற ஒரு கலியாண ஊர்வலத்தைப் பார்த்தோம். எப்படித்தான் இந்த இடத்தில் அவர்களால் வாழ முடிகிறதோ! இந்தக் கிராமத்தை நினைத்து விட்டு நம்முடைய ஊர்களையும் நினைத்தால் நாம் உண்மையிலேயே புராண இதிகாசங்களில் வர்ணிக்கப்படும் சொர்க்கத்தில் இருப்பதாகவே மகிழலாம்.

## பிரிகேடியர் உஸ்மான்

ஜம்மு காஷ்மீர் யுத்தத்தில் மிகக் கடுமையான போர் நடந்த இடம் ஜம்கட். பாகிஸ்தானைச் சேர்ந்த பீர்பூர், கோட்லி என்னும் இடங்களில் இருந்து வரும் சாலைகள் ஜம்கட்டில் வந்து சேருகின்றன. ஜம்கட்டுக்கு இந்தியாவில் இருந்து வருவதற்குச் சாலை வசதியே கிடையாது. ஆனல் பாகிஸ்தானிலிருந்து இங்கு தாராளமாக வரலாம். போர்த் தளவாடங்களையும் போர் வீரர்களுக்கு உணவு வசதிகளையும் போர் முனை வரையில் கொண்டு வந்து கொடுக்கலாம். அதனல் பாகிஸ்தான் கை இங்கு ஓங்கி நின்றது. ஜம்கட் பயங்கரமான யுத்த பூமியாக இருந்தது.

ஜம்கட்டைப் பாகிஸ்தானிகள் கைப்பற்றி விட்டனர். அவர்களிடமிருந்து மூன்று முறை மீட்டும் மீண்டும் ஜம்கட் பாகிஸ்தான் வசமாகி விட்டது. ஜம்கட்டை மீட்காவிட்டால் ஜம்மு-காஷ்மீரைக் காப்பாற்ற முடியாது. அவ்வளவு முக்கியமான இடம் ஜம்கட். ஆகவே ஜம்கட்டை மீட்கும் முயற்சியில் பிரிகேடியர் உஸ்மான் ஈடுபட்டிருந்தார். அவருடைய தலைமையின் கீழ் அதிசயமான சாதனைகளைப் புரிந்து கொண்டிருந்தனர் இந்திய வீரர்கள்.

தம்முடைய சைன்யங்களை உற்சாகப்படுத்துவதற்காகத் தாமே போர்முனையின் முன்னணியில் போய் நின்றார் பிரிகேடியர். அங்கு அழகாக வளர்ந்திருந்த சௌனர் மரத்துக்கு அடியில் உள்ள வளைவான பாறையில் பதுங்கிக் கொண்டு தம்முடைய சேனைகளுக்கு உத்தரவிட்டுக் கொண்டிருந்தார். திடீரென்று எதிரியின் பீரங்கிக் குண்டு உஸ்மான் மீது வந்து விழுந்தது. அவர் இடுப்பில் வந்து விழுந்த குண்டு அவர் உடலை இரண்டாகப் பிளந்து விட்டது. சுதந்திர பாரதத்தின் எல்லையை

மீட்கப் பாடுபட்டுக் கொண்டிருந்த ஒரு முகம்மதிய வீரர் மறைந்து விட்டார்.

அவர் மறைவைக் கேட்டுப் பாகிஸ்தான் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கியது. இந்தியத் தாய் தன்னுடைய வீரப் புதல்வர்களில் ஒருவரை இழந்து இரத்தக் கண்ணீர் வடித்தாள்.

உஸ்மான் உயிர் விட்ட இடத்தில் அவருக்கு ஒரு நினைவுச் சின்னம் அமைக்கப் பட்டிருக்கிறது. இந்தப் புனித இடத்துக்குச் சென்று இந்தியப் பத்திரிகையாளர்கள் எல்லாரும் மலர் மாலை வைத்து அந்த வீரருக்கு நன்றி கலந்த வீர வணக்கம் செய்தார்கள்.

ஜம் கட்டில் பாகிஸ்தான் வீரர்களும் இந்திய வீரர்களும் சமாதான எல்லையிலே எதிர் எதிரே நின்று காவல் புரிகிறார்கள். இருவருக்கும் இடையில் ஆயிரம் அடி நிலம் பரந்து கிடக்கிறது. அந்த இடங்களில் ஆடு மாடுகள் இந்திய எல்லையிலிருந்து பாகிஸ்தான் எல்லைக்குச் செல்கின்றன. சாதாரண மக்களும் இந்திய எல்லையிலிருந்து பாகிஸ்தானுக்குச் சென்று விடுகின்றனர். அப்படி அவர்கள் எல்லைக் கோட்டைத் தாண்டாமல் பார்த்துக் கொள்வதுதான் அங்குள்ள வீரர்களின் வேலையாக இருக்கிறது.

பாகிஸ்தானிலிருந்து பௌண்டன் பேனா, கடிகாரம் முதலியவைகளைக் கள்ளத்தனமாகக் கடத்தி வந்து விடுகின்றனர். அதே போல் இந்தியாவிலிருந்து துணிகள் கடத்தப்படுகின்றன. பாகிஸ்தானில் துணிகளின் விலை அதிகமாம். மனிதனுக்கு மிக அவசியமான உடையின் விலை பாகிஸ்தானில் யானை விலை குதிரை விலை என்று ஏறிக் கிடக்கிறதாம்!

"இங்கு வறுமையில் வாடிக் கிடக்கும் மாடு மேய்க்கும் சிறுவன் மீது இரக்கப்பட்டு, பாகிஸ்தான் எல்லையிலிருந்து வரும் அவனைத் தடுத்து நிறுத்திச் சோதனை போடா விட்டால் அவன் கோவணத்துக்குள்ளே ஆறு கடிகாரங்கள் மறைத்து வைத்திருப்பதை எப்படிக் கண்டு பிடிக்க முடியும்!" என்று கேட்டார் அங்கிருந்த சிப்பாய்.

அவருடைய கேள்வியும் நியாயந்தானே! இப்படிப்பட்ட கள்ளக் கடத்தல் சம்பவங்கள் அங்கு அடிக்கடி நிகழ்ந்து வருகின்றன. சட்டம் பாதுகாக்கப்பட வேண்டுமானால் சர்க்காரை ஏமாற்றுகிறவர்களிடம் கொஞ்சம் கடுமையாகத்தான் இருக்கவேண்டியிருக்கிறது.

## கொசுக்களுடன் போர்

அன்று இரவு வீரர்களோடு வீரர்களாக அவர்களுடைய கூடாரத்தில் தங்கினோம். காடும் மலையும் சூழ்ந்த இடத்தில் நாலடி உயரம் உள்ள கட்டையான புதர்கள் நிறைந்த சமவெளியில் வீரர்கள் கூடாரம் அடித்துக் கொண்டு காவல் நிற்கிறார்கள். அந்தக் கூடாரத்தில் வீரர்கள் எப்படி வாழ்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு அன்று இரவு கிடைத்தது. யுத்த பூமியானதால் அங்கெல்லாம் இரவு நேரத்தில் யாரும் வெள்ளை ஆடை உடுத்திக் கொண்டு வெளியில் செல்லக் கூடாது. அப்படிச் சென்றால் இந்தியச் சிப்பாய்களாலேயே அவர்கள் சுடப்படுவார்கள்.

அப்படிப்பட்ட ஆபத்தான இடத்தில் வெள்ளை உடை தரித்த இந்தியப் பத்திரிகையாளர்கள் ஒரு இரவு தங்க வேண்டியிருந்தது. இரண்டு பத்திரிகையாளர்களுக்கு ஒரு சிப்பாய் வீதம் காவல் போட்டிருந்தார்கள். பத்திரிகையாளர்கள் கூடாரத்தை விட்டு வெளியில் செல்ல வேண்டுமானால் அந்தச் சிப்பாயிடம் சொல்ல வேண்டும். அவர் ஊதுகுழல் மூலம் சமிக்ஞை செய்து விட்டுப் பத்திரிகையாளரை அழைத்துச் செல்வார். ஆனால் பத்திரிகையாளர்களுக்கெல்லாம் பயம் பயம்தான்!

ஒரு கூடாரத்தில் இரண்டு பேர் வீதம் தங்கினோம். இரவில்கூடத் தாங்கமுடியாத உஷ்ணம் தான். அத்துடன் சிறு வண்டுகள் போன்ற பெரிய கொசுக்கள் பட்டாளம் புறப்பட்டு விட்டன. அவைகளுடன் சிப்பாய்கள் போர் நடத்திக் கூடாரத்துக்குள் நுழையாமல் இருப்பதற்கு எத்தனையோ அதிசயமான சாதனைகள் எல்லாம் செய்தார்கள். அப்படிச் செய்யாவிட்டால் கொசுவலைக்குள்ளும் கொசுப் பட்டாளம் புகுந்து விடும். பத்திரிகையாளர்கள் நிம்மதியாகத் தூங்க வேண்டுமே என்று அவர்கள் எடுத்துக் கொண்ட சிரத்தைக்கு எப்படி நன்றி கூறுவது என்று தெரியவில்லை.

கூடாரங்களைப் பற்றி ஒரு வார்த்தை. கூடாரங்கள் எல்லாம் வெகு சுத்தமாக இருந்தன. ஒவ்வொரு கூடாரத்துக்கும் ஒரு குளிக்கும் கூடாரம், 'பிளஷ் அவுட்' என்னும் சுகாதார வசதிகளுடன் கூடிய கூடாரம் முதலியவைகள் தனித் தனியே இருக்கின்றன.

வெட்ட வெளியாக இருந்தாலும், மனித நடமாட்டம் இல்லாத பூமியாக இருந்தாலும் இந்தியச் சிப்பாய்கள் கண்ட இடத்தில் அசுத்தம் செய்யாமல் இருக்கிறார்கள். சிப்பாய்களுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டிய உயர்ந்த அறிவல்லவா சுகாதாரம்!

வாருங்கள், ராணுவ ஆஸ்பத்திரிகளைப் பார்ப்போம். நாலு புறமும் மலை சூழ்ந்த இடத்தில் பல கூடாரங்கள் தெரிகிறதே அது தான் ஆஸ்பத்திரி. ஆஸ்பத்திரிகளில் வீரர்களுக்கு ஏற்படும் வியாதிகள் உடனுக்குடன் கவனிக்கப்பட்டு வருகின்றன. ஆஸ்பத்திரியில் இருந்த ஒரு நோயாளியை விசாரித்தேன்.

"இங்கு எல்லாம் நன்றாகக் கவனிக்கப்படுகிறதா! போதுமான அளவு மருந்து வசதிகள் இருக்கின்றனவா?"

"நன்றாகக் கவனிக்கப்படுகின்றன. இந்த ஆஸ்பத்திரி வசதிகளாலேயே ராணுவத்தில் சேரலாம்" என்றார் அந்த நோயாளி.

ஜம்முவில் உள்ள முக்கியமான ஆஸ்பத்திரி தவி நதியின் கரையில் அருமையான கூடாரங்களால் ஆக்கப்பட்டிருக்கிறது. சுமார் இரண்டாயிரம் பேருக்குச் சிகிச்சை செய்வதற்கு வேண்டிய வசதிகள் இங்கு இருக்கின்றன. தவி நதியின் கரையில் அமைந்திருக்கும் ஆஸ்பத்திரிகளையும், கூடாரங்களையும் பார்ப்பதற்குப் பதினாயிரம் கண்கள் வேண்டும். அவ்வளவு அழகாக அவைகள் காட்சி அளிக்கின்றன.

இதன் அழகைப் பற்றி இப்படி வியந்து கூறிக் கொண்டிருக்கும் போது அங்குள்ள ராணுவ அதிகாரிகளில் ஒருத்தர் வந்தார். "நீங்கள் சொல்வதெல்லாம் உண்மைதான். தவி நதியும், அதற்கு அப்பால் உள்ள சிடுமரக் காடுகளும், அதற்கும் மேலே தோன்றும் இமய மலையும் பார்ப்பதற்கு அழகாகத்தான் இருக்கின்றன. இன்றைக்கு அழகாக இருக்கும், நாளைக்கு

அதைவிட அழகாக இருக்கும். அதற்கு மறு நாள் இன்னும் அழகாக இருக்கும். ஆனால் பிறகு அழகு மறைந்து அலுப்புத் தட்டி விடும். இதுதான் எங்கள் அனுபவம்" என்றார். அவர் சொன்னது உண்மையா இல்லையா என்பதை அங்கு இருந்து அனுபவித்துப் பார்க்கவில்லை. ஆனால் அந்த வட்டாரத்தின் அமைதியான சூழ்நிலையில் அமைந்திருக்கும் எழில் மிக்க ராணுவ கூடாரங்கள் மனத்தை விட்டு இன்னும் மறையவில்லை.

## ஜஹாங்கீர் யாத்திரை

நௌஷாரா தவிநதிக்கரை வழியாக ஜீப் வண்டிகள் மேலே ஓடிக் கொண்டிருந்தன. தவியில் தண்ணீர் சலசலவென்று ஓடிக் கொண்டிருந்தது. ஆற்றின் ஒரு ஓரத்தில் மட்டும் தண்ணீர் நாட்டிய மங்கை போலக் குதி போட்டுக் கொண்டும், இனிய கீதம் இசைத்துக் கொண்டும் ஓடிக் கொண்டிருந்தது. அதற்கு அப்பால் தவியில் பூசணிக்காய் அளவு பெரிய பெரிய கூழாங் கற்கள் ஓடிக் கொண்டிருந்தன. அந்தக் கற்கள் உண்மையில் ஓடவில்லை. ஆனால் ஜீப் வண்டியின் ஓட்டத்தினாலோ வேறு என்ன காரணத்தினாலோ தண்ணீரைப்போல் அந்தக் கூழாங் கற்களும் ஓடிக் கொண்டிருப்பது போலவே இருந்தன. ஆகா ! அந்தக் கற்களில் தான் எத்தனை எத்தனை விதமான வர்ணங்கள்! பச்சை, மஞ்சள், கருப்பு, வெள்ளை என்று பல வர்ணங்களில் கற்கள் கிடந்தன. ஒரு இடத்தில் தவி நதி அப்படியே தாமரைத் தடாகமாகக் காட்சி அளித்தது. இந்தக் கண்கொள்ளாக் காட்சியை வியப்புடன் கூர்ந்து பார்த்த போது அவை வெறும் மாயத் தோற்றம் என்பதை உணர்ந்து கொள்ள முடிந்தது. பச்சை நிறக் கூழாங் கற்கள் பரவலாகக் கிடப்பதே அப்படி ஒரு பிரமையை ஏற்படுத்தியிருக்கின்றன என்பதைத் தெரிந்து கொள்ள முடிந்தது.

ஏற்றமும் இறக்கமுமான இந்தப் பாதையில் போய்க் கொண்டிருக்கும்போது "இதுதான் சிங்கஸ் கோட்டை" என்று தவி நதிக் கரையில் இருந்த ஒரு பழங் காலத்துக் கோட்டையைக் காண்பித்துக் கூறினார் ராணுவ அதிகாரி.

இந்தக் கோட்டையைப் பார்த்ததும் என் சிந்தனை முகலாய மன்னர்கள் அரசாண்ட காலத்துக்குச் சென்று விட்டது.

காஷ்மீரத்திலிருந்து டில்லிக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறார் சக்கரவர்த்தி ஜஹாங்கீர். இந்தத் தவிநதிக்கரையோடு மன்னர் பரிவாரங்கள் ஊர்வலமாக வந்து கொண்டிருக்கின்றன. யானைகளும், குதிரைகளும், வீரர்களும் வருகின்றனர். மன்னரும் மகாராணியும் பல்லக்கில் வந்து கொண்டிருந்தனர். வழியில் மன்னருக்கு நோய் ஏற்பட்டுக் கடைசியில் மரணமடைந்து விடுகிறார். மன்னரின் மரணம் முகலாய ராஜ்யத்தின் அமைப்பையே மாற்றி விடக் கூடும், டில்லியின்மீது எதிரிகள் திடீரென்று படை எடுத்துத் தாக்கக் கூடும் என்பதை உணர்ந்த ராணி நூர்ஜஹான் மன்னரின் மரணத்தை வெளியில் யாருக்கும் தெரியாமல் மறைத்து விட்டாள்.

மரணம் என்னவோ மறைக்கப்பட்டது. ஆனால் ஆவி பிரிந்த மன்னரின் உடல் கெட்டு விட்டது. அதிலிருந்து துர்க்கந்தம் வீச ஆரம்பித்து விட்டது. மன்னராக இருந்தாலும் அவர் உடலும் மனித உடல்தானே !

இந்த இடம் வரையில் மன்னரின் மரணத்தை மூடி மறைக்க முடிந்தது. இதற்கு மேல் ஆவி பிரிந்த சக்கரவர்த்தியின் உடலிலிருந்து வந்த துர்க்கந்தத்தை மறைக்க முடியாது என்பதை உணர்ந்தாள் நூர்ஜஹான். ஜஹாங்கீரின் உடலில் உள்ள குடல் முதலிய பகுதிகளை அப்புறப்படுத்தி விட்டு உடலை மட்டும் வாசனைத் திரவியங்கள் போட்டு வைத்தாள்.

சக்கரவர்த்தியின் மரணம் டில்லிக்கு அருகில் சென்றவுடன் தான் அறிவிக்கப்பட்டது. சக்கரவர்த்தியின் உயிர் நீங்கிய உடலில் இருந்து அப்புறப் படுத்தப்பட்ட குடலைத் தவி நதிக் கரையில் புதைத்து அதன் மீது அருமையான கோட்டையையே எழுப்பியிருக்கிறாள் ராணி நூர்ஜஹான்.

அந்தக் கோட்டைதான் சிங்கஸ் கோட்டை. இந்தக் கோட்டைக்குள் சென்றதும் இதன் வழியாகத்தானே மகாராணி நூர்ஜஹான் வந்திருப்பாள், மற்ற மந்திரிப் பிரதானிகளும் வந்திருப்பார்கள் என்று எண்ணிப் பார்க்காமல் இருக்க முடியவில்லை.

எது எப்படி இருந்தாலும் ஜஹாங்கீர் குடல் புதைத்த இடத்தில் கட்டிய கோட்டையில் தான் ஜம்மு - காஷ்மீர் போலீஸ் படை இன்று இருக்கிறது. சிங்கஸ் கோட்டைக்குள் இருந்துதான் அவர்கள் இந்தப் பிராந்தியத்தைக் காவல் காத்து வருகின்றனர். ஆனால் இந்த இடத்தில் ஜனசஞ்சாரமே இல்லை.

இதற்கு அருகில் இருக்கும் ஒரு 'பிக்கட்,' அதாவது எல்லைக் காவல்-படை முகாமைப் பார்க்கச் செல்வோம். இந்த இடத்துக்கு வந்தவுடன்தான் நாம் கற்பனை செய்து வைத்திருக்கும் இமயமலையைக் கண்ணால் பார்க்க முடிகிறது. வட இந்திய யாத்திரையில் இமய மலையின் பனி மூடிய சிகரத்தை இங்குதான் முதன் முதலாகப் பார்த்தோம்.

"இது தான் பீர்பஞ்சால் சிகரம்" என்றார் எங்களுடன் வந்த ராணுவ அதிகாரி.

"இது தானா பீர்பஞ்சால் சிகரம் !" என்று எல்லாப் பத்திரிகையாளரும் ஒரே சமயத்தில் கேட்டு ஆச்சரியப்பட்டோம்.

"வெள்ளிப் பனிமலை" என்ற கவியின் வர்ணனையை நேரில் பார்த்து மெய்மறந்து போனேன். சூரிய ஒளியில் பனிமலை பளபள என்று தெரிந்தது ! அதிகமான வெப்பத்தில் உஷ்ணம் தாங்காது பனி உருகிய இடங்கள் எல்லாம் அந்த வெள்ளிப் பனி மலையின் சிகரத்தில் ஆறு போல் கருப்பாகக் காணப்பட்டன. அந்தச் சிகரத்துக்கு என்ன மாய சக்தி இருக்கிறதோ ! அதைப் பார்த்த உடனேயே மனத்தில் எல்லை காண முடியாத ஒரு இன்பம் பொங்கியது. மனத்தில் ஒரு குளிர்ச்சி ஏற்பட்டது. இது தான் நமது ஒப்புயர்வற்ற இமயமலை எங்கள் மலை என்று பெருமையோடு சொல்லிக் கொள்ள முடிந்தது.

அந்தப் பனிமலையின் சிகரத்தைப் பார்த்துக் கொண்டே ரஜௌரிக்குச் செல்வோம். ரஜௌரி நகரம் யுத்தத்தின் கொடுமைகளை அனுபவித்த துர்ப்பாக்கிய நகரம். பாகிஸ்தான் வீரர்களின் பஞ்சமா பாதகத்தால் அது பட்ட பாட்டை அடுத்த இதழில் காணலாம். (தொடரும்)



சிஸர்ஸ்








வெள்ளித்திரை

# தெனாலிராமன்

காந்தன்

புது வெள்ளம் பழைய வெள்ளத்தைக் கொண்டு போய் விடுவதைப் பார்த்திருக்கிறோம். ஆனால் அதற்கு முற்றிலும் மாறாக இப்பொழுது புது வெள்ளம் பழைய வெள்ளத்தைக் கொண்டு வர ஆரம்பித்திருக்கிறது.

சென்னை மூர்மார்க்கெட்டில் இருக்கும் பழைய சாமான்களுக்கெல்லாம் ஒரு சமயத்தில் நல்ல காலம் ஏற்படுகிற மாதிரி பழைய காலத்துக் கதைகளுக்கெல்லாம் இப்போது 'மவுசு' ஏற்பட்டு வருகிறது. பலமுறை பல நாடக மேடைகளிலும், சினிமாப் படங்களிலும் தோன்றி அலுத்துப் போன பழைய கதைகளெல்லாம் புனருத்தாரணம் செய்யப்பட்டு மீண்டும் மீண்டும் தலைகாட்டும் காலம் இது. ஆனால், இந்தப் பழங் கதைப் படங்களைப் பார்ப்பதில் ஒரு சௌகரியம் இருக்கிறது. கதை எப்படி முடியுமோ, என்ன சம்பவங்களெல்லாம் வருமோ என்று படம் பார்ப்பவர்கள் மனத்தைக் குழப்பிக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படாது. முன்பே தெரிந்த கதையாதலால், முடிவை வெள்ளித் திரையில் கண்டுதான் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதில்லை! அது பெரிய சௌகரியம் இல்லையா!

இதை மனசில் வைத்துக்கொண்டு சில படங்களைப் பார்க்க வேண்டும். விக்ரம் புரொடக்ஷன்ஸ் தயாரித்த பழைய கதையான "தெனாலி ராமன்" படத்தில், வி. நாகய்யா, என். டி. ராமராவ், சிவாஜி கணேசன், பானுமதி முதலிய பழைய நடிகர்கள் நடித்திருப்பதில் அதிசயம் ஒன்றும் இல்லை.

திரைக் கதை அமைப்பில் புரட்சிகரமான எத்தனை மாறுதல்களைப் புகுத்தினாலும், தெனாலிராமனையோ, நெடுங்காலமாக நம் நாட்டில் பிரசித்தி பெற்று வந்திருக்கும் அவனது விகடகவிகளையோ அடியோடு மாற்றி விட முடியாது என்பதை யாரும் மறுக்க மாட்டார்கள்.

அன்னை பராசக்தியின் அருட்பிரசாதத்தினால், ஏழைக் கவிஞனான தெனாலிராமன், சாதுர்யமாகவும் மாதுர்யமாகவும் கவிதைகள் இயற்றும் சக்தியைப் பெற்று விடுகிறான்;



மேற்படி கவிதா சக்தியின் காரணமாக, அவன் கனவிலும் எதிர்பாராத விஜய நகர சாம்ராஜ்யத்தின் அதிபரான கிருஷ்ணதேவராயரின் ஆஸ்தான கவிஞர்களில் ஒருவனாக நியமிக்கப்படுகிறான்; பல கவிஞர்களின் நாடியைப் பிடித்துப் பார்த்து வெற்றி பெறுகிறான்; விஜய நகர சாம்ராஜ்யத்தின் முதல் அமைச்சரும், அறிவின் சிகரமுமான அப்பாஜியின் உற்ற துணைவனாகிறான்; அரசரின் பேரன்புக்கும் பெருமதிப்புக்கும் பாத்திரனாகிறான். அவன் மேலும் மேலும் புகழ் பெற்று விளங்க, பொறாமைக்காரர்களின் நாசவேலைகள் பெரிதும் உதவி புரிகின்றன. சதித் திட்டம் ஒவ்வொன்றிலும் அகப்பட்டுக் கொள்ளாமல் தப்பி, தன் நுண்ணிய அறிவின் திறத்தினால், டில்லி பாதுஷாவின் பலம் பொருந்திய யானைப் படையையே தடுத்துத் திருப்பி அனுப்பி, விஜயநகர சாம்ராஜ்யத்துக்கு வெற்றியைத் தேடித்தருகிறான்.

சிவாஜி கணேசன் தெனாலிராமன் பாகத்தை ஏற்று நடிக்கிறார் என்று அறிந்ததும் எனக்கு வியப்பும் சந்தேகமும் ஒருங்கே தோன்றின. படத்தைப் பார்த்ததும், வியப்பு மிகுந்து விட்டது; சந்தேகம் மறைந்து விட்டது. அந்தப் பாத்திரத்துக்கு ஏற்றவர் அவர்தான் என்ற அபிப்பிராயமும் ஏற்பட்டது. மீசையில்லாமலே அவர் நடிப்பு நன்கு சோபித்திருக்கிறது; சொந்தக் குரலில் பாடாமலே அவர் நல்ல பெயரைத் தட்டிக் கொண்டு போய் விடுகிறார். எந்தப் பாத்திரத்தையும் தம் சொந்தப் பாத்திரமாக ஏற்றுத் திறமையோடு நடிக்க முடியும் என்பதை சிவாஜி கணேசன் இந்தப் படத்தில் திறமையுடன் நன்கு நிரூபித்திருக்கிறார்.

அப்பாஜியாக நடிக்கும் நாகையாவின் நடிப்பில் அப்பழுக்குச் சொல்ல முடியாது. பிரதம மந்திரியின் பாகத்தில் சோபித்த அவரது நடிப்பு, பிச்சைக்காரன் பாகத்திலும் பிரமாதமாய்ச் சோபித்திருக்கிறது.

என். டி. ராமராவுக்கு இந்தப் படத்தில் அதிகம் அலட்டிக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. ஆடாமல் அசையாமல் அரச பீடத்தில் இருந்து ஆட்சி புரிவதற்கு அலட்டிக் கொள்வானேன்! வெளி நாட்டிலிருந்து வந்த நாட்டியக்காரியின் எழிலில் மதி மயங்கிவிட்ட கிருஷ்ண தேவராயரின் நிதானம் பாராட்டப்பட வேண்டியதுதான்! அப்பொழுது அவர் புரிந்த காதலில்கூட நிதானம் தலைதூக்கி நின்றது.

ஸ்ரீமதி பானுமதி ஒரு சிறந்த நடிகை என்பதில் சந்தேகமில்லை. என்றாலும் அவர் ஏற்று நடிக்கும் பாத்திரமோ பருவத் துடிப்பில் நிற்கும் ஒரு பெண்ணின் வேஷம். இந்த முறையில் "மேக்கப்" இன்னும் வெற்றிகரமாக அமைந்திருக்க வேண்டும் என்பதே எனது கருத்து.

வசனங்கள் கவிதை மாதிரி எதுகை மோனையுடன் அமைந்திருந்தாலும் முரட்டுத் தனமாயில்லை. தெனாலிராமனின் புத்தி சாதுர்யம், படம் பார்க்கப் பெரிதும் உதவியாயிருக்கிறது.

மொத்தத்தில் இந்தப் படம் மகிழ்ச்சியூட்டும் நோக்கத்துடன் எடுக்கப்பட்டு உல்லாசமான போக்கில் அமைந்திருக்கிறது. படத் தயாரிப்பாளர்கள் ஆபாசமின்றி எடுத்துள்ளதைப் பாராட்டுகிறோம்.



# உங்கள் பணவசதிக்குத் தகுந்தபடி ஒரு நேர்த்தியான காமிராவை சொந்தத்திற்கு வாங்கி வைத்துக்கொள்ளுங்கள்

இங்கு குறிப்பிட்டுள்ள நேர்த்தியானவகைகளைச் சேர்ந்த 'கோடக்' காமிராக்களில் ஒன்றை சொந்தத்திற்கு வைத்துக்கொள்ள பேரானந்தமாயிருக்கும். நீங்கள் தேர்ந்தெடுக்க விரும்பும் ரகங்களைப் பாருங்கள்.

* மிகச் சுலபமாய் உபயோகிக்கக்கூடிய ஒரு காமிரா தேவையா? அப்படியானால் கோடக் 'ஜூனியர்' I காமிராவே உங்களுக்குகந்தது. பெரிய லென்ஸும், ஷட்டர் ஸ்பீடுகளின் வசதிகளுக்கும் 'ஜூனியர்' II எடுத்துக் கொள்ளுங்கள்.
* ஒரு உயர்ந்த ரக காமிரா உங்கள் விருப்பமானால் கோடக் 'ஸ்டர்லிங்' II வைத்துக் கொள்வதில் ஒரு தனிப் பெருமை உங்களுக்கு ஏற்படும்.
* அல்லது நீங்கள் குறைந்த விலையில் அதிகப் பெருமானமுள்ள காமிரா வாங்க நினைத்தால் நீங்கள் தேர்ந்தெடுக்க இரு மினியேச்சர் காமிராக்கள் கோடக் 'ரெடினெட்' மற்றும் கோடக் 'ரெடினா' Ib இருக்கின்றன.

உங்கள் கோடக் வியாபாரியை, இந்தக் காமிராக்களைத் தவிர வேறு பற்பல ரகங்களையும் காண்பிக்கச் சொல்லுங்கள். உங்களுக்குத் தேவையான ஒரு காமிராவைத் தேர்ந்தெடுக்க அவர் உதவி செய்வார்.



**ஸிக்ஸ்–20 கோடக் 'ஜூனியர்' I காமிரா**
இந்த மடக்கக் கூடிய காமிராவில் எப்/6.3 லென்ஸ் மற்றும் மங்கிய வெளிச்சத்திற்கும் ப்ளாஷ் படங்களுக்கும் 1/25 செகண்டு மற்றும் பிரகாசமான திறந்த வெளி ஷாட்டுகளுக்கு 1/50 செகண்டு முறையே இரண்டு ஷட்டர் ஸ்பீடுகள் உண்டு. 'கோடக்' 620 பிலிமில் 8 பிரமாதமான படங்கள் எடுக்கலாம். .. .. ரூ. 115/-
தோல் கேஸ் .. .. ரூ. 9/8
ப்ளாஷ்ஹோல்டர் .. .. ரூ. 29/-

**கோடக் 'ஸ்டர்லிங்' II காமிரா**
இது எல்லாவிதத்திலும் சிறந்த ஒரு காமிராவாகும். இதில் எப்/4.5 லென்ஸ் மற்றும் 1/200 செகண்டுவரை ஷட்டர் ஸ்பீடும் உள்ளன. 'கோடக்' 620 பிலிமில் 8 ஷாட்டுகள் எடுக்க முடியும். ஷோக்கான க்ரோமியமும் கருப்பு வர்ணப் பெட்டியில் சாம்பல் நிறத்தில் பொருத்தங்களுடன் கூடியது. .. .. ரூ. 157/8
தோல் கேஸ் .. .. ரூ. 9/8
ப்ளாஷ்ஹோல்டர் .. .. ரூ. 29/-

கோடக் லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது) பம்பாய்–கல்கத்தா–டில்லி–மதராஸ்

---

தெளிவான நல்ல படங்கள் எடுக்க 'கோடக்'

# ஆற்றங்கரையினிலே




## 61. திருமயிலை

தமிழ் அன்னையின் திருமுகம் எனத் திகழ்வது சென்னைமா நகரம். அந் நகரின் கடற் கரையிலே அலைகள் அயராமல் இசை பாடும்; கானலஞ் சோலையிலே கலாப மயில் ஆர்த்து ஆடும். இவ்வாறு மயில் ஆர்க்கும் பாக்கமே மயிலாப்பூர் என்று பெயர் பெற்றது.

முதல் ஆழ்வார்களில் ஒருவர் அவ் வூரிலே தோன்றினார். "திருக் கண்டேன், பொன் மேனி கண்டேன்" என்று திருமாலின் வடிவத்தை அழகொழுக எழுதிக் காட்டினார். அவ் ஆழ்வார் பிறந்ததனால் பெருமையுற்ற மயிலையம்பதியை மனமார வாழ்த்தினார் ஒரு கவிஞர்.

"திருக்கண்டேன் எனும்நூறும்
செப்பினான் வாழியே
மருக்கமழும் மயிலைநகர்
வாழவந்தோன் வாழியே"

(நூறு-திருவந்தாதி; மரு-மணம்)

என்பது அவர் திருவாக்கு.

தன்னிகரில்லாத் தமிழ்ப் புலவராகிய திருவள்ளுவரும் மயிலையிற் பிறந்தவர் என்பர். தொன்று தொட்டுத் தெய்வப் புலமைத் திருவள்ளுவர் என்று போற்றப்படும் அப்புலவர் பெருமானுக்கு மயிலையில் ஒரு திருக்கோயில் உண்டு.

பல்லவ மன்னர் காஞ்சியம்பதியைத் தலைநகராகக்கொண்டு தமிழகத்தை ஆண்ட காலத்தில் மயிலை ஒரு சிறந்த துறைமுகமாயிருந்தது. நந்தி வர்மன் என்னும் பல்லவர் கோமானை "மல்லை வேந்தன், மயிலை காவலன்" என்று பாடிற்று நந்திக் கலம்பகம்.

அங்குள்ள பழமையான சிவாலயத்தைக் "கானமர் சோலைக் கபாலீச்சரம்" என்று புகழ்ந்து போற்றினார் திருஞான சம்பந்தர்; பூம்பாவைப் பாட்டிசைத்தார்.

"கற்றார்கள் ஏத்தும்
கபாலீச் சரம்அமர்ந்தான்
பொற்றாப்புக் காணாதே
போதியோ பூம்பாவாய்"

(பொற்றாப்பு-மயிலாப்பூரில் ஒரு திருவிழா)

என்று அவர் பரிவுற்றுப் பாடியபொழுது பாவை உயிர் பெற்று எழுந்தாள் என்று பெரிய புராணம் கூறுகின்றது.

திருஞான சம்பந்தர் பிறந்தருளும் பேறு பெற்ற சீர்காழிப் பதியிலே வாழ்ந்தாள் ஓர் அழகிய நங்கை. அவள் ஈசனிடம் இடையறாக் காதல் கொண்டு உருகினாள். அல்லும் பகலும் ஊண், உறக்கமற்றுக் குறுகினாள். வெண்ணிலாவின் வெம்மையால் வெந்து அழிந்தாள். அம் மங்கையின் நிலை கண்டு இரக்கமுற்றார் ஒரு மாத

பேராசிரியர்
ரா. பி. சேதுப்பிள்ளை

வர். திருஞான சம்பந்தரது கோயிலின் முன்னே நின்று ஒரு பாட்டுப் பாடினார்.

"வருக்கைநறுங் கனிசிதறிச்
செந்தேன் பொங்கி
மடுக்கரையின் குளக்கரையின்
மதகில் ஓடப்
பெருக்கெடுத்து வண்டோலம்
செய்யும் காழிப்
பிள்ளையார் சம்பந்தப்
பெருமான் கேளீர்
அருட்குலவும் மயிலைதனில்
அரவால் வெந்த
அங்கத்தைப் பூம்பாவை
ஆக்கீனேம் என்று
இருக்குமது தகவன்று
நிலவால் வெந்த
இவளையும்ஓர் பெண்ணாக்கல்
இயல்பு தானே"

(வருக்கை-பலா)

"தேனடைந்த சோலைத் திருநகரில் தோன்றிய செம்மலே! திருஞான சம்பந்தப் பெருமானே! உம்மிடம் அடியேன் செய்யும் விண்ணப்பம் ஒன்று உண்டு. செவி சாய்த்தருளல் வேண்டும். மயிலையம் பதியில் அரவால் வெந்து அழிந்தாள் ஒரு மங்கை. அவள் அங்கத்தை மீண்டும் பெண்ணுக்கி எங்கும் புகழ் பெற்றீர்! அது போதுமா? இங்கு ஒரு மங்கை நிலவின் கொடுமையால் அங்கம் எல்லாம் வெந்து மாய்ந்தாளே! இவளுக்கும் உயிர் கொடுக்கலாகாதா? நெருப்பால் எரிந்த கன்னிக்கு உயிர் கொடுத்த நுமது கருணை நிலவால் எரிந்த நங்கைக்கும் உயிர் கொடுக்க மாட்டாதா என்று நயமுற வேண்டினார்.

மயிலைக் கடற்கரையின் அழகுக்கு அழகு செய்தது ஓர் அல்லிக்குளம். மண்ணீரும் ஆகாத மூக்கீரின் அருகே உண்ணீர் உதவி நின்ற அம்மணற் கேணியை அல்லிக் கேணி என்று அழைத்தார்கள். அதைச் சுற்றி எழுந்தது ஒரு சிற்றூர். தொண்டை நாட்டு மன்னன் அதன் அண்டையில் திருமாலுக்கு ஒரு கோயில் எடுத்தான். அவர் அருளால் ஊர் சீராயிற்று; அல்லிக் கேணி திருவல்லிக்கேணி யாயிற்று.

கமலக்கேணியின் அருகே அமைந்த திருக் கோயிலில் கடற் காற்றின் சுகத்தை நுகர்ந்து கண் வளர்ந்த இறைவனை மனங் கனிந்து பாடினார் திருமழிசையாழ்வார்.

"நாளால் உலகம் அளந்த அசைவே கொல்
வாளா கிடந்தருளும் வாய்திறவான் - நீளோதம்
வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக்கேணியான்
ஐந்தலைவாய் நாகத் தணை"

(நீளோதம் - நெடுங்கடல்)

என்ற திருப்பாட்டில் பெருமான் பள்ளி கொண்ட கோலம் பாங்குற விளங்கு கின்றது.

திருவல்லிக்கேணியின் செழுஞ் சோலை யும், நறும் பொய்கையும், சிறந்த மாளி கையும், உயர்ந்த கோயிலும் திருமங்கை மன்னன் உள்ளத்தைக் கவர்ந்தன.

"மன்னுதண் பொழிலும் வாவியும் மதிளும்
மாடமாளிகையும் மண்டபமும்
தென்னன்தொண் டையர்கோன்
செய்தநன் மயிலைத்
திருவல்லிக்கேணி நின்றானை"

(பொழில்-சோலை; வாவி-குளம்)

என்ற திருப்பாசுரத்தில் மயிலையைச் சேர்ந்த ஊராகவே திருவல்லிக்கேணியைக் கருதுகின்றார் திருமங்கை மன்னனும்.

அவர் பாடிய தெள்ளிய தமிழ்ப் பாட் டில் பஞ்சவர்க்காகத் தூது சென்ற பரந் தாமன் பெருமை பேசப் படுகின்றது. கோவர்த்தன மலையைக் குடையாக எடுத் துக் கொடு மழை தடுத்த கொற்றவன் பெருமை கூறப்படுகின்றது. செருக்குற்ற அசுரனைச் சீறிச் சிதைத்த சிங்கத்தின் செம்மை சொல்லப்படுகின்றது.

"பிள்ளையைச் சீறி வெகுண்டுதூண் புடைப்ப
பிறையெயிற் றனல்விழிப் பேழ்வாய்
தெள்ளியசிங்கம் ஆகிய தேவைத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே"

(வெகுண்டு - கோபித்து; எயிறு - பல்; பேழ் - பிளந்த)

என்ற பாட்டின் பயனாகத் 'தெள்ளிய சிங்கர்' என்ற பெயர் திருவல்லிக்கேணிப் பெருமானுக்கு அமைந்தது.

தெள்ளிய சிங்கர் என்னும் திருப்பெயர் தெளிசிங்கர் எனக் குறுகித் துளசிங்கர் என வழங்குகின்றது.

இன்னும், பாரதப் பெரும் போரில் பார்த்தனது தேர்ப்பாகனைப் பணி செய்த திருமாலின் கருணையை வியந்து பாடினார் திருமங்கை மன்னன்.

> "பற்றலர் வீயக் கோல்கையில் கொண்டு
> பார்த்தன்தன் தேர்முன் நின்றானை
> சிற்றவை பணியால் முடிதுறந்தானை
> திருவல்லிக் கேணிக் கண்டேனே"

(பற்றலர் - பகைவர்; வீய - சாக; பார்த்தன் - அருச்சுனன்)

என்ற பாட்டின் வழியாகப் பார்த்தசாரதி என்ற பெயரும் பெருமானுக்கு அமைந்தது.

திருவல்லிக்கேணியிற் கோயில் கொண்ட திருமாலைத் தேர்ப்பாகனைக் கனவிலே கண்டார் கவிஞர் பாரதியாரும்.

> "தேர்ன்முன் பாகன் — மணித்
> தேர்ன்முன் பாகன் — அவன்
> சீரினைக்கண்டு திகைத்து நின்றேன் —
> கண்ணனைக் கண்டேன் — எங்கள்
> கண்ணனைக் கண்டேன் — மணி
> வண்ணனை ஞான மயிலினைக் கண்டேன்"

என்று அளவிறந்த மகிழ்ச்சியால் ஆடிப் பாடினார்.

# வட்ட மேஜை

அருமைக் குழந்தைகளே!

'வெட்டிப் பூமாலை' படித்தீர்களா! தாத்தா சொல்வது உண்மை தான் என்று உங்கள் இளம் உள்ளங்களுக்குப் புரிந்திருக்கும். மகா வித்வானுடைய பாட்டு உள் உணர்ச்சியோடும், பக்தியோடும் பாடாதபடியால் அரசன் நெஞ்சையும் தொடவில்லை, சந்நிதானத்தில் இருந்த தெய்வங்களின் கண்களிலும் நீர் சுரக்க வில்லை. அரசன் மகனைச் சோதிப்பதற்குத் தான் சொல்லுகிறான்: 'நம்முடைய சிலைகளுக்கு உயர்ந்த சங்கீதத்தின் பயிற்சி இல்லை' என்று. ஆனால் புத்தி மிகுந்த சந்திரமதி புரிந்து கொண்டு, 'வித்துவான் தெய்வ பக்தியுடன் பாட வில்லை' என்று அரசன் மனதில் இருந்ததை எடுத்து வெளிப்படையாக மறுமொழி கூறி விட்டாள்.

ஆடம்பர வெளிவேஷம் வேறு; உண்மையான பக்தி வேறு. அதற்குச் சரியான உதாரணம்—வாசனையில்லாத வெட்டிப்பூமாலைக்கும் தாமரைக்குளத்தில் மணம் மிகுந்த தாமரைப் புஷ்பத்துக்கும் உள்ள வித்தியாசம் தான்.

பெப்ருவரி 5க் தேதி யன்று வந்திருக்கும் 'சுதரிசனத் தைலம்' என்ற கதை எல்லோரும், படித்துக் கொண்டே யிருக்க வேண்டிய கதை.

உண்மையில் அப்படி ஒரு தைலம் இருக்கிறது என்றால் நம்மில் எவ்வளவு பேர்கள் தைரியமாய் அதைப் பூசிக் குளிக்கச் சம்மதிப்போம்! ஏன், எனக்குத் தோன்றுகிறது, ஒருவர் கூட இல்லை யென்று!

ராஜாஜி கதையில் குருவே, சிஷ்யனிடம் 'இது நமக்கு உதவாது' என்கிறது தான் மிக்க கருத்துள்ள வாக்கியம். யோசித்துப் பாருங்கள். ஆனால் அதில் சிலர் பேசிக் கொண்டது போல, 'எவ்வளவு படித்தாலும் மனத்தைக் காப்பது கஷ்டம். இந்தத் தைலத்தைப் பூசிக் கொண்டு குளிக்கும் சக்தி நமக்கு எப்பொழுது வரப்போகிறது!' என்று ஒவ்வொருவரும் யோசிக்க வேண்டும்.

தைரியமாக அந்தத் தைலத்தைப் பூசிக் குளித்துத் தூய்மையான எண்ணங்களுடன் எப்பொழுதும் நாம் பிரகாசிக்க முயல வேண்டும். அதற்கு மிஞ்சிய திருப்தியும் சுகமும் உண்டா! நீங்கள் சுதரிசனத் தைலத்தை எப்பொழுது பூசிக் குளித்தாலும் கவலையே யில்லை! உங்கள் உள்ளும் புறமும் பிரதிபலித்துப் பிரகாசிக்கும்!

நம் நாட்டுக்கு வருங்காலக் காப்பாளர்களாகிய நீங்கள் தேக ஆரோக்கியத்தை முக்கியமாய்க் கவனிக்க வேண்டும் என்பதே தாத்தாவின் கருத்து.

சென்னை
10—2—56

சுந்தரம்

★

பெப்ருவரி 26-க் தேதி 'கல்கி' இதழில் வெளியாகியுள்ள 'மரப்பாலம்' தங்களுடைய அறிவுள்ளத சிறுகதைகளில் முதல் தரம் வகிப்பவைகளில் இடம் பெற்றுவிட்டது. ஒரு மரப்பாலம், ஒரு குற்றவாளி எனப்படுபவன், ஒரு நாய் இம்மூன்றும் அந்தக் காவியத்தே மாறி மாறி வரும் மறக்க முடியாத சிறந்த பாத்திரங்கள். ஒன்று உயிரற்றது. இரண்டாவது உயிரும் நாவன்மையும் கொண்டவன். மூன்றாவது உயிர் உள்ள ஆனால் நாவன்மை யற்ற (இங்கு நான் குறிப்பிடுவது பேச்சு) பிராணி. ஒன்று நீங்கலின் பிற பேசா.

"நாய் நன்றியுள்ள பிராணி" என்று சொல்கிறது சிறுவர் பாடம். ஆனால் கதையிலோ நாய் நன்றியுள்ளதாக யிருந்தாலும் எஜமானைக் காட்டிக் கொடுக்கிறேம் என்று தெரிந்து கொள்ள முடியாத நிலையில் இருந்தது. அதன் நன்றி விசுவாச உணர்ச்சி வசத்தால் மக்கள் இடையே சிலர் நன்றிக் கடன் பட்டிருந்தாலும் அதை மறந்து உதவி செய்தவர்களையே இண்டாட வைக்கும் நிலைக்குக் கொண்டு வந்து விடுவது நல்லதா என்று கேள்வி கேட்பது போலப் பட்டது, கதையின் முடிவு. குற்றவாளி யகப்பட்டாலும் (அவன் நாயின் உதவியாலே) அந்த நாய் சட்டக் காவலர்களுக்கு உதவி செய்ததை, மறந்து விட்டனர் அவர்கள். நன்றிக் கடனைத் திருப்பிய விதம் பரிதாபமானது. நல்ல சிறு கதையென்பது சிந்தனையைக் கிளறுவது தான். சிறந்த முறையில் சிந்திக்க வைத்ததற்கு என் நன்றி.

ஹைதராபாத்
26—2—56

ர. பத்மநாபன்



# எக்லா

## தென் இந்தியா விரும்பும் டால்க்!

***தெம்பூட்ட, மணமளிக்க தனிப்பட்ட தயாரிப்பு***

இந்த பரத நாட்டியக்காரியைப்போல், நீங்களும் தென்னாட்டின் அதி உஷ்ண கால நிலையிலும்கூட குளுமையும் இதமும் பெறலாம். மனோரம்மிய மணம் பெற்ற எக்லா டால்க் உபயோகித்தால் குளுமையான நுண்ணிய சுகந்தத்திற்கு இந்த ஒப்புயர்வற்ற டால்க்கை அடிக்கடி தாராளமாக உபயோகியுங்கள்

***மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட***

கால்கேட்

# எக்லா

## டால்க் பவுடர்




EC/6/3

# ரகுபதி  ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

## 17

**ராஜாஜி**

'ஆண்டவன் எனக்கு இதைச் சொன்னான்; அவன் குரல் கேட்டு இதைச் சொல்கிறேன்' என்று நான் அடிக்கடி சொல்லி வருவது புது விஷயம் அல்ல. ஆனால் ஆண்டவன் குரலை நான் கேட்டேன் என்று எப்படிப் பிறர்க்கு நிரூபிக்க முடியும்? காரியங்களின் பயனைக் கொண்டுதான் ருஜுப்படுத்த முடியும். சாட்சியம் காட்டித் தன்னை மெய்ப்பிக்க இடந் தந்தால் அதன் பிறகு அவன் பரம் பொருள் என்ற தன்மையை இழந்து விடுவான் அல்லவா?

ஆனபோதிலும் தன்னுடைய உண்மைப் பக்தனுக்கு 'எல்லாம் உனது' என்று முழு பாரமும் ஒப்படைத்து விட்ட அடிமைக்கு எத்தகைய அக்கினிப் பரீட்சையும் வெற்றியுடன் தாண்ட அவன் சக்தி தருவான். மிக்க கண்டிப்பான இந்த யஜமானனுக்கு ஐம்பது ஆண்டுகளாக 'உன் இஷ்டப்படி செய்' என்று எழுதிக் கொடுத்து விட்ட அடிமை நான். ஆண்டுகள் செல்லச் செல்ல அவனுடைய குரல் மிகத் தெளிவாக என் காதில் ஒலிக்கிறது. என்னை அவன் எப்போதும் கைவிட்டதில்லை. பேரிருள் மூடிய சமயங்களிலும் காப்பாற்றியிருக்கிறான். சில சமயங்களில் என் விருப்பங்களைப் புறக்கணித்தே என்னைப் பிழையினின்று தவிர்த்தருளியிருக்கிறான். எனக்குச் சுதந்திரமேயில்லாமலும் செய்திருக்கிறான். முற்றிலும் ஒப்படைத்து விட்ட மகிழ்ச்சியை நான் என்னென்று சொல்வது! எந்த அளவுக்கு அவன்பேரில் பாரம் போட்டேனோ அந்த அளவுக்கு என்னுடைய ஆனந்தமும் அதிகரித்து வந்திருக்கிறது.

[ஹரிஜன் 6—5—33]

மனிதன் ஒருவனுடன் ஆண்டவன் பேசுவதாவது! அது ஒருநாளும் இல்லை என்று யாரும் சொல்ல முடியாது. அப்படிச் சொன்னதாக நான் இதுவரையில் அறியவில்லை. இந்த உலகத்தில் யாரேனும் ஒருவனாவது ஈசன் எனக்கு நேரில் ஆணையிட்டான் என்று சொல்லி, அதை மெய்ப்பித்து விட்டால் அது மக்களுக்குப் பெரும் நன்மையாகும். அநேகர் இப்படிச் சொல்லிக் கொள்ளுவார்கள். ஆனால் நிரூபிக்க முடியாது. பலர் பொய்யைச் சொல்லி மோசம் செய்கிறார்களே என்பதற்காக உண்மையில் ஒருவன் —ஆண்டவன் குரலைக் கேட்டவன்— தன் அநுபவத்தை மறைக்கவேண்டிய அவசியமில்லை; கூடாது. வேஷதாரிகள் பலர் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களை நாம் என்ன செய்ய முடியும்? போலிகள் பலர் இருக்கிறார்களேயென்று, உண்மைச் சீலத்தை நாம் விட்டுவிட முடியுமா? அந்தராத்மாவின் சொற்படி உலகத்தில் பலர் செய்து வந்திருக்கிறார்கள். அதனால் உலகம் கெட்டுப் போனதில்லை. அது பிழையாயினும் சரி, உண்மையில் ஆண்டவனுடைய குரலாயினும் சரி அதனால் உலகம் அழிவு அடைந்ததில்லை.

அந்தராத்மாவை உண்மையில் உணர்ந்து தெளிவதற்குக் கடினமும் நீடித்ததுமான அப்பியாஸங்கள் வேண்டும். அப்படிப் பயிற்சி பெற்றவனுக்கு, இது உண்மையில் அந்தராத்மாவின் குரலா அல்லது போலிக் குரலா என்பது எளிதில் தெரிந்துவிடும். மேலும் வேஷதாரிகளை உலகம் சீக்கிரமே கண்டுகொண்டுவிடும். ஆனபடியால் என்னைப் போன்ற ஒரு ஏழை இம்மாதிரிப்

பிடிவாதமாய்ச் சொல்லி வருவதனால் தீமை ஒன்றும் விளையாது. உண்மையில் நம்பி, என் அந்தராத்மாவிடமிருந்து வந்த செய்தியை நான் விளக்குகிறேன். இதனால் யாரும் ஏமார்ந்து போய் உலகத்துக்குத் தீமை நேராது.

[ஹரிஜன் 18—3—33]

ஆண்டவன் சொன்னது, மனச்சாட்சி, சத்தியம், அந்தராத்மா, உள்ளம் சொன்னது இவை யெல்லாம் எனக்கு ஒன்றேயாகும். நான் வடிவம் எதையும் கண்டதில்லை. காண முயன்றதும் இல்லை. என்னைப் பொறுத்த மட்டில் ஆண்டவன் வடிவமற்றவன். நான் கேட்டது வெகு தூரத்தில் பேசியது போன்ற ஒரு குரல். ஆயினும் மிக அண்மையில் இருந்ததாகவே தோன்றிற்று. ஒரு மனிதன் என்னிடம் பேசினால் எப்படியிருக்குமோ அப்படியே யிருந்தது. அதைப் பிரமை என்று சொல்ல முடியாது. குரல் என் காதில் கேட்ட சமயத்தில் நான் தூங்கவுமில்லை, கனவு கண்டு கொண்டிருக்கவும் இல்லை. அந்தக் குரல் கேட்பதற்கு முன் எனக்குள் ஒரு பெருங் குழப்பமாக இருந்தது. திடீரென்று அந்தக் குரல் காதில் பட்டது. கவனித்துக் கேட்டேன். இது உண்மை அந்தராத்மாவின் செய்தியே என்று தீர்மானித்துக் கொண்டேன். உடனே குழப்பம் நின்று விட்டது. உபவாசத்தின் காலமும் தேதியும் மணியும் நிச்சயித்து விட்டேன். நிச்சயித்து விட்டதும் உள்ளத்தில் ஆனந்தம் நிறைந்தது. இது நேற்றிரவு பதினொரு மணிக்கு மேல் நள்ளிரவுக்கு முன் நிகழ்ந்தது. அதன் பேரில் நிம்மதியடைந்து எழுதினேன். அதைத்தான் அனைவரும் அறிவார்கள்.

நான் கேட்டது ஆண்டவன் குரல், என்னுடைய பிடிவாதத்தினால் உண்டான பிரமையல்ல என்பதை நான் இதற்குமேல் என்ன சொல்லி நிரூபிக்க முடியும்? சந்தேகப் படுகிறவர்களை நான் திருப்தி செய்ய இயலாது. என்னிடம் வேறு சாட்சியம் ஒன்றும் இல்லை. அவர்கள் இது பிரமை என்றே சொல்லிப் போகட்டும். பிரமையாகவும் இருக்கலாம். ஆனாலும் உலகம் முழுவதும் ஒன்று சேர்ந்து பிரமை என்றாலும் ஆண்டவன் குரலே என்று நான் நம்புவதை மாற்ற இயலாது.

[ஹரிஜன் 8—7—33]

# படித்துப் பாருங்கள்!

## கீதைப் பேருரைகள்

காந்தி மகானின் சீடரான வினோபா அடிகள் உலகம் வியக்கும் நிலப் புரட்சியைச் செய்து வருகிறார். வினோபா அடிகள் சாந்தியையும் சத்தியத்தையும் போதித்து அறநெறியில் அப்புரட்சியை இயற்றி வருகிறார். இதற்கு வேண்டிய ஆத்ம பலம் அடிகளுக்கு எங்கிருந்து வந்தது என்றால் பகவத் கீதையிலிருந்துதான் என்று துணிந்து கூறலாம். அவரே, "என் உடல் தாயின் பாலினால் வளர்ந்திருப்பதைவிட அதிகமாய் என் உள்ளமும் அறிவும் கீதையாம் பாலினால் வளம் பெற்றிருக்கிறது" என்கிறார்.

அதனால் அவர்கள் கீதையில் உள்ள பொருள்களைக் கொண்டு விண்டு உரைக்கும் போது மெய்சிலிர்க்கிறது. இருபத்து மூன்று ஆண்டுகளுக்கு முன்பு சிறையிலிருந்த போது அரசியல் கைதிகளுக்கு ஒரு அத்தியாயத்துக்கு ஒன்றாகப் பதினெட்டு சொற்பொழிவுகள் மராத்தியில் நிகழ்த்தினார். அவற்றின் தமிழ்த் தொகுப்பே இந்நூல். கீதைப் பேருரைகள் பல மொழிகளிலும் வெளிவந்திருக்கின்றன. பல்லாயிரக்கணக்கான மக்கள் படித்து, பயனும் இன்பமும் அடைந்திருக்கின்றனர். தமிழிலும் ஏற்கனவே ஒரு முறை வெளியாகி யிருக்கிறது. இரண்டாம் பதிப்பு இப்பொழுது வெளி வந்திருப்பது. விலை மிகக் குறைவாகவே வைத்திருக்கிறார்கள். ஒரு ரூபாய்தான். இந்தப் பதிப்பை ஏராளமான பேர் வாங்கிப் படித்துப் பயன் அடைவார்கள் என்று நம்புகிறோம்.

கிடைக்குமிடம்: சர்வோதயப் பிரசுராலயம், தஞ்சாவூர்.

## தமிழ்நாடு டைரக்டரி—யார், யார்?

முன் காலத்தில் வாழ்க்கை முறை வேறு மாதிரி யிருந்தது. அதற்குத் தக்கபடி நாள், நட்சத்திரம், திதி, பண்டிகை நாட்கள் ஆகியவற்றைக் குறித்துப் பஞ்சாங்கமாக வெளியிட்டார்கள். வாழ்க்கைத் தேவைக்குப் போதுமாக இருந்தது. ஆனால் இன்று அது போதவில்லை. நம் நாட்டில் ஒவ்வொரு ஊரிலும் யார் வர்த்தகப் பிரமுகர்கள், யார் அரசியல் வாதிகள், யார் சட்டசபை அங்கத்தினர்கள், ஜில்லாவின் விஸ்தீரணம் என்ன, ஜனத்தொகை எவ்வளவு, சரித்திரம் முக்கியத்துவம் உண்டா ஆகிய ஒன்று, இரண்டா பலவகைச் செய்திகள் பல சமயங்களில் தெரிந்து கொள்ள வேண்டி நேரிடுகிறது. இப்படித் தமிழ் நாட்டைப் பற்றிய தகவல்களைத் திரட்டி, சென்ற மூன்று ஆண்டுகளாக வெளியிட்டு வருகிறார்கள். இப்புத்தகம் வர்த்தகப் பெருமக்கள், கம்பெனி உத்தியோகஸ்தர்கள், பள்ளிக்கூட ஆசிரியர்கள் ஆகிய பலருக்கும் மிக உபயோகமாக இருக்கும்.

பிரசுரித்தவர்கள்: இசே பப்ளிஷர்ஸ் 11/572 பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி, சென்னை—5; விலை: ரூ. 3—8—0.

உங்கள் சுவைக்கு உகந்தது







சுகாதார முறையில் நிரப்பப்பட்டது
கையினால் தொடப்படாதது

துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், கர்நூல்



# நரை மயிருக்கு விடைகொடுத்து விடுங்கள்

ஹென்ருல்

நிரந்தரமாக நரையை நீக்குகிறது

"பிரதி செவ்வாய் இரவு 8-30 மணிக்கு, ரேடியோ சிலோனின் 41 மீட்டரில் 'ஷாமே மௌஸிகி' என்ற பிரபல நிகழ்ச்சியைக் கேளுங்கள்."



# ஒவ்வொரு குடும்பத்திலும் அன்றாடம்

# ஓரணா அதிகம்

## சேமிக்கட்டும் . . . . .

ஒவ்வொரு இந்தியக் குடும்பத்திலும் அன்றாடம் ஓரணா போன்ற சிறுதொகையை அதிகப்படியாக சேமிக்கத் தொடங்கினாலும்கூட அவை மொத்தமாக சிறு சேமிப்பு ரூபத்தில் மாதம் 1 க்கு ரூ. 13.5 கோடியாகவும், வருடம் 1 க்கு ரூ. 162 கோடியாகவும் வளர்ந்துவிடுகிறது. கோடிக் கணக்கான மக்களின் சிறு சேமிப்புகளினால் நம்நாட்டில் உத்தேசிக்கப்பட்டுள்ள அபிவிருத்தித் திட்டங்களையெல்லாம் நடத்தப்போதிய நிதி வசதி கிடைக்கும். நேஷனல் சேவிங்ஸ் சர்டிபிகேட்டுகளும், நேஷனல் பிளான் சர்டிபிகேட்டுகளும் சிறுதொகையான ரூ. 5 மதிப்பில் கூடக் கிடைக்கின்றன என்பது நினைவிலிருக்கட்டும்.

**இந்திய அரசாங்கத்தின்**

**சிறு சேமிப்பு திட்டத்தில்**

**முதலீடு செய்யுங்கள்.**

12 வருட
நேஷனல் சேவிங்ஸ் சர்டிபிகேட்டுகள்

10 வருட
டிரெஷரி சேவிங்ஸ் டிபாஸிட் சர்டிபிகேட்டுகள்

10 வருட
நேஷனல் பிளான் சர்டிபிகேட்டுகள்

15 வருட
ஆன்வியுடி சர்டிபிகேட்டுகள்

போஸ்டாபீஸ் சேவிங்ஸ் பாங்க் டிபாஸிட்டுகள்

மேலும் விவரங்களுக்கும் இம் முதலீடுகள் சம்பந்தமான விதிகளுக்கும் விண்ணப்பித்துக் கொள்ள நேஷனல் சேவிங்ஸ் கமிஷனருக்கு அல்லது உங்கள் சமஸ்தானத்தைச் சேர்ந்த ரீஜனல் நேஷனல் சேவிங்ஸ் ஆபீஸருக்கு எழுதவும்.

DA 55/164 TM




அத்தியாயம் 38

## ஏமாற்றம்

அந்தப் புத்தகத்தையும் இந்துவின் படத்தையும் எடுத்துக் கொண்டு நேரே மிரியத்தின் வீட்டுக்குப் போனேன். அவளுக்கு 'கேம்பிரிட்ஜி'ல் எல்லோரையும் தெரியும். அவள்மூலம் பேராசிரியர் தாம்ஸன் இருக்குமிடம் தெரிந்து விடும் என்ற நம்பிக்கை எனக்கு இருந்தது. என் நம்பிக்கையும் வீண் போகவில்லை.

மிரியத்திடம் அவரைப் பற்றி விசாரித்த உடனேயே தானே அவரிடம் அழைத்துப் போய் அறிமுகம் செய்து வைப்பதாக முன் வந்தாள். "எதற்காகத் திடீரென்று அவரைச் சந்திக்க விரும்புகிறீர்கள்? இந்தியாவைப் பற்றி அவரிடம் விசாரிப்பதற்காகவா?" என்று கேட்டாள்.

"இந்தியாவைப் பற்றி அல்ல. இந்துவைப் பற்றி!" என்றேன்.

அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. பிறகு மிரியத்துக்குப் படத்தைக் காட்டி விவரமாக விளக்கினேன். அவளும் ஆச்சரியப் பட்டாள். என்னிடமிருந்த இந்துவின் படத்தையும் பத்திரிகையில் வந்த படத்தையும் வெகு நேரம்கூர்ந்து பார்த்து விட்டு அது இந்துதான் என்று அவளும் தீர்மானித்தாள். மறு நாள் நாங்கள் இருவரும் தாம்ஸனைச் சந்திக்கப் போவதாகத் தீர்மானித்தோம்.

தாம்ஸன் தம்பதிகள் மிகவும் அநுதாபத்தோடு, என் நிலையைப் புரிந்து கொண்டு பிரியமாகப் பேசினார்கள்.

"அவர்களை நான் மஹாபலிபுரத்தில் சந்தித்தது உண்மைதான். அவர்கள் வீட்டுக்குப் போய் ஒரு நாள் 'டீ' கூடச் சாப்பிட்டோம். அந்த இன்னொரு பெண் மிக நன்றாக ஆங்கிலம் பேசினாள். அவர்கள் சென்னையில்தான் இருக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய விலாசம் என்னிடமில்லை. எப்படியோ கெட்டுப்போய் விட்டது. உங்களுக்கு இந்த உதவி செய்ய முடியாமல் இருப்பதற்கு மிகவும் வருந்துகிறேன். மஹாபலிபுரத்தில் எடுத்த படங்கள் என்னிடம் இருக்கின்றன. வேண்டுமானால் அவற்றைத் தருகிறேன்" என்று கூறி, இரண்டு மூன்று படங்களை என்னிடம் கொடுத்தார் மிஸ்டர் தாம்ஸன்.

ஏமாற்றமடைந்த உள்ளத்துடன் என் அறைக்குத் திரும்பி வந்தேன்.

இந்தச் சமயத்தில்தான் அரவிந்தின் படிப்பு முடிந்து அவன் இந்தியா திரும்பிக்கொண்டிருந்தான். அவன் என்னுடைய தேசத்துக்குத்தான் சென்றான். ஆனால் தாய் நாட்டுக்குச் செய்தியனுப்ப எனக்கு அங்கே யார் இருந்தார்கள்? அரவிந்த் சென்ற தினத்தன்று எனக்கு ரொம்ப மனம் சோர்ந்து விட்டது.

அன்று முதல் நான் இந்தியா செல்லும் நாளை மிக ஆவலுடன் எதிர்பார்க்கத் தொடங்கினேன். ஒவ்வொரு நாள் முடியும் போதும் 'அப்பா! ஒரு நாள் கழிந்து விட்டது' என்று ஆறுதலுடன் பெருமூச்சு விடுவேன்.

இரண்டாவது பரீக்ஷையும் முடிந்து நான் இந்தியா புறப்பட ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தேன். கப்பல் பயணத்துக்கு டிக்கெட் கிடைப்பது சிரமமாக இருந்தது.

ஆனந்தி

ஆகஸ்ட் மாதம் பரீட்சை முடிந்தது. நான் இந்தியாவுக்கு உடனே திரும்பக் கூடாதென்று விதி சதி செய்துவிட்டது. 1939-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் தேதியன்று உலக மகாயுத்தம் ஆரம்பமாகியது. அப்போது நான் அடைந்த வேதனையை எழுத்தினால் விவரிக்க முடியாது. எந்தக் கப்பலிலும் இந்தியா திரும்ப இடம் கிடைக்கவில்லை.

இந்துவுக்கு நான் வாக்குறுதி கொடுத்ததும், அவள் எனக்காக யுகம் யுகமாய்க் காத்திருப்பேன் என்று கூறியதும் நினைவுக்கு வந்து தென்பூட்டி வந்தன.

ஒரு விதத்தில் யுத்தத்தின் போது நான் இங்கிலாந்தில் இருக்க நேர்ந்தது என்னுடைய அதிர்ஷ்டமென்று நான் சொல்ல வேண்டும். எனக்கு அந்த மாதிரி அனுபவங்கள் வாழ்நாளில் வேறு எப்படிக் கிட்டியிருக்க முடியும்? அந்த அனுபவங்களையெல்லாம் இப்போது நினைக்கும் போது ஒருவித ஆனந்தம்கூட உண்டாகிறது. ஒரு போர் வீரன் தான் ஈடுபட்டிருந்த யுத்தத்தைப் பற்றிப் பின்னால் நினைந்துப் பார்க்கும் போது அவனுக்கு மகிழ்ச்சிதானே உண்டாகும். நான் அடைந்த காயங்களைப் பற்றி நினைக்கும்போதுகூட வருத்தம் உண்டாகாது. பெருமையே உண்டாகும். அந்தமாதிரி லண்டன் நகரில் வெடிகுண்டுகளின் பயங்கரங்களுக்கு மத்தியில் காலம் கழித்ததை நினைக்கும் போது எனக்குப் பெருமைதான் உண்டாகிறது.

மேலும் அப்போது இங்கிலாந்தில் நடந்த யுத்தம் பழைய கால யுத்தம் மாதிரி படை வீரர்களுடைய சண்டை அல்ல. ஒவ்வொரு பிரஜையும் யுத்தத்தில் நேர்முகமாகச் சம்பந்தப் பட்டிருந்தார்கள். எந்தச் சமயத்தில் எங்கே குண்டு விழும்? எங்கே நெருப்புப் பற்றிக் கொள்ளும் என்பதை யாரால் கூற முடியும்?



யுத்தம் ஆரம்பித்த புதிதில் எனக்கு இதெல்லாம் தெரிந்திருக்கவில்லை. எங்கேயோ ஐரோப்பாக் கண்டத்தில் மகத்தான சண்டை நடந்து கொண்டிருந்தது. அதற்காக எனக்கு இந்தியா திரும்பக் கப்பலில் இடம் கிடைக்கவில்லை என்னும் விஷயம் புதிராகவே இருந்தது.

அக்டோபர் மாதத்திலிருந்து பரபரப்பான செய்திகள் வரத் தொடங்கின. ஸ்காட்லாந்தில் உள்ள கப்பல் படைத் துறைமுகத்தில் "ராயல் ஓக்" என்னும் பெரிய கப்பல் ஒரு ஜெர்மானியக் கப்பலினால் மூழ்கடிக்கப்பட்டது. அதிலிருந்த எழுநூறுக்கு அதிகமான கடற்படை வீரர்கள் இறந்து விட்டார்கள்.

இங்கிலாந்து முழுதும் பரபரப்பு ஏற்பட்டது. தூங்கிக் கொண்டிருந்தவர்கள் எல்லோரும் விழித்துக் கொண்டார்கள். என்னைப் போலவே யுத்தம் இங்கிலாந்தை நெருங்கிவிட்டது என்பதை அதுவரை அறிந்து கொள்ளாதவர்கள் எல்லாம், யுத்தத்துக்குத் தயாராக ஆரம்பித்தார்கள்.

"இங்கிலாந்தின் கடற்படை என்ன செய்கிறது?" என்று கேள்வி கேட்டுப் பத்திரிகைகள் அரசாங்கத்தைக் காரசாரமாகத் தாக்கித் தலையங்கங்கள் எழுதின.

நான் அப்போது லண்டனில் பரீட்சை எழுதி விட்டுத் திரும்ப கேம்பிரிட்ஜுக்கே வந்திருந்தேன். ஸ்ரீமதி ஹார்வியும் நானும் இந்த யுத்த நிலையைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம்.

"இங்கே யுத்தம் நடப்பதால் நான் இந்தியா திரும்ப இடம் கிடைக்கவில்லை. இன்னும் எத்தனை நாட்கள் நான் இப்படித் திண்டாட வேண்டுமோ தெரியவில்லை. ஒன்றும் செய்யாமல் இங்கே எப்படி இருப்பது!" என்று கூறினேன்.

"நீங்கள் ரொம்பச் சுயநலக்காரர் மிஸ்டர் ரங்கதுரை. நீங்கள் உங்கள் ஒருவரைப் பற்றியே நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள். உங்களைப் பிரிந்து

உங்கள் காதலி கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பாள் என்பதைத் தவிர வேறு எதையும் நீங்கள் யோசிக்கவில்லை. இங்கே உள்ள நிலைமையைச் சிறிது எண்ணிப் பாருங்கள். எத்தனை பெண்கள் தங்கள் கணவன்மார்களையும், பிள்ளைகளையும், தந்தைகளையும் இழக்கப் போகிறார்களோ? 'ராயல் ஓக்'கிலிருந்த எழுநூற் றைம்பது பேருடைய குடும்பத்தினரின் நிலைமையை நினைத்தால் எனக்கு ரொம்பக் கஷ்டமாக இருக்கிறது'' என்றார் அவர்.

நான் மௌனமாக இருந்தேன். ஒரு தேசம் முழுதும் கஷ்டப்படும் போது ஒரு தனி மனிதனின் கஷ்டங்களுக்கு மதிப்பில்லைதான் என்று நினைத்தேன். போகப் போக இந்த எண்ணம் உறுதியாயிற்று.

இரண்டு நாட்களுக்குப் பின் இங்கிலாந்தின் கடற்படை மீது ஜெர்மானிய விமானங்கள் குண்டுகளைப் பொழிந்தனவென்றும் 'ஸௌதாம்டன், எடின்பர்க், மோஹாக்' என்றும் கப்பல்கள் சேதமடைந்த போதிலும் நான்கு எதிரி விமானங்கள் வீழ்த்தப் பட்டன என்றும் செய்திகள் பத்திரிகைகளில் பிரசுரமாயின. ஸ்ரீமதி ஹார்விக்கு இந்த விவரம் சற்று மன ஆறுதலை அளித்தது.



நான் மீரியத்துடன் ஒரு நாள் என் நிலைமையைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன். அப்போது பேராசிரியர் ஆன்ட்ரூஸ் அங்கே வந்தார். அவர் என் கஷ்டத்தை உணர்ந்து கொண்டார்.

''போகப் போக யுத்தநிலை இன்னும் தீவிரமாகத்தானே இருக்கும்? இப்போதே என்னால் திரும்ப முடியாவிட்டால் இன்னும் கொஞ்ச நாட்களானால் எப்படிப் போக முடியும்? கடலில் வேறு அபாயங்கள் அதிகமாகி விடும் அல்லவா?'' என்றேன்.

''ஆம்! இப்போதே கப்பல் பிரயாணம் ரொம்ப அபாயகரமாகி விட்டது. நீ ஒன்று செய். லண்டன் சென்று 'இந்தியா ஹவுஸில்' உன் நிலைமையைப் பற்றிச் சொல்லு. அவர்கள் உனக்கு ஏதேனும் ஏற்பாடு செய்வார்கள்'' என்று யோசனை கூறினார்.

இது எனக்குச் சிறந்த யோசனையாகப் பட்டது. மறுபடியும் நான் லண்டன் நகருக்குச் சென்ற பிறகு என்னுடைய கவலைகளை நான் மறக்கும்படி நேரிட்டது. லண்டன் நகரில் அனைவரும் இங்கிலாந்தை எப்படிக் காப்பது என்ற கவலையில் மூழ்கியிருந்தார்கள். பிரிட்டன் அந்தச் சமயத்தில் யுத்தத்துக்குச் சிறிதும் தயாராயில்லை. விமானங்கள் கிடையாது. தளவாடங்கள் இல்லை. வீரர்கள் போதுமான அளவு இல்லை. பணம் இல்லை. இப்படி எல்லாம் 'இல்லை'யாகவே இருந்தது. அந்தச் சமயத்தில் என்னைப் பற்றி யார் கவலைப் படுவார்கள்? உண்மையில் எனக்கு 'இந்தியா ஹவுஸ்'க்குப் போய் என் நிலையைச் சொல்லிக் குறைப் பட்டுக் கொள்ள வெட்கமாக இருந்தது. ஆனால் இந்துமதியின் முகம் எதிரே வந்து நின்று ''சீக்கிரம் வரமாட்டீர்களா?'' என்று கேட்பது போலத் தோன்றி என்னைத் தூண்டியது.

அவர்கள்தான் என்ன செய்ய முடியும்? தங்களால் இயன்றதைச் செய்ய உறுதி கூறினார்கள். நான் அந்த உறுதிமொழியுடன் திரும்ப கேம்பிரிட்ஜ் சென்றேன். லண்டனுக்கே வந்து அங்கேயே இருக்க வேண்டுமென்று நினைத்தேன். ஆனால் அங்கு அறைகளே கிடைக்கவில்லை. ஹோட்டல்களில் தங்குவதென்றால் செலவைச் சமாளிப்பது அசாத்தியம். இப்படி நான் தத்தளித்துக்கொண்டிருந்த போது ஐரோப்பா முழுதுமே யுத்த பயத்தினால் நிலை கலங்கித் தவித்துக் கொண்டிருந்தது.

கேம்பிரிட்ஜிலும் வியக்கத் தக்க மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. படித்துக் கொண்டிருந்த இளைஞர்களில்

பெரும்பாலோர் படை வீரர்களாகச் சேர்ந்துவிட்டனர். ஜான் ஆன்ட்ரூஸும் படையில் சேர்ந்து விட்டான். அவர்கள் வீட்டில் அதைப் பற்றிப் பெருமையாகவே பேசிக் கொண்டார்கள். கவலைப் பட்டதாகவே தெரியவில்லை. அவர்களுடைய வீர உணர்ச்சி என்னையும் பிடித்துக் கொண்டு விட்டது. அதன் பிறகு நான் அதிகமாகக் கவலைப்படுவதை விட்டு விட்டேன்.

ஆனால் இது உண்மையா? கவலைப் படாமல் நான் இருந்தேனா? எப்போதும் சிரித்துக் கொண்டிருந்தேனா? நெஞ்சில் வேதனை ஏற்பட்ட போதெல்லாம் அதைச் சிரிப்பு என்னும் இரும்புக் கவசத்தால் அழுத்தி மூடியதன் சிரமம் எனக்கல்லவா தெரியும்! இந்துவின் நினைவு இடைவிடாமல் என் மனத்தைத் தின்று கொண்டிருந்ததே. அதை வெளியில் காட்டாமல் மறைத்து வைக்க என்ன பாடு பட்டேன். ஏன்? எனக்கே அது தெரியக் கூடாதென்று மூடி வைத்தேன். காயம் பட்டு விட்டால் அதைப் பார்க்கப் பயந்து கட்டுப் போட்டுக் கொள்வதில்லையா? அந்த மாதிரி என் வேதனையை நானே பார்க்காமல் கட்டி வைத்திருந்தேன்.

வேலையும் இல்லாமல் நேரத்தை வீணாக அடித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பது எனக்கு முள்ளின் மேலிருப்பது போல இருந்தது. இன்னும் சில மாதங்கள் சென்றால் செலவுக்குப் பணம் கூட இருக்காது.

இந்தச் சமயத்தில் ஒரு வரப்பிரஸாதம் போல 'இந்தியா ஹவுஸி'லிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் எனக்குக் கப்பலில் இட வசதி செய்து தர முடியவில்லை என்று வருத்தம் தெரிவித்திருந்தார்கள். அதற்குப் பதிலாக உடனே லண்டனுக்கு வந்தால் ஒரு சிறிய வேலை தருவதாகவும் அங்கிருந்தபடியே இந்தியா செல்லக் கப்பலில் இடத்துக்கு முயற்சி செய்யலாமென்றும் தெரிவித்திருந்தார்கள். எனக்கு இது உற்சாகமளித்தது. சரி! சாப்பாட்டுக் கவலையாவது இல்லாமலிருக்கலாம் என்ற சந்தோஷத்துடன் பேராசிரியர் ஆன்ட்ரூஸ் குடும்பத்தினரிடமும், ஹார்வி தம்பதிகளிடமும் விடை பெற்றுக் கொண்டு லண்டனுக்குச் சென்றேன்.

அதிர்ஷ்டவசமாக ஒரு அறையும் எனக்குக் கிடைத்தது.

நான் அங்கே சென்ற பிறகு நான்காவது கிறிஸ்துமஸ் வந்தது. நான் பார்த்த முதல் கிறிஸ்துமஸுக்கும், இதற்கும் எவ்வளவு வித்தியாசம்? முதல் கிறிஸ்துமஸ் விழாவில் லண்டன் நகரம் ஒரே ஒளி வெள்ளத்தில் மூழ்கி இருந்தது. இந்த விழாவின் போதோ "இருட்டடிப்பு" வைபவம் நடந்து கொண்டிருந்தது. தெருக்களிலும் வீதிகளிலும் இருட்டடிப்பு நடந்ததே தவிர லண்டன் நகரத்து மக்களின் உள்ளத்தில் வீர ஒளி சுடர் விட்டு எரிந்தது.

அந்த வருஷம் டிஸம்பர் மாதத்தில் ரஷ்யா பின்லாந்தின்மீது படையெடுத்தது. இத்தாலியில் முஸோலினி வேறு இங்கிலாந்துடன் சண்டையைத் துவக்க ஆயத்தமாக இருந்தார். அப்படியும் புது வருஷப் பிறப்பின் போது ஜனங்கள் உற்சாகமாகவே காணப் பட்டார்கள். ஆனால் பாவம்! அவர்களுக்குப் புது வருஷம் இன்னும் கடினமான வருஷமாக இருந்தது!

நானும் ரகுவும் ஒருநாள் எங்கள் அறையில் பேசிக் கொண்டிருந்தோம்.



நான் லண்டன் வந்த பிறகு செலவைக் குறைத்துக் கொள்வதற்காக நாங்கள் இருவரும் ஒரே அறையில் வசிக்க ஏற்பாடு செய்து கொண்டோம். நான் பட்ட கஷ்டங்களை அவனும் பட்டுக் கொண்டிருந்தான்.

"ரங்கதுரை! இப்படி எத்தனை நாள் இங்கே இருப்பது? பாழாய்ப்போன ஹிட்லர் நாம் போன பிறகு யுத்தத்தை ஆரம்பித்திருக்கக் கூடாதோ? அவன் தலையில் இடி விழ!" என்று சுத்தத் தமிழில் சாபம் கொடுத்தான்.

"ஏனப்பா இப்படி ஆத்திரப் படுகிறாய்? அவன் தலையில் ஒரு குண்டு விழ வேண்டுமென்று கூறினாலும் நடக்கக் கூடியதாக இருக்கும். நீ என்னமோ இடியை விழச் சொல்கிறாய். இந்த இங்கிலீஷ் காரர்களைப் பார்த்து நீ கொஞ்சம் பொறுமையாக இருக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். பாரேன்'

# புண்பட்டு வலிக்கும் கால்களுக்கு

## ஜாம்-பெக் தடவி சுகம் பெறச் செய்க

# Zam-Buk



ஜாம்-பெக் உலகின் மகோன்னதமான சருமக்களிம்பு. ஜாம்-பெக் சருமத்துவாரங்களுள் புகுந்து நோயுற்ற கால் தசைக்கு சுகம் ஊட்டி பலமும் தருகின்றது. ஜாம் பெக் சருமத்தை மிருதுவாக்கி, எரிச்சல் அல்லது ரணம் ஏற்படாமல் தடுக்கும். உங்கள் காலில் உபாத்திரவம் இருந்தால் ஜாம்-பெக் தடவி உடன் குணம் பெறுக. பிறகு பிரதி இரவிலும் உபயோகித்து பாத ஆரோக்கியத்தையும் அடையுங்கள். சரும நோய்களையும், காயங்களையும் ஆற்றுவதில் ஜாம்-பெக் அற்புத சக்தி வாய்ந்தது. ஜாம்-பெக்கில் இதர மதிப்பு வாய்ந்த ஔஷதப் பொருள்களுந் தவிர கிலோரோபில் அதன் நோயாற்றும் குணம், தசைநார் போஷாக்கு மற்றும் இதர குணங்களுடன் சேர்க்கப்பட்டுள்ளது.




FZY 37 TAM

மிருகக் கொழுப்பு சேர்வில்லை என்பதற்கு உத்திரவாதம்
ஜாம்-பெக்கினால் குணம் பெறுவீர்கள்
எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

மதராஸுக்கு ஸோல் ஏஜண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்

---

அதிக வசீகரமான

# அன்பளிப்புகள்

MORTON

# MORTON

## மார்ட்டன்

தரமான மிட்டாய்கள்

எத்தனை வீரர்கள் யுத்தத்துக்குப் போயிருக்கிறார்கள்? அவர்கள் குடும்பத்தினரெல்லாம் எப்படி அதைச் சகித்துக் கொள்கிறார்கள்? நீயும் நானும் ஆண் பிள்ளைகளாகப் பிறந்து விட்டு இப்படிக் கோழைகளாக இருக்கலாமா?''

''ஆமாம்! அவர்களுக்குத் தங்கள் தேசத்துக்காக உயிரை விடுகிறோமென்ற சந்தோஷமாவது இருக்கிறது. நாம் எங்கேயோ ஒரு கண்காணாத தேசத்துக்கு வந்து விட்டு இங்கே செத்துப் போவதில் என்ன பயன்?''

''இங்கே செத்துப் போய் விடுவோம் என்று நீ ஏன் தீர்மானித்து விட்டாய்? உன்னைத் தேற்றுவதே எனக்கு வேலையாகி விட்டது. சே! சே!''

''இல்லை துரை! நீயே சொல்லு. இங்கிருந்து கப்பலில் இடம் கிடைத்து நாம் போனாலும் நமது கப்பல் யுத்தக் கப்பல்களால் தாக்கப்படாது என்பது என்ன நிச்சயம்? என் மனைவி கடிதத்துக்குக் கடிதம் கண்ணீர் விட்டு எழுதுகிறாள். பாவம்! அவளுடைய கதியை நினைத்துப் பார்.''

''ரகு! நீ என் நிலையை நினைத்துப் பார். உனக்காவது கடிதம் வருகிறது. எனக்கு அதுவும் இல்லை. நான் பொறுத்துக் கொண்டு தானே இருக்கிறேன். இப்படிக் கவலைப் படுவதால் நிலையைச் சீர்திருத்திவிட முடியுமா?'' என்றேன்.

அதன் பிறகு ரகு அப்படியெல்லாம் பேசுவதை நிறுத்திக் கொண்டான்.

## அத்தியாயம் 39

# கப்பல் கிளம்பியது

டென்மார்க், நார்வே இரண்டு தேசங்களும் 1940ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் ஜெர்மனிக்குப் பணிந்து விட்டன. யுத்தநிலைமை இன்னும் சீர்கேடடைந்து வந்ததே தவிர, நின்றுவிடுமென்பதற்கு ஆதாரமே காணவில்லை. கப்பல்களில் இட நெருக்கடி மிகவும் அதிகரித்தது. எங்களுக்கு விமோசனம் இருப்பதாகவே தெரியவில்லை.

ஒரு நாள் என் மனம் கூட ரொம்பத் தளர்ந்து விட்டது. ரகுவைப் பார்த்து ''நீ சொன்ன மாதிரி தான் நடக்கும் போலிருக்கிறது. இந்தியா திரும்பப் போகிறோமென்ற எண்ணம் என்னை விட்டுப் போய் விட்டது'' என்றேன்.

''அந்த ஹிட்லர் மட்டும் என் எதிரில் வந்தால் அவன் சிண்டைப் பிடித்து...'' என்று ரகு ஹிட்லரைத் திட்டத் தொடங்கினான். இதைக் கேட்டு என் காது புளித்துப் போயிருந்தது.

''நீ என்னிடம் சொல்வதோடு நிறுத்திக் கொள்ளாதே. ஹிட்லரைத் தேடிக் கொண்டு போக ஏற்பாடு செய். உனக்குத் துணையாக நானும் வருகிறேன். இருவருமாக ஹிட்லரின் சிண்டைப் பிடிக்கலாம்'' என்றேன். உடனே அவனுடைய உணர்ச்சிப் பிரவாகமும், சொற்பிரவாகமும் தடைப் பட்டு நின்று விட்டன.

நான் பத்திரிகையைப் புரட்டிக் கொண்டே, ''இந்த ஸ்காண்டிநேவியாவைப் பற்றிப் பத்திரிகைகளில் படிக்கும் போதெல்லாம் எனக்கு அய்யாக்குட்டி என்னை நார்வே தேசத்துக்குப் போய் விட்டு வரச் சொன்னது நினைவுக்கு வருகிறது'' என்றேன்.

''ஆமாம்! நானுந்தான் ஸ்விட்ஜர்லாந்துக்கும், பிரான்ஸ் தேசத்துக்கும் போய் வேடிக்கை பார்த்து விட்டு இந்தியா திரும்ப வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். அதையெல்லாம் தான் இந்த ஹிட்லர் பாழடித்து விட்டானே. நீ தான் அவரை ஒன்றும் சொல்லக் கூடாதென்கிறாய்!''

நான் சிரித்தேன். அவனுடைய தர்க்கம் எனக்கு விளங்கவில்லை.

''என்னென்னவோ சொல்கிறாயே, ரகு! 'நார்விக்' நகரத்துக்காக நடந்த கப்பல் சண்டையில் ஆங்கிலேயர் காண்பித்த தீரம் உன் மனத்தைக் கவரவில்லையா? எனக்கு அவர்களுடைய வீரத்தைப் பார்க்கும் போது அவர்களோடு நானும் ஒருவனாக இருக்கக் கூடாதா என்று தோன்றுகிறது...''

''போதும்! போதும்! கப்பல் கப்பலாக மனிதர்களை ஏற்றி அனுப்பிச் சாகச் சொல்வதற்கு வீரம் என்றும் தீரம் என்றும் பெயரா? ஒரு செய்தி படித்தேன். கடலில் மூழ்கிக் கொண்டிருந்த கப்பலிலிருந்துகப்பல் தலைவர் தப்பிச்செல்பவர்களுக்குக் கைகளை ஆட்டி விடை கொடுத்தாராம். தப்பி வந்தவர்களில் ஒரு வீரர் அந்தக் கப்பலின் தலைவர் கடைசியாக ஒரு சிகரெட்டைக் கொளுத்துவதைப் பார்த்தாராம். எவ்வளவு சத்தம் போட்டும் அவர் உயிர் தப்ப மறுத்து விட்டாராம். இந்த மாதிரி தற்கொலை செய்து கொள்வதற்கு இந்த ஜனங்களெல்லாம் ஏதோ பிரமாதப் படுத்துகிறார்கள்!''

''தன் கப்பல் மூழ்கிய பிறகு அவருக்குப் பிழைத்து வர இஷ்டமில்லை. காயம்

பட்டுக் குற்றுயிராகக் கிடப்பவர்கள் நீரில் மூழ்கும் போது தான் மட்டும் பிழைத்துச் செல்வது கோழைத்தன மென்று அவருக்குத் தோன்றியிருக்கும். அவர் உண்மையில் ஒரு மகாவீரர் என்று நான் கருதுகிறேன்.''

''அப்படியானாலும் சரி'' என்றான் ரகு.

அந்த வருஷம் மே மாதத்தில் சேம்பர்லினுக்குப் பதிலாக வின்ஸ்டன் சர்ச்சில் பிரதம மந்திரியானார்.

பெல்ஜியமும், பிரான்ஸும் ஹிட்லருக்குப் பணிந்து விட்டன. கடைசியாக உலகப் பிரசித்திபெற்ற பிரிட்டிஷ் யுத்தம் தொடங்கி விட்டது. அந்த வருஷம் ஆகஸ்ட் மாதத்திலிருந்து நவம்பர் மாதம் வரையில் நாள்தோறும் இடைவிடாமல் இரவும் பகலும் மழை பொழிவதுபோல ஜெர்மன் விமானங்கள் குண்டுகளைப் பொழிந்தன. தினமும் இரவில் சுமார் இருநூறு எதிரி விமானங்களாவது லண்டன் நகரைச் சுற்றி வட்டமிட்டன.

முதல் மூன்று இரவுகள் அனைவரும் குண்டுகள் விழும் சப்தத்தைக் கேட்டுக் கொண்டு குழிகளில் பதுங்கிக் கொண்டிருந்தோம். எதிரி விமானங்கள் திரும்பத் தாக்கப்படுவதாகவே தெரியவில்லை. இதைக் குறித்து நான் வியந்தேன். ஆனால் பிறகு விமானங்களைத் தேடுவதற்காக ஆகாயம் முழுவதையும் ஒளி வெள்ளமாகச் செய்து கொண்டு சுற்றி வந்த 'ஸர்ச் லைட்'களின் கண்ணைப் பறிக்கும் ஒளியோடு எதிர்த் தாக்குதல் ஆரம்பமாயிற்று. எதிரி விமானங்களுக்கு அதிக சேதம் ஏற்படா விட்டாலும் ஜனங்களுக்கு அது மிகவும் திருப்தி யளித்தது.

ஆரம்பத்தில் சில நாட்கள் குண்டு வீச்சு என்றால் எல்லோருக்குமே பயமாக இருந்தது. பிறகு அதைப் பார்க்க வேண்டுமென்று தோன்றியது. அதன் பிறகு வாண வேடிக்கை பார்ப்பது போல் அலட்சியமாகி விட்டது.

குண்டு வீச்சுக்களை அலட்சியம் செய்வதற்காகவே ஜனங்கள் சினிமாக்களுக்கு அதிகமாகச் சென்றார்கள். தெருக்களில் எப்போதும் நடமாட்டம் இருந்து கொண்டேதான் இருந்தது. வழக்கம் போல் வேலைகள் நடந்து கொண்டுதான் இருந்தன. ஒரு சமயம் நாங்கள் ஒரு ஹோட்டலில் இரவு சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது அபாய அறிவிப்பு ஒலி எழுந்தது. யாரும் எழுந்து போகவில்லை. எல்லோரும் வழக்கம்போல் சாப்பிட்டு முடித்தோம். எப்போதையும் விட சிரிப்பும் கோலாகலமும் அதிகமாகவே இருந்தன. இரவு வேளைகளில் க்ஷேமமாக வென்று சாரமாகவும், ஜனங்கள் தெரிந்து கொண்டுமிருந்த குழிகளில் பதுங்குவதை விட வெளியிலிருந்து வேடிக்கை பார்ப்பதே சௌகரியமாக இருந்தது.

'பால் மால்,' 'ஸெயின்ட் ஜேம்ஸ் ஸ்ட்ரீட்,' 'பிக்கடில்லி' முதலிய இடங்களில் உண்டான சேதங்களுக்குக் கணக்கு வழக்கில்லை. தீப் பிடித்ததும் ஜனங்கள் வாய் திறக்காமல் அதை அணைக்க ஏற்பாடுகள் செய்வார்கள்.

ஒரு நாள் நானும் ரகுவும் இந்தியா ஹவுஸிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தோம். ரகுவுக்கும் அங்கே ஒரு சிறிய வேலை கொடுத்திருந்தார்கள். அவனுக்குக் கூட இந்தக் குண்டு வீச்சுக்களின் பயம் தெளிந்து விட்டது. அப்போது திடீரென்று அபாய அறிவிப்புச் சங்கு ஒலித்தது. நாங்கள் இருவரும் என்ன செய்யலாமென்று யோசனை செய்வதற்குள் மேலே ஆகாய விமானங்கள் பத்துப் பதினைந்து பறந்தன. நாங்கள் திகைத்து நிற்கையிலேயே குண்டுகள் அவற்றிலிருந்து விழ ஆரம்பித்தன. எல்லாம் மூன்று நிமிஷ நேரம் கூட இருக்கா தென்று நினைக்கிறேன். நின்ற இடத்திலிருந்து நகர முடியாமல் கால்கள் தளர்ந்து போனது மட்டும் ஞாபக மிருக்கிறது.. எங்களுக்குச் சமீபத்தில் ஒன்று விழுந்து வெடித்தது. அந்த வெடிக்



ஒரு பெண் :- பாட்டி, இப்பத்தான் உங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம், நீங்களே வந்து விட்டீர்கள். உங்களுக்கு நூறு ஆயுசு.

பாட்டி :- எனக்கு வயசு நூற்றைந்து ஆகி விட்டதே !



சப்தம் கேட்ட பிறகு தான் ஸ்தம்பித்துப் போயிருந்த என் மூளை வேலை செய்யத் தொடங்கியது. ரகுவின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு ஓடத் தொடங்கினேன். பத்தடி தூரம் ஓடுவதற்குள் அபாயம் நீங்கி விட்டதென்ற அறிவிப்பு ஒலித்தது.

பிறகு நாங்கள் நின்று வெடி விழுந்த இடத்தில் பற்றிக் கொண்டிருந்த நெருப்பை அணைக்க முயற்சிப்பவர்களுக்கு உதவி செய்தோம். பின்னர் மெள்ள நடந்து எங்கள் அறைக்குச் சென்றோம். இந்துவின் நினைவு எனக்கு அன்று மிக அதிகமாக வந்தது. எனக்கு ஏதாவது இன்று ஆகி விட்டிருந்தால் என் இந்து என்ன பாடு படுவாள். ஒரு முறை அவளைப் பார்த்து அவள் சந்தோஷமாக இருக்கிறாளென்பதைத் தெரிந்து கொள்ளாமல் இறந்து போகக்கூடாது. அப்படிப் போனால் என் ஆத்மா சாந்தி அடையாது. கடமையில் தவறி விட்டதாக எண்ணித் தவிக்கும். இனிமேல் இவ்வளவு அலட்சியமாக இருக்கக் கூடாது. கூடிய வரையில் ஜாக்கிரதையாக இருந்து இந்துவைப் பார்க்கப் போக வேண்டும். ஒரு முறை பார்த்து விட்டால் போதும். பிறகு என்ன ஆனாலும் மனம் சாந்தி அடைந்து விடும்' என்று நினைத்தேன். அன்று முதல் ஜாக்கிரதையாகவும் இருந்து வந்தேன்.

ஒருநாள் பிற்பகலில் ஒரு விமான குண்டு வீச்சு நடைபெற்றது. அன்று பலத்த சேதங்கள் ஏற்பட்டிருக்க வேண்டுமென்று அபாய அறிவிப்பு ஒலித்த கணக்கிலிருந்து தெரிந்தது. மாலையில் நாங்கள் மாணவர்கள் ஐந்து ஆறு பேராக லண்டனைச் சுற்றி வந்தோம்! அங்கங்கே அடிபட்டிருந்தவர்களுக்கு உதவி செய்தோம்.

லண்டனின் தென் பகுதிக்கு நாங்கள் சென்றபோது அன்று பிற்பகல் 'பெக்ஹாம்' என்ற இடத்தில் ஒரு பெரிய குண்டு விழுந்து வெடித்த இடத்தில் இருபதடி ஆழத்தில் ஒரு பள்ளம் ஏற்பட் டிருப்பதாகவும் கிட்டத்தட்ட முப்பது மூன்றடுக்கு வீடுகள் பொடிப் பொடியாகச் சிதறி விட்டன வென்றும் கேள்விப் பட்டோம்.

நாங்கள் சென்றபோது அங்கே கூட்டமாக இருந்தது. பள்ளத்தைப் பார்த்த போது, மனித குலத்துக்கு அதே குலம்






செய்யும் துரோகத்தை எண்ணி என் நெஞ்சு வெடித்து விடும் போலிருந்தது.

அங்கே இருந்த ஒரு பெண்மணியிடம் "இது எப்போது ஏற்பட்டது?" என்று திகைப்புடன் கேட்டேன்.

"நாங்கள் மத்தியானம் சாப்பாடு முடிந்ததும் எங்கள் வேலைகளைச் செய்து கொண்டிருந்தோம். அபாய அறிவிப்பு ஒலித்ததும் ஓடிப்போய்ப் பள்ளங்களில் ஒளிந்து கொண்டோம். சற்றைக்கெல்லாம் இது இங்கே விழுந்து வெடித்தது. வெடித்த பிறகு சில நிமிஷங்கள் என்ன நடந்ததென்று யாருக்கும் தெரியவில்லை. எப்படியோ உயிர் பிழைத்து விட்டோம் என்ற உணர்வு வந்த உடனே இடிந்து விழுந்திருந்த செங்கல் குவியல்களின் மீது கொடிகளை நட்டோம். சற்று நேரத்துக்கெல்லாம் யார் வந்தாரென்று நினைக்கிறீர்கள்? பிரதம மந்திரி சர்ச்சிலே வந்தார். அவரை ஒரு ஆயிரம் பேர் சூழ்ந்து கொண்டு விட்டார்கள்.

அவர் இந்தப் பள்ளத்தைப் பார்த்ததும் அப்படியே கண்ணீர் விட்டு அழுது விட்டார். அவருக்கு நாங்கள் இப்படிக் கஷ்டப் படுவதைப் பார்க்கச் சகிக்க முடிய வில்லை. இங்கே எல்லோரும் அவரைக் குதூகலமாக வரவேற்றார்கள். ஒரு பெரிய ஆபத்திலிருந்து பிழைத்தது போன்ற உணர்ச்சி யாருக்குமே இல்லை. ஏதோ அபூர்வமான காரியத்தைச் செய்துவிட்டது போன்ற பெருமைதான் உண்டாகிறது" என்றார்.

இதைக் கேட்டதும் என் மனமும் உருகிப் போய் விட்டது. இத்தனை துன்பங்களுக்கு இடையில் தங்கள் தலைவர்களிடம் அளவிலாத நம்பிக்கை காட்டும் ஜனங்களைக் கண்டால் யாருக்குத்தான் மனம் கரையாது?

பிரதம மந்திரியின் மனம் உருகியதற்குச் சான்றாக யுத்தத்தில் வீடுகள், கடைகள் முதலியவற்றை இழந்தவர்களுக்கு நஷ்ட ஈடு அரசாங்கத்தில் தர வேண்டுமென்ற திட்டம் உருவாயிற்று.

லண்டன் நகரில் இப்படிப்பட்ட சூழ்நிலையில் நான் இந்துமதியின் அன்பு என்னும் துணையினால் தைரியமாகக் காலம் தள்ளி வந்தேன்.

"இப்படி ஹிட்லர் லண்டனைத் தரை மட்டமாக்குவது என்று கங்கணம் கட்டிக் கொண்டு விட்டானே" என்று பொருமினாள் ரகு. தன்னுடைய கவலையிலேயே காலம் தள்ளின அவனுக்குக்கூட லண்டன் நகரம் தெருத் தெருவாகப் பற்றி எரியும் காட்சி அளவிலாத வருத்தத்தை அளித்தது.

யுத்தம் ஆரம்பித்து ஒரு வருஷத்துக்குப் பிறகு ஒரு நாள் நல்ல செய்தி வந்தது. இந்தியா செல்லும் ஒரு வியாபாரக் கப்பலில் இரண்டு பேருக்கு இடம் இருப்பதாகச் செய்தி வந்தது. இருவரும் அவசரமாகப் புறப்பட்டோம்.

ஆவலினால் வெடித்து விடும்போலிருந்த இதயத்தைக் கையால் அமுக்கிப் பிடித்துக்கொண்டு கப்பலேறினோம். ஆனால் கடைசியில் இங்கிலாந்தைவிட்டு இந்தக் கஷ்டமான வேளையில் போகிறோமே என்று துயரம்தான் எஞ்சி நின்றது. அந்தத் தேசத்து மக்களிடம் நான் வந்தபோது ஏற்படாத ஐக்கிய உணர்ச்சி, அவர்களோடு சேர்ந்து பட்ட கஷ்டங்களினால் மிகவும் பெருகிவிட்டது. லண்டன் நகரத்துக்குக் குண்டு வீச்சை வேடிக்கை பார்க்க ஜனங்கள் வந்து சேர்ந்து கொண்டிருந்த போது நாங்கள் புறப்பட வேண்டியதாயிற்று. இங்கிலாந்து தேசத்தின்மீது புதியதாக ஏற்பட்ட பரிவு உணர்ச்சியுடன் அதை விட்டுப் பிரிந்தோம்.

**மூன்றாம் பாகம் முற்றிற்று**

# வஸந்தத்தின் புத்துணர்ச்சி

## உங்களுக்கு இன்றும்.... என்றும்!

காஷ்மீர்பொக்கே டால்கம் பௌடர் சுத்த மனோரம்மியமே! மிக்க மிருதுவாக உங்கள் உடலில் வஸந்தநாள் காலையின் புத்துணர்ச்சியை அள்ளித் தெளிக்கிறது- உடலை ரம்மியமணத்துடனும் குளிர்ச்சியுடனும் மணிக்கணக்காக வைத்திருக்கிறது. அதிகப்படி ஈரத்தை உறிஞ்சுகிறது ... அரிப்பையும் எரிச்சலையும் தவிர்க்கிறது ... உங்கள் வசீகரத்தையும் மென்மையையும் பன்மடங் காக்குகிறது.




# காஷ்மீர் பொக்கே

## டால்கம் பௌடர்

*ஆண்கள் விரும்பும் நறுமணத்துடன்*

ஒரு கால்கேட்—பாமாலிவ் தயாரிப்பு

கால்கேட் 1806 முதல் தரத்துக்குப் பெயர் போனது

போட்டிக் கதை

# தாயின் தியாகம்




சூடாமணி

அவனுக்கு அழகு இருந்தது, அந்தஸ்து இருந்தது; பணம் இருந்தது, குணம் இருந்தது; இளமை இருந்தது, ஆரோக்கியம் இருந்தது; எவ்வளவோ இன்பத்துக் கிடையில் ஒரு குறையும் இருந்தது.

கல்யாணமாகிப் பத்து வருஷங்களாகியும் அவனுக்குக் குழந்தை பிறக்கவில்லை.

குழந்தைகளை விரும்பாதவர்களுக்கு இது ஒரு துக்கமான விஷயமாயிருக்காது. ஆனால் வைதேகி தனக்கொரு குழந்தை வேண்டுமென்று விரும்பினான். தன்னிடமுள்ள இச்சா சக்தியின் முழு வேகத்துடன் விரும்பினான்.

மாலை வேளையில் பறவைகள் பறந்து செல்வதைக் கண்டால் அவைகளின் கூடுகளில் காத்து நிற்கும் குஞ்சுகளை நினைந்து உள்ளத்தில் ஏங்கினான்.

வான இருளில் மதியம் உதயமானால் ஏதோ ஸ்பஷ்டமற்ற ஒரு மதிமுகத்தை எண்ணி ஏங்கினான்.

இனிமையான பக்தி கீதங்களைச் செவியுற்ற போதெல்லாம் இனம் தெரியாத ஒரு மழலைக் குரலை எண்ணித் துடித்தான்.

"வைதேகி ஒரு குழந்தைக்காக எப்படி ஏங்குகிறான்! அவனுக்கு பகவான் கண் திறக்கக் கூடாதா?" என்று எல்லோரும் பேசிக் கொண்டார்கள். குழந்தைகளைப் பார்க்கும்போதெல்லாம் அவன் கண்களில் தென்படும் ஏக்கம் யாவரும் அறிந்த விஷயமே. பிச்சைக்காரி ஒருத்தியைக் கண்ட போது வைதேகி "ஐயோ, பாவம்!" என்று சொல்லாமல், அவள் இடுப்பிலிருந்த ஒரு சின்னஞ் சிறு கோஞ்சானைக் கண்டு அவளிடம் பொறுமை கொண்டதும் எல்லோரும் அறிந்த விஷயமே.

அன்பான கணவன் எவ்வளவோ ஆறுதல் சொன்னான். அவனது அன்பின் இன்பம் அவனுக்கு இருந்தது.

அவனுக்கு எல்லாம் இருந்தது. எவ்வளவோ இன்பத்துக் கிடையில் ஒரு மகத்தான குறையும் இருந்தது.

* * *

சோர்ந்த உள்ளத்துக்கு ஆறுதல் அளிக்கும் பொருட்டு அவன் பல ஸ்தலங்களில் யாத்திரை செய்து வரலானான்.

ஒரு மலைப்பிரதேசம். சுற்றிலும் பசுமை நிறைந்த சோலை. மணம் கமழும் மலர்களும் வண்டு இசைக்கும் கீதங்களும் நிறைந்தது. நடுவில் அழகிய சிறு கோயில். தூரத்திலிருப்பவரைத் தன்னிடம் ஆகர்ஷித்து அழைக்கும் தெய்வீக அமைதி பொருந்திய கோயில்.

இங்கு வந்து சேர்ந்தான் வைதேகி.

கோயில் அர்ச்சகர் நடுத்தர வயதுள்ள கம்பீர புருஷரா யிருந்தார். பகவானுக்கு அர்ச்சனை செய்யும்போது அவர் தொனியில் மாதுர்யமும் பேச்சில் தெளிவும் பாவத்தில் பக்தியும் தென்பட்டன.

"எவ்வளவு அழகாய்ப் பூஜை செய்கிறார்!" என்றான் வைதேகி, அருகிலிருந்த ஒருத்தியிடம்.

"கடமைக்காகச் செய்பவர்களாயிருந்தால் இவ்வளவு பக்தி விச்வாஸம் இருக்காது. இவர்கள் வம்சத்தில் எல்லோரும் வேறு ஏதோ தொழிலில் ஈடுபட்டவர்கள் தான். ஆனால் இந்தத் தெய்வத்திடம் உள்ள பக்தியால் தாமாகவே தம்மைத் தெய்வ கைங்கரியத்துக்குக் கொடுத்து, தகப்பனுக்குப் பின் பிள்ளை என்று பரம்பரையாக இந்த அர்ச்சகர் தொழிலை ஒரு அன்புக் காணிக்கையாகச் செய்கிறார்கள்" என்றான் அந்தப் பெண்.

வைதேஹிக்கு ஆச்சரியமும் சிரத்தையும் பிறந்தன. அந்த அதிசய பக்தரிடம் விபூதி வாங்கிக் கொள்ளும்போது பயபக்தியுடன் அவரை ஏறிட்டுப் பார்த்தாள்.

பனித் திரைக்குப் பின் தெரியும் வான மண்டலத்தைப் போல் அந்த பயபக்திக்குப் பின் ஒரு ஆழ்ந்த சோகம் தெரிவதை அவர் கண்டார்.

"உங்களுக்கு ஏதாவது குறை யிருக்கிறதா, அம்மா?" என்று அவர் கேட்டபோது வைதேஹிக்குத் திடுக்கிட்டது.

"அதெல்லாம் என்னவென்று நான் கேட்கவில்லையம்மா. உங்கள் குறை எதுவானாலும் நாங்கள் ஆராதிக்கும் இந்தத் தெய்வத்தை வேண்டிக் கொண்டால் நிவர்த்தியாகிவிடும். இது சக்தி வாய்ந்த மூர்த்தி" என்று சொல்லி அருகிலிருந்தவர்களுக்கு விபூதி கொடுத்தவாறு சென்றார்.

வைதேஹி இவ் வார்த்தைகளைக் கேட்டாள். பிறகு ஆவலாய்த் தெய்வச்சிலையைப் பார்த்தாள். உள்ளமும் உடலும் ஒருங்கே துடித்தன. முப்பது வருஷங்களது பெண்மையின் ஏக்கமெல்லாம் ஒரு ஆத்மீக பிரார்த்தனையாய் உருக்கொண்டது.

"ஐயனே! என் தெய்வமே! என் மனக் குறையைத் தீர்த்து வை. என் மடியில் ஒரு குழந்தை கிடந்து விளையாட அருள் செய். என் இன்பத்தையும் நன்றியையும் தெரிவிக்க, அது ஆணாயிருந்தால் உபநயனமும், பெண்ணாயிருந்தால் கல்யாணமும் உன் சந்நிதியில் செய்துவைக்கிறேன்" என்று ஒரு விண்ணப்பத்தை ஆண்டவன் பாதங்களில் சமர்ப்பித்தாள்.

* * *

இப்பொழுதெல்லாம் மாலை நேரத்தில் பறவைகள் கூட்டை நோக்கிப் பறந்து செல்லும்போது அவள் பார்த்து மனம் வெதும்பவில்லை. வீட்டுக்குள் வந்து தன் குழந்தையைப் பார்த்து மகிழ்ந்தாள்.

வைதேஹி மனமகிழ்ந்ததில், அவள் கணவனுக்கும் மகிழ்ச்சிதான். ஆனால் அவள் ஏங்கியதைப் போல் அவன் ஏங்கியிருக்கவில்லை. ஆகையால் அவள் மகிழ்ந்ததைப் போல் அவன் மகிழவும் இல்லை.

வைதேஹியின் வாழ்வு நிறைந்து பொலிவுற்றது. தனக்கும் தன் கணவனுக்கும் கண்ணைப் போலிருந்த மகனைப் பார்த்துப் பார்த்து மனம் பூரித்தாள். தவம் கிடந்து பெற்ற பிள்ளை நேர்மையான குணமுடையவனாயிருந்ததை உணர்ந்தபோது, எல்லையைத் தொட்டு விட்டது போலிருந்த அவளது இன்பம் புது எல்லைகளைக் கண்டு அவற்றையும் மீறிச் சென்றது.

தான் தரிசித்த புண்ய க்ஷேத்திரத்தையும் அங்கு விளங்கிய அருள் வடிவமான தெய்வ விக்கிரகத்தையும் எண்ணியபோது அவள் கண்களில் உணர்ச்சிப் பெருக்கால் ஆனந்த பாஷ்பம் தோன்றியது. அந்தத் தெய்வத்தின் பெயரைத் தன் மகனுக்கு வைத்தாள். அந்த ஒப்பற்ற தெய்விகக் கருணையை அவனுக்கு விளக்கி அன்பு சுரக்கச் செய்தாள்.




அவள் இன்பத்துக்கு அளவே யில்லை. அந்த இன்பத்தைத் தனக்கு வழங்கிய ஆண்டவனிடம் அவள் நன்றி பெருகியது.

அவள் வாழ்வு நிறைந்து பொலிவுற்றது.

* * *

மகனுக்கு உபநயன வயதான போது வைதேஹியும் அவள் கணவனும் அவனை அந்தப் பழைய க்ஷேத்திரத்துக்கு அழைத்துச் சென்றார்கள். ஆண்டவன் சந்நிதியில் அவனுக்கு உபநயனம் விமரிசையாக நடந்தது.

மாலையும் கழுத்துமாய் மகனைப் பார்த்தாள் வைதேஹி. அவன் முகத்தில்தான் என்ன தேஜஸ்! என்ன சாத்விகம்!

வைதேஹி மகனைப் பெற்ற தினத்தை விட அதிகப் பெருமிதம் அடைந்தாள். அவள் எவ்வளவு பாக்கியசாலி! எத்தகைய செல்வத்தை அடைந்திருந்தாள்! அதுவும் வறுமையில் உழன்று உழன்று தவித்து ஏங்கிக் கண்ணீரில் புரண்ட பிறகு கண்டெடுத்த செல்வம். அதன் அருமை



இதனால் எவ்வளவு உயர்ந்து விட்டது! அது மட்டுமா? அந்த மணியில் களங்கமில்லை. மாசு இல்லை. துல்லியமாயிருந்தது. அரியதொரு பொக்கிஷமாயிருந்தது.

அவன் உள்ளத்தில் ஆனந்தம் பொங்கியது. இன்னதென்று புரியாத ஒரு கிளர்ச்சியும் கூடவே தோன்றியது.

தனக்கு இந்தச் செல்வத்தை அருளிய தெய்வத்தின் கருணை முகத்தின் மேல் அவன் பார்வை சென்றது. இதயத்தில் அன்பும் நன்றியும் பொங்கின.

"ஆண்டவனே! வாழ்வளித்தவனே! நீ தந்த வாழ்வைப் பெற்றுச் சந்தோஷப்பட்டேன். என் நன்றியை எந்தவிதமாய்க் காட்டுவேன்? என் உள்ளத்தில் இப்போது இருக்கும் இன்பத்துக்கும் நிறைவுக்கும்—உன் கொடைகளான இவற்றுக்கு—என்ன செய்து என் வந்தனத்தைக் கூறுவேன்?"

அவன் உள்ளம் அன்பால் கசிந்தது. தன்னுள்ளிருந்த ஆனந்தத்தில் அவன் வெளியில் காணப்பட்ட ஒரு வாடிய முகத்தைக் கவனிக்க வில்லை. அவன் உணர்வு ஆண்டவனிடமே லயித்திருந்தது. அவன் காதுகள் இதயத்தில் முழங்கிய தெய்வ கோஷத்தையே கேட்டுக் கொண்டிருந்தன.

"என் வந்தனத்தை எப்படிக் கூறுவேன்? என் நன்றியை எப்படிக் காட்டுவேன்?......"

இதயத் தந்தியினின்று எழுந்த நாத அலைகளாக இந்தக் கேள்விகள் ஒலித்தன.

அப்போது வேறொரு குரலும் அவன் காதுகளில் மங்கலாய் விழுந்தது.

"அதனால்தான் வருத்தமாயிருக்கிறேன். மகன் போய் விட்டான் என்ற பெரும் துயரம். எனக்கு வேறு குழந்தைகளும் கிடையாது. இந்த வயதில் நான் புத்திர சோகத்தை அநுபவிக்க வேண்டுமென்று இந்த பகவானுடைய விருப்பம். ஆனாலும் அவனைத் தவிர எனக்கு வேறு துணையில்லை. அவன் பெயர்களை வாயாரச் சொல்லிப் பூஜிக்கும் போது எனக்கு ஒரு சாந்தி ஏற்படுகிறது."

வைதேகி திரும்பிப் பார்த்தாள். அந்தக் கோயில் அர்ச்சகர்தான் சோர்ந்த முகத்துடன் பேசிக் கொண்டிருந்தார். தம் ஒரே மகனின் மறைவைப் பற்றி அவளுடைய கணவனிடம்தான் பேசிக் கொண்டிருந்தார்.

"என் வந்தனத்தை எப்படிக் கூறுவேன்?" என்று உருகிக் கொண்டிருந்த அவன் உள்ளத்துக்கு ஒரு விநாடியில் விடை கிடைத்து விட்டது. அவன் கண்கள் பிரகாசித்தன. அன்பு நிறைந்து மகனின் பொலிவுற்ற தோற்றத்தின் மீது பதிந்தன. அர்ச்சகரைப் பார்த்தான். "ஸ்வாமி! கவலைப்படாதீர்கள். நீங்கள் சம்மதப்பட்டால் எங்கள் மகனை உங்கள் மகனாகவே பாவித்து உங்களுடனேயே வைத்து வளர்த்துக் கொள்ளுங்கள். உங்கள் புத்திர சோகத்தையும் நிவர்த்தி செய்து கொண்டு, அவன் பகவானுக்குச் செய்ய வேண்டிய பணியை இவன் மூலம் நிறைவேற்றிக் கொள்ளுங்கள்."

அந்த இடத்தில் திடீரென்று மௌனம் நிலவியது. அர்ச்சகர் முகம் மலர்ச்சியுற்றாலும் தம் காதுகளை நம்பமுடியாத நிலையில் இருந்தார். வைதேகியின் மகன் வியப்பில் மூழ்கி விட்டான்.

மௌனத்தைக் கலைத்துக் கொண்டு அவள் கணவன்தான் பேசினார். "வைதேகி!

உனக்கென்ன பைத்தியமா பிடித்து விட்டது? மகனைக் கொடுப்பதாவது?''

"அதனால் என்ன? நான் வெயிலில் பொசுங்கிக் கொண்டிருந்தேன். எனக்கு நிழல் கிடைத்தது. அந்த நிழலின் அருமை எனக்குத்தான் தெரியும். எனக்கு மகப் பேறை அளித்ததன் மூலம் ஆண்டவன் என் வாழ்வுக்கு அர்த்தமளித்து எனக்கு உண்மையான உயிர் அளித்தான்.''

"அப்படிப்பட்ட மகனைக் கொடுக்கிறே னென்கிறாயே.''

"அப்படிப்பட்ட மகனை விரும்புவதால் தான் கொடுக்க விரும்புகிறேன். எனக்கு அருள் செய்த ஆண்டவனுக்கு என் நன்றி யைத் தெரிவிக்க ஒரு பரிசு அளிக்கத்தான் விரும்புகிறேன், வேறொன்றுமில்லை. நன்றி உணர்ச்சி எல்லோரும் அறிந்ததுதானே?''

"அதற்கு அவனைத்தான் கொடுக்க வேண்டுமா?''

"ஆமாம்!''

"என்ன? நமக்குப் பிள்ளை இல்லையே என்று நீ எத்தனை குறைப்பட்டுக் கொண் டிருந்தாய்? பிள்ளைக்காக நீ சுற்றாத கோவில் உண்டா? குளம் உண்டா? இவ் வளவு தவம் கிடந்து ஆண்டவன் அருளால் அடைந்த பிள்ளையைத் திடுதிப் பென்று இப்படி ஆண்டவனுக்கே அர்ப்பணித்து விடுகிறேன் என்கிறாயே! என்ன அசட்டுப் பேச்சு இது?''

வைதேஹியின் முகத்தில் அப்போது ஒரு அதிசய ஒளி தோன்றியது.

"நமக்கு உபகாரம் செய்பவர்களுக்குப் பரிசு கொடுப்பதென்றால் நாம் மிகவும் விரும்பும் பொருளைத்தானே கொடுக்க வேண்டும்? என்னைப் படைத்தவனைவிட எனக்குப் பரோபகாரி யார்? என் மகனை விட நான் விரும்பும் பொருள் என்ன? அவனையே பகவத் கைங்கரியத்துக்கு—என் காணிக்கையாய்க் கொடுக்கிறேன்.''

ஸ்தம்பித்துப் பேச்சற்று நின்றவர்க ளிடையே வைதேஹி பரிபூரணத்துவம் நிறைந்த உள்ளத்துடன் கம்பீரமாய் நின்றாள். நீரைச் சேர்க்கத் தனக்கு உதவிய கடலின்மேல், பிரதியாக அந்த நீரையே பொழியும் மேகத்தைப்போல் விளங்கினாள்.

அவள் பார்வை கணவன்மேல் சென்றது. "நீங்களும் நானும் இப்போது வயது முதிர்ச்சி பெற்றவர்கள். தியாகம் செய்யும் மனோபக்குவம் ஏற்படும் வயதாகி விட்டது. எங்கே இருந்தாலும் அவன் நம் மகன் தானே? அவருடன் வாழ்ந்து கொண்டு அவன் பூஜை செய்யட்டும். ஆண்டவனை வாய் குளிர மனம் குளிரத் தோத்திரம் செய்து அர்ச்சிக்கட்டும். அவன் பூஜைமூலம் என் பூஜையும் என் நன்றியும் கூடத்தானே பகவானைச் சேர்கின்றன? நான் இதை நிறைந்த மனத்துடன் சொல்கிறேன். உங்களுக்கெல்லாம் சம்மதமில்லையா?''

அவளது நிறைந்த மனம் கண்ணீர்த் துளிகளாய்ப் பொங்கியது. அவர்கள் அவ ளைப் புரிந்து கொண்டு முறுவலித்தார்கள்.

அவளுக்கு இப்போது எல்லாம் இருந் தது. குறை நீங்கிச் சாசுவதமான நிறைவு இருந்தது.



● மக்களுக்கு ஆற்றும் பணிகளில் சிறந்த பணி மக்களின் உடற் பிணியைப் போக்கி நோயற்ற வாழ்வை அளிப்பதாகும். இருபது வருஷங்களாக ராயபுரம் ராமசாமி முதலியார் ஆஸ்பத்திரியிலும், எழும்பூர் மாதர் குழந்தை நல ஆஸ்பத்திரியிலும் பணியாற்றிய திரு கே. எஸ். சிவராம கிருஷ்ணய்யர் இத்தகைய சிறந்த தொண்டை ஆற்றி வந்துள்ளார். ஆரம்பத்தில் அரசாங்க உதவி சர்ஜனாக உத்தியோகம் வகித் தார். பிறகு முதல் உலக மகாயுத்தத்தின் போது ராணுவத்தில் சேவை செய்தார். குழந்தை மருத்துவத்திலும், பிரசவ சிகிச்சை யிலும் நிபுணராக விளங்கிய இவரது திறமை யையும், சேவையையும் பாராட்டி 1935-ம் வருஷம் இவருக்கு 'வெள்ளி விழாப் பதக்கம்' வழங்கப்பட்டது.

ஏழைகளின் நலனில் பெரிதும் அக்கறை செலுத்தி வந்த டாக்டர் கே. எஸ். சிவராம கிருஷ்ணய்யர் ஜனவரி மாதம் 29-ம் தேதி இவ் வுலகை விட்டு மறைந்தார். அவரது பிரிவினால் வருந்தும் அவர் குடும்பத்தாருக்கு ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# வேலையும் விடுமுறையும்



எஸ். வாசன் ரங்காச்சாரி



காலைக் கடன்களை முடித்துக் கொண்டு நான் திரும்பி வருவதற்கும் சுமதியும் குழந்தைகளும் பூஜை அறையிலிருந்து வெளியே வரவும் சரியாக இருந்தது. என்னைக் கண்டதும், சுமதி, "உஷா! அசோக்! அப்பாவை நமஸ்காரம் பண்ணுங்கோ" என்று சொல்லிக் கொண்டே தானும் குழந்தைகளுடன் என்னை நமஸ்கரித்தாள். நிறைந்த உள்ளத்துடன் ஆசீர்வாதம் செய்துகொண்டே, "சுமதி! இன்றைக்கு என்ன விசேஷம்! நமஸ்காரம் எல்லாம் பலமாக இருக்கிறதே! குழந்தைகள் வேறு, அதிசயமாக இன்று ஞாயிற்றுக்கிழமை என்பதைக்கூட மறந்து காலையில் எழுந்து குளித்துவிட்டு, மடியாகப் பூஜை எல்லாம் செய்திருக்கள்!" என்று வியப்புடன் கேட்டேன்.

"ஒன்றுமில்லை, நேற்று சேஷாச்சாரியார் வந்திருந்தார்."

"யாரு! கும்பகோணம் சேஷாச்சாரியாரா!"

"ஆமாம்! அவர்தான். உங்களுக்கு வேலை உயர்வு கிடைக்கப் போகிறதென்று யாரோ சொன்னார்களாம். சந்தோஷ சமாசாரம் ஆயிற்றே என்று விசாரித்துவிட்டுப் போகலாம் என்று வந்தாராம்."

"உம்......ம்...ம்...அப்புறம்!"

"ஏதோ ஜாதகப் பிரகாரம், உங்களுக்குக் கொஞ்சம் போதாத வேளையாம். உத்தராயண புண்ய காலத்திலே, குழந்தைகளை "ஆதித்ய ஹ்ருதயம்" வாசிக்கச் சொல்லம்மா. அதுவும் இந்த ஞாயிற்றுக்கிழமை, ரொம்ப நல்ல நாளாக இருக்கிறது. உடனே சொல்லி வை என்று ஆசீர்வாதம் செய்துவிட்டுப் போனார்" என்றாள் சுமதி.

"என்னமோம்மா! வாரத்தில் ஒருநாள்தான் ஞாயிற்றுக்கிழமை வருகிறது. என் தூக்கம் கெடாமல் நீ எது செய்தாலும் சரி. குழந்தைகளுக்குத்தான் கஷ்டமாக இருக்கும்" என்றேன். பரிகாசத்தை விடவில்லை நான்.

"இவ்வளவு பரிகாசம் செய்கிறீர்களே! நீங்களே நினைத்துப் பாருங்கள், ஞாயிற்றுக்கிழமை உங்களுக்கு எவ்வளவு அதிருஷ்ட நாளென்பதை! கிழவர் இந்த ஞாயிற்றுக்கிழமை விசேஷமான நாளென்று சொன்னார். அதற்காகக்கூட இல்லை. ஞாயிற்றுக்கிழமை உங்களுக்கு ஆகிவந்த நாளாயிற்றே என்றுதான் இதெல்லாம் ஆசையுடன் செய்தேன். உங்களுக்குப் பரிகாசமாக இருக்கிறது. சுமதியின் குரல் சற்றே கம்மி யிருந்தது. எனக்கு மனம் நெகிழ்ந்து விட்டது.

"சுமதி, சும்மா விளையாட்டுக்காகச் சொன்னேன். வருத்தப்படலாமா! எனக்கு வேலை உயர்வு இருக்கிறதோ, இல்லையோ, நீயும் குழந்தைகளும் நன்றாக இருந்தால் போதும். எனக்கு வேறு ஒன்றும் வேண்டாம். நீ சொன்ன பிறகு எனக்கே ஞாபகம் வருகிறது. அடுத்த ஞாயிற்றுக்கிழமையிலிருந்து நானும் உன்னோடு பூஜை செய்ய ஆரம்பித்து விடுகிறேன். சந்தோஷம் தானே!" என்றேன். அவளுக்கு என்ன தோன்றிற்றோ தெரியவில்லை. மறுபடியும் என்னை நமஸ்கரித்தாள். சுமதியின் வார்த்தைகள் மட்டும் காதில் ஒலித்துக்கொண்டே யிருந்தன. "ஞாயிற்றுக்கிழமை, உங்களுக்கு ஆகிவந்த நாளாயிற்றே என்றுதான். ஆமாம், சுமதியை முதல் முதலில் பார்த்ததே ஞாயிற்றுக் கிழமையில் தானே......"மனம் பின்னோக்கி ஓடிற்று.

சென்னை மெரினா கடற்கரை, உலகத்திலேயே இயற்கை யழகில் இரண்டாவது எனச் சொல்லிக் கேட்டிருக்கிறேன். ஆனால், ஞாயிற்றுக்கிழமை மாலை ஐந்தரை, அல்லது ஆறு மணிக்கு மேல் கடற்கரையின் அலாதியான அழகை அனுபவிக்கும் போதெல்லாம் எனக்கு ஞாயிற்றுக்கிழமை மட்டுமாவது சென்னைக் கடற்கரைக்கு உலகத்திலேயே முதலாவது ஸ்தானம் கொடுத்துவிட வேண்டும் என்று தோன்றும்.

இப்படித்தான் ஒருஞாயிற்றுக்கிழமை பௌர்ணமியன்று தனிமையில், இயற்கை யன்னையுடன் உரையாடிக் கொண்டிருந்தேன். தங்கத்

தட்டென நிலா அப்போதுதான் உதயமாகி இருந்தது. திடீரென்று ஒரு இளங்குரல் கேட்டது. "இவர்தான் சித்தி, என் சிநேகிதன் ஸ்ரீதருடைய மாமா! வேடிக்கை வேடிக்கையாகக் கதை யெல்லாம் சொல்வார். ரொம்ப நல்ல மாமா!" திரும்பிப் பார்த்தேன். என் மருமான் ஸ்ரீதருடைய சிநேகிதன் ரவிதான் யாரோ ஒரு அழகியுடன்கூட வந்திருந்தான். என்னைப் புகழ்ந்ததோடு நிற்கவில்லை அவன். "மாமா, இதுதான் எங்க சுமதி சித்தி!" என்று அறிமுகம் வேறு செய்து வைத்தான்.

"நமஸ்தே" என்றாள் சுமதி.

பதினெட்டு வயதுதானிருக்கும். வெண் பட்டுப் புடவை, நீலநிறச் சோளி, கைநிறைய வளையல்கள், நீண்ட பின்னல், அடர்த்தியான தலை மயிரில் மணம் அள்ளி வீசும் ஜாதி மல்லிகை, நெற்றியில் சிறிய சிவப்புச் சாந்துப் பொட்டு — இவை அவள் அழகுக்கு அழகு செய்தன. கழுத்தில் இரண்டொரு சங்கிலி தான். 'பெண்ணுக்கென்ன, கிளி மாதிரி இருக்கிறாள். முகத்தில் களை அப்படியே சொட்டுகிறது' என்று வர்ணிப்பார்களே. அதுதான் எனக்கு அப்போது நினைவுக்கு வந்தது. களை சொட்டும் அந்த அழகான முகத்தில் அடக்கமும், பண்பும், போட்டி போட்டுக் கொண்டு மிளிர்ந்தன. நிலவொளியில், புடவையும் ரவிக்கையும் கடற்கரைக் காற்றினால் உடலோடு ஒட்டி நிற்க வாளிப்பான உடற் கட்டின் அபூர்வமான அழகைத் திருட்டுத்தனமாகப் பருகியவாறே, "நமஸ்தே" என்று பதிலுக்குக் கரம் குவித்தேன்.

"ரவிக்கு எப்பவும் உங்கள் நினைவுதான். அந்த மாமா அதைச் சொன்னார், இதைப் பண்ணினார் என்று சொல்லிக் கொண்டே யிருப்பான்."

"குழந்தைதானே! இரண்டு கதைகள் சொல்லி விட்டு அவர்களுடன் சிறிது நேரம் விளையாடவும் செய்தால் மாமா நல்ல மாமாவாகி விடுகிறார்."

கல. கல வென்று சிரித்தாள் சுமதி.

"நீங்கள் தினமும் இங்கு வருகிறீர்களா!" என்று ஆவலுடன் கேட்டேன் நான்.

"இல்லை, ஞாயிற்றுக்கிழமை ஒரு நாள்தான் வருவேன். அன்றுதான் தெரிந்தவர்களை யெல்லாம் இங்கு பார்க்க முடிகிறது. நேரமாகிறது. நான் வரட்டுமா!"

அவள் போய் அரைமணி நேரமான பிறகும் அவளைப் பற்றியே சிந்தனை சுழன்றது. இனி மேல் ஒரு ஞாயிற்றுக் கிழமைகூடத் தவறாமல் கடற்கரைக்கு வரவேண்டும் என்று திட்ட மிட்டேன். ஆனால் அதற்கடுத்த ஞாயிற்றுக் கிழமை, நான் அங்கத்தினராயிருந்த சபாவில் பிரபல பாடகி யொருவரின் கச்சேரி ஏற்பாடாகி யிருந்தது. வெகு நாட்களாகக் கேட்க வேண்டும் என்று எதிர்பார்த்துக் கொண் டிருந்த கச்சேரி அது. 'கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை' என்ற மனநிலையில்தான் இருந்தேன். கச்சேரி கேட்க வேண்டும் என்றும் ஆசை. சுமதியைப் பார்க்க வேண்டும் என்றும் ஆவல். அதெப்படி முடியும்! 'சீ! அவள் யாரோ, நாம் யாரோ! இந்த மாதிரி அசட்டு ஆசைகளை வளரவிடக் கூடாது' என்ற உறுதியுடன் கச்சேரிக்குச் சென்றேன்.

ஆனால் அங்கும் சுமதியைப் பற்றிய பைத்தியக்கார எண்ணங்கள்தாம்.

கச்சேரி முடிந்து எல்லோரும் கலைய ஆரம்பித்த பிறகுதான் எனக்குச் சுய உணர்வு வந்தது. கூட்டம் கலையும் வரை தெரிந்தவர்களுடன் சிறிது நேரம் உரையாடி விட்டுச் சபையின் வாசலுக்கு வந்தபோது மணி பத்து ஆகியிருந்தது. அவசரம் அவசரமாக வீட்டுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த என்னை, "மாமா, சித்தி உங்களைக் கூப்பிடறா!" என்ற ரவியின் பழக்கமான குரலும், அதைத் தொடர்ந்து, "ரவி! ஏன் இப்படிக் கத்துகிறாய்!" என்ற இனிமையான குரலும் தடுத்து நிறுத்தின. அதற்குள் அவளும், ரவியும் அருகில் வந்து விட்டார்கள்.

"ஒன்றுமில்லை. எங்கள் வீட்டு டிரைவர் இன்று ஏதனாலோ கார் கொண்டு வரவில்லை. நேரமும் ஆகிறது. காத்துக் கொண்டிருந்து உபயோகமில்லை என்று தோன்றுகிறது. கொஞ்சம் சிரமத்தைப் பார்க்காமல் ஆள்வார் பேட்டை வரையில் துணைக்கு வந்தால் தேவலை. எங்கள் வீடு அங்கேதான் இருக்கிறது" என்றாள் சுமதி.

"இதிலென்ன சிரமம்! ஆள்வார்பேட்டை ஒன்றும் இங்கிருந்து வெகு தூரமில்லை. வாருங்கள், பேசிக் கொண்டே போகலாம்" என்றேன். சிறிது தூரம் மௌனமாகத்தான் நடந்தோம். நான் தான் பேசவேண்டுமே என்று, "நீங்கள் என்ன செய்து கொண்டிருக் கிறீர்கள்!" என்று கேட்டேன்.

"இண்டர் போன வருஷம் பாஸ் செய்தேன். தாத்தா அதற்கு மேல் பெண்களுக்குப் படிப்பு வேண்டியதில்லை என்று சொல்லி விட்டார். சமஸ்கிருதம் என்றால் அவருக்கு உயிர். அதுவும் காளிதாசனின் காவியங்கள் என்றால் பசி, தூக்கம் கூட வேண்டாம். எனக்கும் சொல்லித் தருகிறார். என் அக்கா, ரவியின் அம்மாவுக்கு உதவியாகக் கூட மாட வேலை செய்து கொண்டும், ஒழிந்த வேளையில் தையல் வேலை கற்றுக் கொண்டும் பொழுதைக் கழிக்கிறேன்" என்றாள்.

"காளிதாஸனுடைய காவியங்களை யெல் லாம் வாசிக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். உங்கள் தாத்தா உங்களுக்கு மேக சந்தேசம் சொல்லிக் கொடுத்திருக் கிறாரா!" என்று கேட்டேன்.

"இது வரையில் இல்லை. ஏன் மிகவும் நன்றா யிருக்குமா!"

"சந்தேகமில்லாமல்! என்னைப் பொறுத்த வரையில் காளிதாஸனின் காவியங்களிலேயே அது தான் மிகவும் சிறந்தது என்று சொல் வேன். நீங்கள் கூடிய சீக்கிரம் வாசித்தால் அதன் அருமை தெரியும்" என்றேன்.

மறுபடியும் சிறிது நேரம் மௌனம். நடந்து கொண்டே யிருந்தோம். இம்முறை அவள் தான் பேசினாள். "நீங்கள் எந்தக் கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கிறீர்கள்!"

"நான், இந்த வருஷம் இன்ஜினீயரிங் பரீக்ஷையில் கடைசி வருஷப் பரீக்ஷை எழுதி யிருக்கிறேன். இனிமேல்தான் ரிஸல்ட் தெரிய வேண்டும்" என்று பதிலளித்தேன்.

"பிறகு என்ன செய்வதாக உத்தேசம்!" என்று கேட்டாள் அவள். ஒரு நண்பன் தன் மற்

# 43 லக்ஷம் வீடுகளுக்கு அஸ்திவாரம் எவ்வளவு பலமாக இருக்கவேண்டும்?

சென்ற சில ஆண்டுகளாக நம் நாட்டு ஜனத்தொகையின் பெரும் பகுதி, நகரங்களிலேயே குடியேறிவிட்டது. ஏற்கனவே போதிய வசதியற்ற இந் நகரங்களில் இவர்கள் மிக நெருக்கடியான வீடுகளில், அளவற்ற கஷ்டத்தில் வசிக்கிறார்கள். இதை நிவர்த்தி செய்ய, 43 லக்ஷம் புது வீடுகள் தேவை.

*1947-ம் வருடத்தில் நம் நாட்டில் 14,50,000 டன் செமிண்ட் உற்பத்தி செய்யப்பட்டது. ஆனால் தற்சமயம் 43,40,000 டன்கள் உற்பத்தியாகின்றன. அதாவது 1947-ம் வருடத்தின் உற்பத்தியைவிட ஏறக்குறைய மூன்று மடங்கு அதிகம். உன்னதமான முறையில் அமைக்கப்பட்டு, திறமையுடன் நடத்தப்படும் 26 செமிண்ட் தொழிற்சாலைகளில், 40,000 பேர்கள் வேலை செய்கிறார்கள். நம் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு இது இன்றியமையாதது. இதனால்தான் டாடா அயரன் அண்டு ஸ்டீல் கம்பெனியார் தங்களுடைய தொழிற்சாலையின் உற்பத்தியை அதிகப்படுத்துவதற்காக பல வேறு திட்டங்களை கையாண்டு வருகிறார்கள்.*

| இரும்பு உற்பத்தி |
| --- |
| *1955 — 10,50,000* |
| *1959 — 20,00,000* |

## தனியார் தொழில் தேசநலனுக்காகப் பாடுபடுகிறது




TN 576

ஒரு நண்பனின் எதிர்காலத்தில் கொள்ளும் பரிவை அவனது கேள்வியில் கண்டேன்.

"பிறகு என்ன! ஏதாவதொரு வேலைக்குப் போக வேண்டும். நாங்கள் மிகவும் பணக்காரர்கள் அல்ல. என் தகப்பனார் பெரிய வேலையில் தான் இருக்கிறார். அவருக்கு யாரோ சடகோபாச்சாரியார் என்று அவருடன் படித்த ஒரு நண்பர் இருக்கிறார். பிரபல எண்ணெய் சுத்திகரிப்புச் செய்யும் கம்பெனி ஒன்றில் பிரதம நிர்வாக அதிகாரியாம் அவர். நான் நன்றாகப் பரீட்சையில் தேறினால் அந்தக் கம்பெனியில் நல்ல வேலை ஒன்று போட்டுத் தருவதாகச் சொல்லியிருக்கிறாராம். அவர் கூட ஆள்வார்பேட்டையில் தான் இருக்கிறார் என்று அப்பா சொல்லியிருக்கிறார்."—ஒரே மூச்சில் கொட்டித் தீர்த்து விட்டேன்.

"சித்தி! நம் வீட்டு வண்டி இதோ வந்து விட்டது. டிரைவர்! ஏன் லேட்!" – ரவி டிரைவரை அதட்டப் போய் விட்டான்.

"உங்களுக்கு ரொம்பவும் சிரமம். இந்த உதவியை என்றும் மறக்கவே மாட்டேன். நீங்கள் எங்கே போக வேண்டும்! வண்டியில் ஏறிக் கொள்ளுங்களேன்!" மறுபடியும் குரலில் அதே பரிவு நிறைந்திருந்தது.

"பரவாயில்லை! என் வீடு இதோ அருகில் தான் இருக்கிறது. நீங்கள் போய் வாருங்கள்" என்று விடை கொடுத்தேன்.

அன்றிரவு சரியாகத் தூங்க முடியவில்லை. கடந்த இரு ஞாயிற்றுக் கிழமைகளாக நடந்தவைகளைப் பற்றியே யோசித்துக் கொண்டிருந்தேன். ஆனால், அதற்குப் பிறகு அவளைப் பார்க்கவே முடியவில்லை.

இப்படித்தான் ஒருநாள் நான் ஏதோ யோசித்துக் கொண்டிருந்தேன். "டேய், சீமா! நீ பரீட்சையில் முதல் வகுப்பில் தேறி விட்டாயாம். முதல் வீட்டு மாமா சொன்னார். அந்த சடகோபாச்சாரியாரைப் போய் இன்றைக்குப் பார்த்து விட்டு வருகிறாயா! கடிதம் கொடுக்கிறேன். இப்பவே முயற்சி செய்தால்தான் இரண்டு மாதம் கழித்தாவது வேலை கிடைக்கும்" என்று அப்போது அங்கு வந்த என் தகப்பனார் உரத்த குரலில் கூறினார். சடகோபாச்சாரியார் வீடு தேடிக் கொண்டு சென்றேன். வீடு பூட்டிக் கிடந்தது. விசாரித்துப் பார்த்தால் இரண்டு மாத லீவில் குடும்பத்துடன் கோடைக்கானல் போயிருக்கிறார் என்று தெரிய வந்தது.

என் தகப்பனார் என்னை விடவில்லை. "மதுரையில் உன் அத்தை, உன்னை வா, வா என்று வருந்தி அழைத்துக் கொண்டு தினம் நாலு கடிதம் எழுதுகிறாளே! மதுரைக்குப் போகும் போது கோடைக்கானலில் இறங்கிச் சடகோபாச்சாரியாரைப் பார்த்துவிட்டு என்ன சொல்கிறார் என்று கேட்டுக் கொள். சடகோபாச்சாரியார் விலாசம்கூட இருக்கிறது. நானும் ஒரு கடிதம் எழுதுகிறேன். நீயும் போய் நேரில் பார். மனுஷன் ரொம்ப நல்லவர்" என்று உற்சாகமாகச் சொன்னார். எனக்கும் சென்னையை விட்டு எங்காவது போனால் தேவலைபோல் இருந்தது. உடனே நான் புறப்பட்டு விட்டேன்.

மறுநாள் ஞாயிற்றுக் கிழமை காலை சுமார் ஏழு மணிக்கெல்லாம் வண்டி 'கோடை ரோடு' நிலையத்தை அடைந்தது. கையில் பெட்டியுடன் இறங்கின என்னை, "மாமா! வாங்கோ, சித்திகூட ஸ்டேஷனுக்கு வந்திருக்கா" என்ற பழக்கமான ரவியின் குரல் வரவேற்றது. சுமதியே என்னை நோக்கி இளநகையுடன் வந்து கொண்டிருந்தாள். அருகில் வந்ததும், "நமஸ்தே! பிரயாணமெல்லாம் சௌகரியமாக இருந்ததா!" என்று கேட்டாள். குரலில் எனக்குப் பழக்கமான அதே பரிவு இருந்தது. எனக்கு ஒரே ஆச்சரியம்.

"சுமதி! நீங்களா! நான் வருவது உங்களுக்கு எப்படித் தெரியும்!" எனக்கு இருந்த வேகத்தில் அவள் பெயரைக் கூடச் சொல்லி விட்டேன். சொன்னேனா, கத்தினேன். அவ்வளவு சந்தோஷம் எனக்கு.

"ம்...ம்...உங்கள் தகப்பனார் கடிதம் எழுதியிருந்தார்."

"என் தகப்பனாரா! சடகோபாச்சாரியாருக்கல்லவா..."

"சடகோபாச்சாரியார்தான் என் தாத்தா. அன்றே சொல்லியிருக்க வேண்டும். சரியான சந்தர்ப்பம் கிடைக்கவில்லை." வேண்டுமென்றே அன்று அவள் என்னிடம் விஷயத்தைச் சொல்லவில்லை என்று தெரிந்தது. அவளுக்குத்தான் எவ்வளவு குறும்பு!

"வாருங்கள், போகலாம். வண்டி தயாராக இருக்கிறது."

வண்டியா அது! புஷ்பக விமானம் என்று சொல்கிறார்களே, அதில் அதுவரையில் போனதில்லை நான். அன்றுதான் முதல் முறையாகச் சென்றேன். வண்டி நிலக்கோட்டை வழியாகக் கோடைக்கானலுக்குப் பறந்து கொண்டிருந்தது. சுமதிதான் வண்டியை ஓட்டினாள்.

"உங்கள் காளிதாசன், கோடைக்கானலைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறான் என்று யோசிக்கிறீர்களாக்கும். அப்படித் தானே!" சாலையை விட்டுத் தன் பார்வையை எடுக்காமலேயேதான் கேட்டாள் சுமதி. சற்றுத் தைரியமாகவே அவளை உற்றுக் கவனித்தேன். அந்த அழகு என்னைப் பைத்தியமாக அடித்து விடும் போல் இருந்தது.

"நான் கேட்ட கேள்விக்கு இன்னும் பதில் இல்லையே! அப்படி என்ன பிரமாத யோசனை!" என்றாள் சுமதி.

சற்றுத் தைரியம் வந்தது எனக்கு.

"ஒன்றுமில்லை. காளிதாஸன் கோடைக்கானலைப் பற்றி ஒன்றும் சொல்லாவிட்டாலும், மேக சந்தேசத்தில்......"

"பயப்படாமல் சொல்லுங்கள், காவ்ய ரஸனை எனக்கும் உண்டு."

"ஓரிடத்தில் ஒரு அழகியைப் புகழ்ந்து நாலு அடிகள் பாடியிருக்கிறார். பிரிவால் வேதனை கொண்ட யக்ஷன், ஒரு மேகத்திடம் தன் மனைவியைப் பற்றிக் கூறுகிறான். உங்களை இந்த அழகான மலைப்பிரதேச சூழ்நிலையில் பார்த்ததும் எனக்கு அது நினைவுக்கு வந்தது."

ஒன்றுமே பதிலில்லை.

"சுமதி! வித்தியாசமாக நினைத்துக்கொண்டு விட்டீர்களா! மன்னித்துக் கொள்ளுங்கள். ஏதோ அசட்டுத் தைரியத்தில் உளறினேன்."

வண்டி பங்களாவை அடைந்து விட்டது போலிருக்கிறது. வாசலிலேயே, ஒரு பெரியவர், சுமதியின் தாத்தாவாகத் தானிருக்கவேண்டும் என்று நினைத்துக் கொண்டேன். "வா, அப்பா ! வா! சாமி லெட்டர் வந்தது.(என் தகப்பனாரின் செல்லப் பெயர் சாமி என்பது) ரொம்ப சந்தோஷம். முதல் வகுப்பில் தேறி யிருக்கிறாயாமே ! உன் அதிருஷ்டம், எங்கள் கம்பெனியில் இரண்டு நாட்களில் ஒருவேலை காலி வருகிறது. உனக்கு அதை வாங்கிக் கொடுக்கிறேன். உங்கப்பாவுக்கும் எழுதி விட்டேன். சுமதி உன்னைப் பற்றி ரொம்பவும் சொல்லியிருக்கிறாளப்பா ! காளிதாஸன் என்றால் உனக்கு......"

"என்ன தாத்தா இது! அவரை உள்ளே வரவிடாமல் எல்லாவற்றையும் வாசலிலேயே பேசி விடுவீர்கள் போலிருக்கிறதே. அவர் பாவம்! களைத்துப் போய் வந்திருக்கிறார். நீங்கள் என்னடாவென்றால்..." சுமதி சரியான சமயத்தில் உதவிக்கு வந்தாள். உண்மையாகவே மிகவும் களைப்பாக இருந்தது எனக்கு.

"ஆமாமப்பா, ஆமாம்! போய்க் குளித்து விட்டுச் சாப்பிடு. பிறகு பேசிக் கொள்ளலாம்" என்று சொல்லிவிட்டுப் பெரியவர்வழிவிட்டார். சுமதிதான் வலிந்துக் வலிந்து உபசாரமெல்லாம் செய்தாள். பிறகு சென்ற இரண்டு நாட்களும் இரண்டு நிமிஷங்களாகத் தான் சென்றன. பெரியவர் கூடவரச் சுமதி, கோடைக் கானல் ஏரி, நீர் வீழ்ச்சி, இன்னும் பார்க்க வேண்டிய இடங்களுக்கெல்லாம் என்னை அழைத்துச் சென்றாள்.

மூன்றாம் நாள், எல்லோரும் சென்னைக்குக் கிளம்பினோம். என்னால் மதுரைக்குப் போக முடியவில்லை. சொன்னபடி, சென்னைக்கு வந்ததுமே, அன்றே பலமாகச் சிபாரிசு செய்து வேலையில் அமர்த்தி விட்டார் சடகோபாச்சாரியார். ஞாயிற்றுக் கிழமைகளில் காலையில் ராஜதானிக் கல்லூரி வரை, நான், சுமதி, சடகோபாச்சாரியார், மூவரும் நடந்து செல்வதைப் பழக்கமாக வைத்துக் கொண்டிருந்தோம். அப்படித்தான் அன்றும் அவர்களுடன் போக அவர்கள் வீட்டுக்குப் போயிருந்தேன். சடகோபாச்சாரியார் மட்டும்தான் இருந்தார். சுமதியைக் காணவில்லை. என்னைப்பார்த்ததுமே அவர், "வாப்பா, வா! ஒரு சந்தோஷ சமாசாரம். சுமதிக்குக் கல்யாணம் நிச்சயம் செய்திருக்கிறேன். மாப்பிள்ளையைச் சுமதிக்கும் பிடித்து விட்டது. பணக்கார இடம். தேதி வைக்க வேண்டியதுதான் பாக்கி. மாப்பிள்ளை..." என்று கூறிக்கொண்டு போனார்.

பளார், பளாரென்று என்று என் காது செவிடாகும்படி என் கன்னத்தில் யாரோ அறைவது போலிருந்தது.

அவர் பேசியது ஒன்றுமே காதில் விழவில்லை. "சுமதிக்குக் கல்யாணம், பிள்ளை பணக்கார இடம், சுமதியும் சரியென்று சொல்லி விட்டாள்" என்ற வார்த்தைகளே காதில் ஒலித்தன.

எனக்குத் தலையை ஒரேயடியாகக் கனத்தது. "மிகவும் சந்தோஷம். சுமதிக்கு என் வாழ்த்துக்களைச் சொல்லுங்கள். நான் வரட்டுமா! பிறகு வருகிறேன் !" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டேன். ஓடினேனா, நடந்தேனா என்று

கூடத் தெரியாமல் கால் போன போக்கில் போய்க் கொண்டே யிருந்தேன்.

‘சீ! கடைசியில் பணம் பணத்தைத்தான் சேரும்’ என்பது எவ்வளவு உண்மையாகி விட்டது! என்னிடம் எவ்வளவு அன்பு கொண்டவன் போல் நடித்தான். எல்லாம் வேஷம். அவன் தாத்தா தானே எனக்கு வேலை செய்து வைத்தார் என்று இளப்பம் போலிருக்கிறது. அவர்களுக்குச் சரியான பணக்காரனா, நான்? சீ! இவர்கள் வாங்கிக் கொடுத்த வேலையை இவர்களே வைத்துக் கொள்ளட்டும். இதோ உதறி யெறிந்து விடுகிறேன். எனக்கும் தன் மதிப்பு இருக்கிறதென்று காண்பித்து விடுகிறேன். ஆத்திரத்தில் ஏதேதோ எண்ணி எண்ணிக் கொதித்துக் கொண்டிருந்தேன். அதே வேகத்தில் வீட்டுக்குச் சென்று ஒருவருக்கும் தெரியாமல் கம்பெனியில் எனக்கு நேர் அதிகாரியான ஒரு துரைக்கும், சடகோபாச்சாரியாருக்கும், ‘உங்கள் உதவிக்கு வந்தனம். என்னால் இந்த வேலையில் மேலும் தொடர்ந்து இருக்க இயலவில்லை. மன்னிக்கவும்’ என்று இரு கடிதங்களும், சுமதிக்கும் ஆத்திரம் தீர ஒரு கடிதமும் எழுதி, மூன்றையும் தபால் பெட்டியில் சேர்த்த பிறகு தான் ஆத்திரம் சற்றுத் தணிந்தது. அப்படியும் உள்ளக் கொதிப்பு அடங்கவில்லை. எங்கெங்கெல்லாமோ சுற்றி விட்டு நடுப்பகல் வீட்டை நோக்கி நடந்தேன். யாரோ கைதட்டிக் கூப்பிட்டது போலிருந்தது. திரும்பிப் பார்த்தேன். சுமதிதான் ஓடி வந்துகொண்டிருந்தாள். ‘செய்வதையும் செய்து விட்டு என்னைத் தேற்ற வரப் போகிறாள், இவளுடன் பேசக் கூடாது’ என்று நினைத்து வேகமாகக் காலை வீசி நடந்தேன். மூச்சு வாங்க வேகமாக ஓடி வந்து விட்டாள், அதற்குள் என் அருகில்.

“கொஞ்சம் நான் சொல்வதைக் கேட்க மாட்டீர்களா!” என்றாள் சுமதி.

“உங்களுக்கு என் வாழ்த்துக்கள். உங்கள் கணவரும் நீங்களும் சௌக்கியமாக எல்லாவித நன்மைகளுடன் வாழ வேண்டும்” என்று பொரிந்து விட்டேன்.

“உங்கள் காளிதாஸன், ‘ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு’ என்று ஒரு இடத்திலும் சொல்ல வில்லையா!”

“அது தெரியாது! ஆனால் ‘ஸ்திரீகளை நம்பாதே’ என்று ஒரு இடத்தில் சொல்லியிருப்பதாக ஞாபகம்!”

“ரொம்பக் கோபம் போலிருக்கிறது. ஒரு இரண்டு நிமிஷம் நான் சொல்வதைக் கேளுங்கள். பிறகு என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். நான் குறுக்கே நிற்கவில்லை” என்று கெஞ்சினாள்.

வேண்டா வெறுப்புடன் நின்றேன்.

“தாத்தா எல்லாம் சொன்னார். அன்றொரு நாள் அவர் உங்களைக் கலியாணம் செய்து கொள்வதாக உத்தேசமா என்று கேட்டாராம். நீங்கள் மதிப்பாக இன்னும் இரண்டு மூன்று வருஷங்களுக்கு இல்லை என்று சொன்னீர்களாம். அதற்காக உங்களை அழ வைப்பதற்காக ஒரு கதை கட்டி விட்டார். நீங்களும் அதை நிஜமென்று...”

"சுமதி! நிஜமாகவா!"—எனக்கு நம்பிக்கை துளிர்விட்டது.

"இல்லை, பொய்! இந்தக் கொதிக்கும் வெய்யிலில் உங்களைத் தேடிக் கொண்டு வந்து பொய் சொல்கிறேன். சரி, நான் சொல்ல வேண்டியது சொல்லியாகி விட்டது. நான் வருகிறேன்."—சுமதி திரும்பினாள்.

"சுமதி! என்னை மன்னித்து விடு! ஏதோ ஆத்திரத்தில்..." என்று ஆரம்பித்தேன்.

"அதுதான் சொன்னேனே! ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு. தாத்தாகூட மாப்பிள்ளையின் பெயர் என்று சொல்லிவிட்டு, உங்கள் பெயரைத்தான் சொன்னாராம். நீங்கள் ஒன்றுமே காதில் வாங்கிக் கொள்ளாமல் 'சுமதிக்கு என் வாழ்த்துக்கள்' என்று சொல்லி விட்டு அவரைப் பேசக்கூட விடாமல் ஓடி வந்து விட்டீர்களாம். நான் குளித்து விட்டு வருவதற்குள் இத்தனை அமர்க்களமும் நடந்திருக்கிறது."

"சுமதி! ஏதோ முட்டாள் தனமாக..."

"ஆமாம்! இப்போது எல்லாம் பேசுவீர்கள். உங்களைக் காலையிலிருந்து எங்கெல்லாம் தேடுவது! நல்ல வேளை! எங்கேயாவது சமுத்திரத்தில் விழுந்து வைக்காமல் இருந்தீர்களே!" சுமதிக்கு நல்ல கோபம் என்று தெரிந்தது. பேசாமல் குற்றவாளியைப் போல் கேட்டுக் கொண்டிருந்தேன்.

"ஆத்திரத்தில் என்னென்ன செய்தீர்கள்! என்னைத் திட்டி ஒரு கடிதம் எழுதுவது தானே!" பளிச்சென்றது எனக்கு.

"சுமதி! வேலையை ராஜிநாமா செய்து ஒரு கடிதமும், உன் தாத்தாவுக்கு ஒன்றும், உனக்கு ஒன்றும் எழுதிப் பெட்டியில் போட்டு விட்டேனே! உன்னூர்த் தபாலாயிற்றே! சில மணி நேரத்தில் போய் விடுமே! எங்கள் துரை வெகு முன் கோபக்காரனாயிற்றே. கடிதத்தைப் பார்த்தால் ஒழித்து விடுவானே. தபால் குமாஸ்தாவைச் சரிப்படுத்தலாமென்றால் அவனுக்கும் எனக்கும் முதல் நாளிலிருந்தே சண்டை. கடிதத்தைத் திருப்பிக்கூடத் தர மாட்டானே! உன் தாத்தாதான் என்ன நினைத்துக் கொள்வார்! சுமதி! ஆத்திரத்தில் படுமுட்டாளாகி விட்டேனே!" என்று நான் அலறியே விட்டேன்.

சுமதி விழுந்து விழுந்து சிரித்தாள். எனக்கு இப்போது ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

"சுமதி! இதென்ன சிரிப்பு!"

"கோபித்துக் கொள்ளாதீர்கள். இன்று என்ன கிழமை!"

"ஞாயிற்றுக் கிழமை."

"இன்று தபாலில் போட்ட கடிதங்களையெல்லாம் நாளைக் காலையில் தானே எடுப்பார்கள். இன்று தான் விடுமுறையாயிற்றே!"

"ஆமாம்!" விஷயம் புரிய ஆரம்பித்து விட்டது எனக்கு.

"போஸ்ட்மாஸ்டர் மாமா எனக்குத் தெரிந்தவர். நான் பார்த்துக் கொள்கிறேன்."

"சுமதி! நீ......நீ......வந்து......"

"நான் வந்து என்ன!"

"நீ ரொம்பப் பொல்லாதவள்" என்றேன்.

"உங்களை விடவா!" என்று கேட்டுவிட்டுக் குறும்பாகச் சிரித்தாள்.

* * *

"என்ன பிரமாதமான யோசனையில் மூழ்கி யிருக்கிறீர்கள்! ஞாயிற்றுக்கிழமையைப் பற்றியா!" என்று கேட்டவாறே கையில் மணக்கும் காப்பியுடன் எதிரே வந்தாள் என் மனைவி சுமதி. உஷாவும், அசோகனும் என் மடிமீதிருந்தார்கள். கடந்த காலத்திலிருந்து நிகழ்காலத்துக்கு வந்தேன்.

"அப்பா! எனக்கு ஞாயிற்றுக்கிழமையை ரொம்ப ரொம்பப் பிடிச்சிருக்கு, அப்பா! ஏன், தெரியுமோ!" என்றாள் உஷா.

"தெரியுமே! உனக்கு அன்னிக்குப் பள்ளிக்கூடம் கிடையாது" என்றேன்.

"தப்பு! சனிக்கிழமை கூடத்தான் எனக்குப் பள்ளிக்கூடம் கிடையாது!" என்றாள்.

"எனக்குத் தெரியலேம்மா!" என்றேன்.

"ஏன், தெரியுமா! ஞாயிற்றுக்கிழமையன்னிக்கு உனக்கும் லீவு, அண்ணாவுக்கும் லீவு. எனக்கும் லீவு. எல்லாரும் ஒண்ணு குஷியா இருக்கலாமோன்னோ. அதனாலேதான் எனக்கு ஞாயிற்றுக்கிழமையைப் பிடிச்சிருக்கு. உனக்கு அப்பா!" என் கன்னத்துடன் தன் வெல்வெட் கன்னத்தைப் பதித்தவாறே கேட்டாள் என் செல்வி.

"எனக்கும் பிடிச்சிருக்கு, அம்மா! உங்க அம்மாவை ஞாயிற்றுக்கிழமை அன்னிக்குத் தான்......"

"ஸ்...ஸ்...குழந்தைகளிடம் எதையாவது அசட்டுப் பிசட்டென்று சொல்லாதீர்கள்" என்று இடைமறித்தாள் சுமதி.

"எனக்குத் தெரியும்! அன்னிக்குத்தான் அப்பா அம்மாவைக் கல்யாணம் செய்து கொண்டிருப்பார். அதானே அப்பா!"

தன் பங்குக்கு உரத்த குரலில் எக்காளமிட்டான் அசோகன். இரு செல்வங்களையும் வாரி அணைத்தவாறே சுமதியைப் பார்த்தேன்.

அவள் முகத்தில் கர்வமும் திருப்தியும் ஏக காலத்தில் ஒளி விட்டன.




# ஜி.எஸ்.எப். கொள்ளேகாலம் பட்டுப் புடவைகளை உபயோகித்து அவைகளின் விசேஷ சிறப்பை உணருங்கள்



கவர்ன்மெண்ட் ஸில்க் பிலேச்சர் கொள்ளேகாலம் பட்டு ஜவுளிகள் 'ஆட்வுட்' மிஷினில் முறுக்கேற்றிய உயர்தர பிலேச்சர் பட்டு நூல்களை உபயோகித்து தயாரிக்கப் பட்டிருப்பதால் சோபைக்கும் உறுதிக்கும் ஈடு இணையற்று விளங்குகின்றன.

## கவர்ன்மெண்ட் ஸில்க் பிலேச்சர்ஸ்

கொள்ளேகாலம்



சென்னை சர்க்கார் கைத்தொழில் & வியாபார இலாக்காவின் ஒரு பகுதி




கீழ்பவானி சமுதாய நல அபிவிருத்தியின் விளைவாக எழுந்த ஹரிஜனக் காலனி. இது பெரிய கொடுவேரி கிராமத்தில் இருக்கிறது.

(சென்ற வாரத் தொடர்ச்சி)

## கீழ் பவானி சாகரம்

**ப**வானி சாகரத்தை அடையும் முன்பு திடுக்கிடும் சம்பவம் ஒன்று நடந்தது. நாங்கள் ஏறியிருந்த ஜீப் கார்களைச் சுற்றிச் சில சர்க்கார் அதிகாரிகள் நின்று பேசிக் கொண்டிருந்தனர்.

பேச்சுக்கு இடையில் ஒரு அதிகாரி, "பெருந்துறைக்குப் போகிறோம், இல்லையா? எல்லோருக்கும் டி. பி. என்று முடிவாகி விட்டதல்லவா?" என்றார். இதைக் கேட்டதும், "டி. பி.யா! யார் செய்த முடிவு அது! எங்களை யாரும் பரிசோதிக்க வில்லையே!" என்று திகிலுடன் கூவினேன். என் திகிலைப் புரிந்து கொண்ட சென்னையிலிருந்து எங்களுடன் வந்த அதிகாரி, "ஒன்றுமில்லை, ஸார்! நீங்கள் பயப்படாதீர்கள்! டி. பி. என்றால் 'டிராவலர்ஸ் பங்களா'!" என்று விளக்கினார்.

எனக்கு அப்புறம்தான் தைரியம் வந்தது. பெருந்துறை என்றதும் டி. பி.யும் ஸானடோரியமும்தானே நினைவுக்கு வருகின்றன!

ஜீப்கார்கள் எங்களை ஏற்றிக் கொண்டு புறப்பட்டன. பல கிராமங்கள் வழியாகச் சுற்றிக் கொண்டு பிரசித்தி பெற்ற பவானி சாகரம் கொண்டு போய்ச் சேர்த்தன.

வறண்ட பகுதிகள் உள்ள ஈரோடு, கோபி செட்டிப்பாளையம், தாராபுரம் தாலுகாக்களில் நீர்ப் பாசன வசதி ஏற்படுத்துவதற்காக ஆரம்பிக்கப் பட்ட திட்டம்தான் கீழ் பவானி சாகரம். பவானி நதி, மலைகளையும் குன்றுகளையும் குடைந்து கொண்டு சென்று காவேரியில் சேர்ந்து பல நதிகளாகப் பிரிந்து இறுதியில் கடலில் சங்கமமாகிறது. முன்பு, அணைக்கட்டு கட்டப்படுவதற்கு முன்பு, பவானி நதியின் பிரவாகம் அத்தனையும் வீணாகப் போய்க் கடலில் விழுந்து கொண்டிருந்தது. தண்ணீர் தண்ணீர் என்று வானத்தைப் பார்த்துக் கதறிப் பாளம் பாளமாக வெடித்துக் கிடந்த பூமித் தாயின் தாபத்தைத் தணியாமல், நதியின் வெள்ளம் கடலை நோக்கி ஓடிக் கொண்டிருந்தது. ஆனால் இப்பொழுது, மாபெரும் அணைக்கட்டுப் போட்டு நதியின் நீரைத் தேக்கிய பிறகு, இரண்டுலட்சத்து ஏழாயிரம் ஏக்கர் நிலங்களுக்குப் பாசன வசதி அளிக்கிறது.

இந்த நீர்த் தேக்கத் திட்டம் நூறு ஆண்டுகளுக்கு முன்பே ஒரு முறை துவக்கமாயிற்று. அதாவது 1834-ம் ஆண்டிலேயே அணைத் திட்டம் உருவாவதற்கு ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டன. திட்டம் செயல் முறையில் உருப்பெறாததற்குக் காரணம் பொருளாதார நெருக்கடிதான். வருவாய் இல்லாத அந்தப் பிரதேசத்தில் இந்தப் பெரிய அணைக்கட்டை எப்படிக் கட்ட முடியும்? இந்தப் பெரிய அணைத் திட்டத்தைச் செயலாக்கக் காரணமாயிருந்தவர் நம் விவசாய மந்திரி எம். பக்தவத்ஸலம் என்பதை நாம் பெருமையுடன் கூறலாம்.

அணைக்கட்டின் ஸிமெண்ட் கட்டடம், 1,523 அடி நீளம் இருக்கிறது. அந்தக் கட்டடத்தின் இருபுறமும் அமைக்கப்பட்டிருக்கும் மண்ணாலான அணை சுமார் மூன்று மைல் நீளம் இருக்கிறது. அணைக்கட்டின் மொத்த நீளம் ஐந்தரை மைல்.

பவானி சாகரம், மேலே கூறிய வானம் பார்த்து நிற்கும் வறண்ட பிரதேசங்களுக்கு வாய்ப்பாகக் கிடைத்த இணையற்ற ஒரு வரப்பிரசாதம் என்பதில் ஐயமில்லை.



நாங்கள் பவானி சாகரம் போய்ச் சேர்ந்த பொழுது செக்கர்வானம் சிவந்து காட்டிற்று. மாலைச் சூரியன் செவ்வொளியில் அணைக்கட்டு அழகு பொங்க விளங்கியது. சுரங்கப் பாதையின் வழியாக அணைக்கட்டுக்குள்ளே பிரவேசித்தோம். நெடுந் தூரம் சென்று



கிராமக் கைத்தொழில்களின் ஜீவநாடியான கதர் தொழில் திருப்பூரில் முக்கிய அங்கம் வகிக்கிறது. படத்தில், கதர்த் துணியில் பூ வேலைப்பாடுகள் பதிவிக்கப்படுகின்றன.

---

அணைக்கட்டின் மேல் பகுதியை அடைந்தோம். அந்தப் பிராந்தியத்தின் அமைதிக்குச் சுருதி சேர்த்துச் சோபிக்கச் செய்வதுபோல், அணைக்கட்டின் கீழே 'ஓ' வென்ற பேரிரைச்சலுடன் ஜலம் போய்க் கொண்டிருந்தது.

அப்படியே வெளியேறிய பிரவாகம், போர்க்களத்துக்குச் செல்லும் சேனா சமுத்திரம்போல் குதித்துக் கொண்டும், ராஜ நடை போட்டுக் கொண்டும், வீர வாசகங்களைப் பேசிக் கொண்டும், பெரிய பெரிய அலைகளாக எழும்பி ஒன்றோடொன்று மோதி ஆர்ப்பரித்துக் கொண்டும் கம்பீரமாகச் சென்று கால்வாய்களில் விழுந்தது. மதகிலிருந்து வெளிப்பட்ட வெள்ளப் பிரவாகத்திலிருந்து, ஒரு பத்திரிகையில் இரண்டு தொடர் கதைகள் வருவது போல மேலும் கீழாக இரு கால்வாய்கள் பிரிந்து செல்கின்றன.

மதகிலிருந்து மோதிக் கொண்டு வெளிப்படும் பிரவாகம் ஒருபுறம் புது மணப் பெண் மாதிரி நாணிக் கோணிக் கொண்டு கழிவிட்டுக் கொண்டிருந்தது; மறுபுறம் புது வாழ்வை நுகரப் போகும் அப்பெண்ணின் இதய ஆழத்தில் பொங்கி எழும்பும் குதூகலங்களைப் போல் இடைவிடாமல் கொந்தளித்தது. அணைக்கட்டின் மறுபுறம் இருக்கும் நீர்த் தேக்கம் பழுத்த ஞானியர் உள்ளம் போல் சலனம் சிறிதும் இன்றிச் சாந்த சொரூபமாயிருந்தது. இந்த மாபெரும் தேக்கத்துக்கு அரண்களாக மலைத் தொடர்கள் நிற்கின்றன.

கீழ் பவானியில் நீர்த் தேக்கம் மட்டும் அல்லாமல், சமுதாய நலத் திட்டமும் விரிவாக உருவாகியிருக்கிறது. கோவை ஜில்லாவைச் சேர்ந்த கோபிசெட்டிப் பாளையம், ஈரோடு, தாராபுரம், பவானி முதலிய தாலுகாக்களோடு, திருச்சி ஜில்லா கரூர் தாலுகாவிலிருந்து மூன்று கிராமங்களையும் சேர்த்து ஒரு பிரிவாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இங்கு நடக்க வேண்டிய அபிவிருத்தித் திட்டங்களுக்காக ரூ. 65 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

கீழ் பவானிசாகரத்தையும் அதன் சுற்றுப் புறங்களில் நடைபெறும் அபிவிருத்தித் திட்டங்களையும் பார்த்துக் களைத்துப் போன எங்களுக்கு மிகவும் உற்சாகத்தைத் தரும் பார்க்க வேண்டிய புராதனக் கடவுள் வடிவங்கள் அங்கு கோயில் கொண்டிருந்தன.

மேற்படி சுந்தர விக்கிரகங்களின் காலம் மிகப் பழைமையானது. கி. பி. 1311-ம் ஆண்டு டணாயக்கன் கோட்டையில் இருந்தவை.

தமிழ் நாட்டின் மூவேந்தர்களாகிய சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் அரசு புரிந்து வந்த காலத்தில் வேறு சில சிற்றரசர்களும் வாழ்ந்து வந்தனர். அச் சிற்றரசர்களின் ஆட்சியில் இருந்தது கொங்கு நாடு. அந்நாடு கோயமுத்தூர், சேலம் ஜில்லாக்களையும், மைசூரின் சில பகுதிகளையும் கொண்டிருந்தது. அதற்கு அருகேயுள்ள ஊர்களையெல்லாம் ஹொய்சல மன்னர்கள் ஆண்டு வந்தனர். அவர்களுள் தலைசிறந்தவனான மூன்றாம் வீர வல்லாளன் கி. பி. 1292 முதல் கி. பி. 1311 வரையில் ஆட்சி புரிந்தான். அவன் அருகிலிருந்த கொங்கு நாட்டையும் அடிமைப் படுத்தினான். அவனுக்கு உறுதுணையாயிருந்து மிகவும் உதவி செய்தவன், அவனது சேனைத் தலைவனாகிய பெருமாள் தண்ட நாயக்கன் என்பவன். இவன் தான் 'டணாயக்கன் கோட்டை' என்று இக்காலத்தில் வழங்கும் கோட்டையைக் கட்டக் காரணமாயிருந்தவன். (பெருமாள் தண்ட நாயக்கனுக்கும் டணாயக்கனுக்கும் என்ன சம்பந்தம் என்று கேட்க வேண்டாம்!) இது கொங்கு நாட்டுக்கே தனிச் சிறப்பாய் விளங்கும் பவானி நதியின் வடக்குப் பாகத்திலும், மொய்யாற்றின் தெற்குப் பக்கத்திலும் இருக்கிறது. இத்தகைய சிறப்பு வாய்ந்த டணாயக்கன் கோட்டையிலிருந்த புராதனச் சிவாலயம் ஜனமேஜய மகாராஜா காலத்தில் மகா தபஸ்வியான துருவாச முனிவரால் நிர்மாணிக்கப் பட்டதாகக் கூறப்படுகிறது.

மேற்படி கோட்டையும் கோயிலும் கால வெள்ளத்தால் அழிந்து சிதிலமடையத் தொடங்கின. பிறகு கீழ் பவானிசாகரம் ஏற்பட்டதில் சரித்திரப் பிரசித்தி பெற்ற இப்புராதனச் சின்னங்கள் நீருள் மூழ்கின. மூழ்கி மறைந்த விக்கிரகங்களைச் சர்க்கார் எடுப்பித்து வேறு இடத்தில் ஆலயம் நிர்மாணிக்க ஏற்பாடு செய்தனர். 'பவானி சாகர்' என்னும் நூதன நகரத்தில், கீழ்ப்பவானி கால்வாயை ஒட்டிய தென் பாகத்தில் அமைந்துள்ள இப்புதிய ஆலயம் மிகவும் அழகாயிருக்கிறது. ஸ்ரீ சோமேசுவரர், மங்களாம்பிகை, ஸ்ரீ மாதவராயப் பெருமாள், மகாலக்ஷ்மி, முருகப் பெருமான், வீர பத்திரஸ்வாமி ஆகிய மூர்த்திகள் திவ்ய மங்கள ரூபமாகக் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கின்றனர்.

அங்கிருந்து திருப்பூர் போய்ச் சேர்ந்தோம். அங்கே கதர் உற்பத்தியையும், வேலை முறைகளையும் பார்த்து விட்டு, நரிப் பரிச்சல், செங்கப்பள்ளி, விஜயமங்கலம் முதலிய கிராமங்களில் உள்ள ஸ்தல அபிவிருத்தித் திட்டங்களையும் பார்த்து விட்டுப் பெருந்துறை வந்து சேர்ந்தோம். இங்கு கோவைஜில்லா கலெக்டர் பி. கே. நம்பியார் பத்திரிகைக்காரர்களுக்கு ஒரு தேநீர் விருந்தளித்தார்.

அன்றிரவு, காஞ்சிக் கோயில் என்னும் கிராமத்தில், ''கல்வியா, செல்வமா! எது நலம்!'' என்னும் நாடகம் பார்த்தோம். சமுதாய நலத் திட்ட ஊழியர்களே மேற்படி நாடகத்தில் பங்கு பற்றி மிகவும் சிறப்பாக நடித்தனர்.

மறுநாள் பழைய கோட்டைக்குப் போய்ப் பிரசித்தி பெற்ற காங்கேயம் காளைகளைப் பார்த்து விட்டுக் காளைகள் மாதிரி நடை

# ஓக்ஸ் பாட்டரிகள் நீடித்த உழைப்பை அளிப்பதால், அவைகள் துரிதமாக விற்பனையாகின்றன!




**அதிகப்படியான**
**உறுதி**

நீடித்த உழைப்பிற்கு கடினமான ரப்பர் பெட்டியில் அடக்கம் செய்யப்பட்டுள்ளன.

**அதிகப்படியான**
**மின்சார சக்தி**

அதிகப்படியான மின்சார சக்தி அளிக்கும் பைபேர் ஸெப்பரேட்டர்கள் உள்ளன.

**அதிகப்படியான**
**தாங்கும் சக்தி**

கடின வேலைகளுக்குகந்த பெரிய பிளேட்டுகள் அமைக்கப் பெற்றன.




## ஜார்ஜ் ஓக்ஸ் லிமிடெட்




இந்தியா முழுவதிலும் அங்கீகரிக்கப்பட்ட போர்ட் விநியோகஸ்தர்கள்

கிரூக்ஷிங்க் ரோடு, பம்பாய் 1

GO. 2886

# தளதளக்கும் பானம் வயிற்றுக் கோளாறுகளை நிறுத்துகிறது



## . . . அது உங்களுக்கு குணம் செய்வதுடன் புத்துணர்ச்சியும் தருகிறது!

ஈனோ சௌம்யமானது எனினும் வயிற்றுப் புளிப்பை நீக்குவதில் அற்புத சக்தி வாய்ந்தது. எவ்வித கெடுதியும் செய்யாமல் அது புளிப்பு மிகுதியாலுள்ள அஜீர்ணம், வாயுப்பொருமல், நெஞ்செரிச்சல் முதலிய உபாதைகளை துரிதமாயும் நிச்சயமாகவும் நிவர்த்திக்கிறது.

இதற்குக் காரணம், ஈனோஸ் வயிற்றிலுள்ள அமிலமிகுதியை வென்று சமனமூட்டும் விசேஷ குணம் உடையதாயிருப்பதுதான். மிதமீறி புசிப்பதாலோ அல்லது உண்பது எளிதில் ஜீரணமாகாமலோ வயிற்றில் ஏற்படக்கூடிய கோளாறுகளை நீக்கி, ஜீரண உறுப்புகளை மீண்டும் ஒழுங்குபடுத்த அது உதவுகிறது.

ஈனோ புத்துணர்ச்சியும் உற்சாகமும் ஊட்டுவது . . . எட்டே விநாடிகளில் நீங்கள் சுகம் பெறுகிறீர்கள்— வயிற்றுக்கு மட்டுமல்ல வாய்க்குக்கூட! எப்பொழுதும் ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்' ஒரு புட்டி கையோடு காவலாய் வைத்திருங்கள்.




# ஈனோஸ்

## 'ப்ரூட் ஸால்ட்'

'ஈனோ' மற்றும் 'ப்ரூட் ஸால்ட்' என்பவை ரிஜிஸ்தர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகளாகும்.

ENO. 1996 (Tam.)

போட்டுக் கொண்டு பல கிராம அபிவிருத்திகளைப் பார்த்தோம்.

பழைய கோட்டைப் பட்டக்காரர், நல்ல சேனாபதி சர்க்கரை மன்றாடியார் எம். எல். ஸி. அவர்களின் தாராள மனப்பான்மையை அவசியம் குறிப்பிட்டாக வேண்டும். கீழ் பவானி சாகரத்தின் கால்வாய்களின் கசிவு நீரால் அழிந்து போய்விட்ட மேலப்பாளையம் கிராமத்தைப் புனர் நிர்மாணம் செய்ய அவர் பேருதவி புரிந்திருக்கிறார். ரூ. 10,000 மதிப்புள்ள பன்னிரண்டு ஏக்கர் நிலத்தைத் தானமாக வழங்கியிருக்கிறார். ஐம்பத்தைந்து குடும்பங்களுக்கு நல்ல வீடுகள் கட்டித்தர ஏற்பாடாகியிருக்கிறது. கட்டி முடித்திருக்கும் வீடுகளைப் பார்வையிட்ட போது, சென்னை நகரத்தின் நெருக்கடியில் தவிக்கும் எனக்கு நாமும் அந்த வீடிழந்த குடும்பத்தினர்களில் ஒருவனாக இல்லாமற் போனோமே என்றிருந்தது.

பிறகு அங்கிருந்து கோவை மார்க்கமாக பாலக்காடு போய்ச் சேர்ந்தோம்.

பாலக்காட்டில், கோயல் மன்னம், கொட்டாயி, பெருங்கோட்டுக் குறிசி முதலிய கிராமங்களில் ஹரிஜனக் காலனி, குடி நீர்த் திட்டம், மிருக வைத்தியசாலை, பொழுது போக்கு கிளப், கோழிப் பண்ணை முதலிய அபிவிருத்திகளைப் பார்வையிட்டோம். கொட்டாயியில் உள்ள மஹிளா சமாஜத்தின் வேலை முறைகள் திருப்திகரமாயிருந்தன. தமிழ் நாட்டில் மாதர் சங்கம் என்று கூறுவதைத்தான் மலையாளத்தில் மஹிளா சமாஜம் என்கிறார்கள். ஓலவக்கோட்டில் 'நாயாடிகள்' காலனியைப் பார்த்தோம். இவர்கள் ஹரிஜனங்களைச் சேர்ந்தவர்கள். ஒரு காலத்தில் ஒதுக்கப்பட்டிருந்தவர்கள். தீண்டாமை என்னும் கொடுமைக்கும் அதிகமான 'பார்க்கவும் தகாதவர்கள்' (Unseeables) என்று பிரித்து வைக்கப்பட்டிருந்தவர்களுக்கு இப்பொழுது நிலமும் வீடும் வழங்கப்பட்டுப் புனர் வாழ்வு அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் வீடுகள் மிகவும் சிறியவை; கோவை ஜில்லா ஹரிஜனக் காலனிகளை விடக் கிரயம் அதிகம் ஆகிறது. வீடுகளும் திருப்திப் பட்டுக் கொள்ளும் விதத்தில் அமைய வில்லை.

பாலக்காடு சர்க்கார் ஆஸ்பத்திரி சமீபத்தில் நேருஜியால் திறந்து வைக்கப்பட்டது. எக்ஸ்ரே விடுதி, பிரசவ விடுதி இரண்டும் கட்டப்பட்டிருக்கின்றன. இவற்றின் மொத்தச் செலவு ரூ. 45,700. பத்திரிகையாளர்கள் பார்த்தபோது வெறும் கட்டடம்தான் காணப்பட்டது. அது பொதுஜன உபயோகத்துக்கு இன்னும் வரவில்லை. ஒவ்வொரு நாளும் பல பிரசவ கேஸ்கள் வரும் போது ஏன் இந்த ஆஸ்பத்திரி வார்டு உபயோகமாக வில்லை என்பதற்குச் சரியான காரணம் கூறப்பட வில்லை. மேற்படி விடுதிகளுக்கு ஆஸ்பத்திரி அபிவிருத்திக் கமிட்டி, ரூ. 20,000 நன்கொடை அளித்திருக்கிறது. இதையே பொதுமக்கள் பங்காகக் கொண்டு சமுதாய நல நிதியிலிருந்து உதவி புரியப்பட்டிருக்கிறது. சிறு உதவி பெறுவதில் காட்டும் சிரத்தையையே சர்க்கார் செயல் சாதனையிலும் காட்ட வேண்டும் என்று பொதுமக்கள் எதிர்பார்ப்பதில் தவறு இல்லை.

மலையாள நாட்டில் சமுதாய நலத் திட்டத்தில் பொதுமக்கள் தாங்களாக முன் வந்து



மலையாள நாட்டின் பிரசித்தி பெற்ற 'களரிப் பயிற்று' என்னும் தேகப் பயிற்சி பயிலும் மாணவர்கள். அகதாதேரா கிராமப் பள்ளியில் இப்பயிற்சி தரப்படுகிறது.

பங்கெடுத்துக்கொள்ளவில்லை என்பது அதிகாரிகளின் கூற்றிலிருந்து தெரிய வந்தது. ஆகவே இந்தப் பிராந்தியத்தின் அபிவிருத்திகளெல்லாம் பெரும்பாலும் சர்க்கார் செலவிலேயே நடைபெற்றிருக்கின்றன.

பெருங்கோட்டுக் குறிசியில் ஒரு ஹரிஜனக் காலனி கட்டப் பட்டிருக்கிறது. ஸ்ரீநாராயண நம்பூதிரிபாத் என்னும் அன்பர் தம் நிலத்தை ஹரிஜனக் காலனி கட்ட வழங்கியிருக்கிறார்.

மலபாரில் கல்வி அபிவிருத்திக்காக ஒன்றரை லட்ச ரூபாய் செலவு செய்யப்பட்டிருக்கிறது. கொல்லங்கோடு ராஜாவினால் நிர்வகிக்கப் பட்டு வரும் உயர் நிலைப் பள்ளிக்கு ரூ. 10,000 மான்யம் கொடுக்கப்பட்டிருக்கிறது. மேற்படி ராஜா உயர் நிலைப் பள்ளி மாணவர்கள் "கிராத அர்ஜுனீயம்" என்னும் கதக்களி நடன நாடகத்தை மிகவும் சிறப்பாக நடத்தினார்கள்.

## தென் கன்னடம்

மலையாள பூமியின் செழிப்பை யெல்லாம் பார்த்துக் கொண்டு மாலம்புழை அணைக்குப் போய்ச் சேர்ந்தோம்.

இந்த அணையின் காரணமாக மலபாரில் விவசாய அபிவிருத்தி கணிசமாயிருக்கிறது. கால்நடை அபிவிருத்தியும் அதிகரித்திருக்கிறது. ரூ. 3,84, 490 செலவில் இப் பகுதியில் முப்பத்திரண்டு பாலங்களுக்கு அனுமதி தரப் பட்டிருக்கின்றது.

பாலக்காட்டிலிருந்து திவ்ய க்ஷேத்திரமான குருவாயூர் சென்று ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைத் தரிசனம் செய்து கொண்டு மங்களூர் (தென் கன்னடம்) போனோம். மங்களூரிலிருந்து மேற்குத் தொடர்ச்சி மலைப் பகுதியில், குன்று, மலை, வனம், வனாந்தரங்க ளெல்லாம் ஜீப் காரில் வாயு வேகமாகச் சென்று அபிவிருத்தி வேலைகளைப் பார்வையிட்டோம். மலைப் பாதை கண்கொள்ளாக் காட்சியாயிருந்தது. பலா மரங்களும், முந்திரி மரங்களும், தேக்க மரங்களும், மாமரங்களும் அடர்ந்து வளர்ந்திருந்த காட்டுப் பாதைகளில் கிராமங்கள் பல இருந்தன. மலையாளத்தைப் போலவே இங்கும் வீடுகள் ஒன்றுக் கொன்று தொடர்பில்லாமல் தூரத்தில் தள்ளித் தள்ளியிருந்தன. அடர்த்தியான தோப்புகளிலிருந்து பெண்களின் இனிமையான பேச்சும் கல கலவென நகைக்கும் கிண்கிணி நாதமும் கேட்

டவே தவிர, ஒரு பெண் முகத்தைக் கூடப் பார்க்க முடியவில்லை. காட்டுப் பாதையின் செம்மண் புழுதியணிந்து சாமியார்க் கோலத்தில் கார்க்கல் போய்ச் சேர்ந்தோம்.

தென் கன்னடத்தில் மலைகளும் நதிகளும் அதிகம். ஆகவே, இப்பகுதியில் ரோடுகளும் பாலங்களும் போக்கு வரவு வசதிகளுக்கு இன்றியமையாதனவா யிருக்கின்றன. மேற்படி வசதிகளுக்காக ரூபாய் பன்னிரண்டு லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

இந்தப் பகுதிகளில், 'மூரக்கல்லு' என்று கூறப்படும் ஒருவகைக் கல் பூமியில் ஏராளமாக வெட்டி யெடுக்கப்படுகின்றது. அது கட்டட வேலைக்குப் பெரிதும் உதவியா யிருக்கின்றது.

இரண்டு மூன்று கிராமங்களில் நாங்கள் ஜீப் கார்களை விட்டு இறங்கிச் சிறு சிறு நதிகளைப் படகுகள் மூலம் கடக்கும்படியாயிற்று. நதியைத் தாண்டி மூல்க்கி என்ற ஊருக்குச் சென்றோம். மூல்க்கியில் கூட்டுறவு முறையில் பால் சப்ளை சொஸைட்டி ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. அதில் பால்காரர்களிடமிருந்து பாலை வாங்கி டிக்ரி வைத்துப் பார்த்து நல்ல பாலை ஜனங்களுக்கு வழங்குகிறார்கள். இது மற்ற எந்தக் கிராமத்திலும் காணப்படாத நல்ல அபிவிருத்தி சேவை.

இது வரையில் மாதர் சங்கங்களையும், மஹிளா சமாஜங்களையும் பார்த்துக் கொண்டு வந்த நாங்கள் தென் கன்னடக் கிராமங்களில் வனிதா சமாஜங்களைப் பார்த்தோம்.

கிராமங்களின் பெயர்களைப் பார்ப்போம். குர்ப்பூர், படகாடப் படவு, இருவயில், மூட்பித்ரி, சிறுத்தாடி, பெல்வாய், சாணூர், ஹெப்ரி, மூத்ராடி, நீர்த்தட்டி, மூட்டாபுடி, முனியால்—மேற்கூறிய ஊர்களில் பிராணி வளர்ப்பு, கோழிப்பண்ணை, ஆஸ்பத்திரி, குடியானவர் சங்கம், உயர்தர ஆரம்பப் பள்ளி, சிறு சிறு பாலங்கள், பொது ஹால்கள் முதலியவைகளைச் சமூதாய நல அபிவிருத்தியின் கீழ்க் கிராம மக்களின் பூரண ஒத்துழைப்புடன் கட்டி முடித்திருக்கின்றனர்.

கார்க்கல் பகுதியில் சில கலை நிகழ்ச்சிகளைப் பார்வையிட்டோம். 'யெலாட்டா' என்பது தென் கன்னடத்துக்கே உரிய காட்டு நடனம். அந்த நிகழ்ச்சியில் புலியூர் பள்ளி மாணவர்கள் பங்கெடுத்துக் கொண்டு பாராட்டும் முறையில் அபாரமாக நடித்தார்கள்.

மணிபால் என்ற ஊரில் தென் கன்னடத்துக்கே பெருமை தரும் விதத்தில், கஸ்தூரிபா வைத்தியக் கல்லூரி அமைந்திருக்கிறது. மூந்நூற்று நாற்பது மாணவர்கள் படிக்கின்றனர்; அவர்களுள் இருபத்துமூன்றுபேர் மாணவிகள்.

எங்கள் சுற்றுப் பிரயாணத்தின் எல்லையாக உடுப்பி க்ஷேத்திரம் அமைந்தது. அங்கு காலையில் ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்தோம்.

கார்க்கல் தாலூக்காவில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய சமூதாய நல அபிவிருத்திக் கிராமங்கள் இன்னா, ஹெஜ்மாடி, பாஜ்பே, கின்னிகோளி முதலியவை. இவற்றுள் இன்னா என்னும் கிராமம் பரிசுபெற்ற கிராமம். ஐயாயிரம் ஜனத்தொகை கொண்ட இந்தக் கிராமம் ரூபாய் ஐம்பதாயிரம் சமூதாய நல அபிவிருத்திக்காகக் கொடுத்திருக்கிறது என்று கேட்டு நாங்கள் ஆச்சரிய மடைந்தோம். மூல்க்கியில் உள்ள காதி க்ஷேத்திரம் எங்களைப் பெரிதும் கவர்ந்தது. இங்கு சிறந்த முறையில் ஒரு வனிதா சமாஜம் நடைபெறுகிறது. ஹிந்தி வகுப்பு, தையல் வகுப்பு, நூற்பு முதலியவற்றுடன் முதியோர் கல்வியும் பரப்பப்படுகிறது. கெம்ரால் என்னும் கிராமத்தில் ஒய். ஜீ. பட் என்னும் விவசாயி விவசாயத்தில் அபாரமாகச் சாதித்திருக்கிறார். அவரை அங்கு எல்லோரும் 'கிருஷி ரிஷி' என்று அழைக்கின்றனர்.

கார்க்கலில் ஜைன சமயத்தவர்கள் அதிகமாக இருக்கின்றனர். ஜைன சமயப் பள்ளிகளும் அங்கு காணப்படுகின்றன. ஜைன சமயத்துப் புராதன மன்னர் வம்சத்தைச் சேர்ந்த கோமடேசுவரரின் பெரிய சிலை, முப்பத்திரண்டு அடி உயரம் கொண்டது. வனப்பிரதேசத்தில் இடங்கொண்டிருக்கிறது. மைசூர், சிரவண பெல்கோலாவில் உள்ள கோமடேசுவரர் சிலையை விட இது சிறியது; அது ஐம்பத்தேழு அடி உயரம். கோமடேசுவரர் அரசனாயிருந்த பொழுது பாகுபலி என்று பெயர் பெற்றிருந்தார். தபஸ்வியான பிறகு கோமடேசுவரரானார். 'கும்மட்' என்றால் பிராகிருத மொழியில் கவர்ச்சியுள்ள என்று பொருள். கும்மட் கோமட என்றாகி ஈசுவரனோடு காலப்போக்கில் இணைந்து விட்டது. கி. பி. 1431 ல் நிறுவப்பெற்ற அம் மாபெரும் சிலை கால வெள்ளத்துக்கு ஈடு கொடுத்துக் கொண்டு பின்னமடையாமல் விளங்குகிறது. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை அந்தச் சிலைக்கு அபிஷேகமும் ஆராதனையும் நடக்குமாம்.

மங்களூரில், சுகாதார மந்திரி ஸ்ரீ ஏ. பி. ஷெட்டி அவர்கள் பத்திரிகையாளர்களுக்குப் பிரமாதமான ஒரு விருந்து வைத்தார்.

காலையில், தென் கன்னடத்தின் பிரசித்தி பெற்ற வக்கீலான ஸ்ரீ வைகுண்ட பாளிகா எம். எல். ஏ., அவர்களின் இல்லத்தில் சிற்றுண்டி உண்டு, மங்களூரிலிருந்து விடை பெற்றுக் கொண்டோம்.

வழி நெடுக ஜீப்கார் பிரயாணத்தில் நாங்கள் உட்கொண்ட மண் புழுதி கண்டம் வரையில் நிறைந்து எங்கள் சாரீர வளத்தைப் பெரிதும் பாதித்து விட்டது. எல்லோரும் கரகரப்ரியா பாடினோம். அதாவது கரகரத்த குரலில் பேசினோம்! எங்கள் தொண்டையைச் சரிப்படுத்திக் கொள்ளுவதற்கு வழிப் பிரயாணத்தில் ஏராளமான வாய்ப்புகள் கிடைத்தன. நாங்கள் விஜயம் செய்த ஊர்களிலெல்லாம், எங்களுக்கு இளநீர், பானகம், நீர்மோர், காப்பி, எலுமிச்சம் பழரஸம் இப்படிப் பலவிதமான பான வகைகள் கிடைத்தன. அவற்றை யெல்லாம் ஒருவாறு நீர்த்துக் கட்டியதில் தொண்டையில் தங்கியிருந்த மண் புழுதி பத்திரமாக வயிற்றுக்குள் போய் விட்டது. எங்கள் உடைகளைப் பற்றியிருந்த மண்ணாசையை உதற எங்களுக்குச் சர்க்கார் உதவி கிடைத்தது. பாலக்காட்டில் ஒரு தடவையும், மங்களூரில் ஒரு தடவையும் எங்களை வெளுத்து வாங்கி விட்டார்கள்! ஆமாம், எங்களுடைய உடைகளை யெல்லாம் சலவை செய்து கொடுத்ததைத்தான் குறிப்பிடுகிறேன்!

சுதந்திர பாரதத்தைச் சுபிட்சப் பாதையில் செலுத்தும் அபிவிருத்தித் திட்டங்களில் மக்கள் ஒத்துழைக்க வேண்டியது அவர்கள் கடமை.

# கால்கேட் குளோரோபில்*

# ஈறுகளை பலப்படுத்துகிறது

## வைத்திய சோதனை நிரூபிக்கிறது!



**ஈறுகளைப் பலப்படுத்து கிறது!**

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!**

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை வழக்கமாகத் தேய்ப்பதால், குளோரோபில் மூலம் அது ஈறுகளைப் பலப்படுத்துகிறது.

வேறு சாதாரண பற்பசையை விட மிகமிகத் தீவிரமாக வாய்நாற்றத்தை கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஒழிக்கிறது என்பது ருசுவான உண்மை.

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொருமுறையும், சாப்பிட்டவுடன் தேய்ப்பதால் பல் எனாமலை அரிக்கும் நாச அமிலங்களும், அவற்றை விளைவிக்கும் கிருமிகளும் குறைகின்றன!

**வேறு எந்த பற்பசையிலும் இதைவிட வீரிய குளோரோபில் இல்லை**

குழந்தைகள் விரும்பும் மதுரமான சுவை. மதுரமான இனிய சுவையுள்ள கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை குழந்தைகள் கூட விரும்புவார்கள்.




**குளோரோபில் டூத்பேஸ்டின் பூரண நன்மைகளைத்தரும் விசேஷ கால்கேட் சூத்திரம்!**

* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது.

CTPA/G/5

# மடியில் மூட்டை

ஆத்தங்குடி சுவாமியாரின் ஆசிரமத்துக்கு ஒரு கிழவன் வந்தான். வணங்கி, "நல்லுலகம் சேரும் வழியை எனக்குச் சொலல வேண்டும்" என்று வேண்டினான்.

சுவாமியார் உபதேசப் பேச்சுக்கள் ஒன்றும் சொல்லவில்லை. "இந்த ஊருக்கு நீர் வந்த காரியம் என்ன?" என்று கேட்டார்.

"பேரனுக்கு ஒரு நல்ல இடம் பார்த்து விவாகம் செய்து விடலாம் என்று பெண் பார்க்க வந்தேன்" என்றான் அவன்.

"அந்தக் காரியம் முடிந்ததா?" என்று சுவாமியார் கேட்டார்.

"ஒருவாறு முடிந்தது" என்றான்.

"என்னிடம் ஏன் வந்தீர்?" என்று கேட்டார் சுவாமியார்.

"எல்லாரும் உங்களிடம் உபதேசம் பெற்று வருவதாகச் சொன்னார்கள். நானும் பார்த்துப் போகலாம் என்று வந்தேன்" என்றான்.

"வாரும்! ஆற்றங்கரைக்குப் போவோம்!" என்று அவனையும் கூட்டிக்கொண்டு ஆற்றங்கரைக்குச் சென்றார்.

அக்கரையில் பெரிய திருவிழா. இக்கரையிலுள்ள கிராமத்தார்கள் திரள் திரளாக ஆற்றங்கரையில் ஓடம் ஏறிச் செல்லுவதற்குக் கூடி யிருந்தார்கள்.

"ஓடத்தில் பாரம் ஏற்றக் கூடாது. ஆட்கள் மட்டுந்தான் ஏறலாம்" என்றான் படகோட்டி.

ஒரு குடியானவன் தன் மூட்டையை எடுத்துக் கொண்டு ஓடத்தில் ஏறப் போன போது படகோட்டி இப்படி ஆட்சேபித்தான்.





"மூட்டையை நீ ஏற்றிக்கொள்ள வேண்டியதில்லை. என் மடியிலேயே வைத்துக் கொண்டு உட்காருகிறேன். ஏன் தடுக்கிறாய்?" என்றான் குடியானவன்.

"நீ உன் மடியில் மூட்டையை வைத்துக் கொண்டு உட்காரலாம். ஆனால் உன் மூட்டையையும் உன்னையும் இரண்டையும் தாங்க வேண்டுமே இந்த ஓடம்? ஒவ்வொருவரும் இப்படியே மூட்டைகள் கொண்டு வந்து உட்கார்ந்தால் என்னுடைய ஓடம் மூழ்கிப் போகும்" என்றான் ஓடக்காரன்.

"மூட்டையை நான் என்ன செய்வேன்? மூட்டை யில்லாமல் நான் ஆறு தாண்டினாலும் என்ன பயன்?" என்று குடியானவன் கவலைப்பட்டு வாதாடினான்.

படகோட்டி மிகக் கண்டிப்பானவன். மூட்டைகள் ஓடத்தில் கூடவே கூடாது என்று சொல்லிவிட்டு "மூட்டைகள் வைத்திருப்பவர்கள் தயவுசெய்து இறங்கிவிட வேண்டும்" என்றான்.

சிலர் இறங்கி விட்டார்கள். வேறு சிலர் சத்திரத்து அதிகாரியிடம் மூட்டைகளை வைத்துவிட்டு வெறுங் கையாக ஓடத்தில் தைரியமாக ஏறினார்கள்.

'மூட்டையை விட மாட்டோம்' என்றவர்கள் நின்று போனார்கள்.

ஓடம் நகர்ந்து விட்டது

"நம்முடைய மூட்டையை இன்னொருவர் கையில் எப்படிக் கொடுக்க முடியும்? திருவிழா முடிந்து போய் விடுமே. நாம் போவதற்கு இல்லாமல் போய் விட்டதே" என்று வருந்தினார்கள்.

"அந்தப் படகு பாரம் தூக்கிச் செல்லாது. வெறுங் கையாகத்தான் ஏற வேண்டும் என்பது உங்களுக்குத் தெரியாதா?" என்றான் சத்திரத்து அதிகாரி.

"நான் என் மடியில் மூட்டையை வைத்துக்கொண்டு உட்கார்ந்தால் படகுக்கு என்ன பெரும் பாரமாய்ப் போகும்?" என்று குடியானவன் கோபமாகப் பேசினான்.

மூர்க்கனோடு என்ன பேசிப் பயன் என்று அவனோடு யாரும் விவாதம் செய்யவில்லை.

"பார்த்தீரா?" என்றார் சுவாமியார்.

"பார்த்தேன். இதில் என்ன விசேஷம்?" என்றான் பேரனுக்குப் பெண் பார்க்க வந்தவன்.

"நல்லுலகம் போய்ச் சேரும் வழி கேட்டீரே. அதற்கு நீர் முதலில் செய்ய வேண்டியது உம்முடைய மூட்டைகளை ஆண்டவனிடம் ஒப்புவித்துவிட வேண்டும். அதைச் செய்ய நீர் இஷ்டப்படுகிறீரா?" என்றார்.

"வீட்டில் கிழவியிடம் யோசித்துத் தான் சொல்ல வேண்டும்!" என்றான் அவன்.

"திருவிழா முடிந்து போகுமே!" என்றார் சாமியார்.




# பெரும் தெறியல்

ஒரு நிமிஷம் கூட, இந்த சேட்ஜிக்கு ஓய்வில்லை. ஆனால் அவர் ஸ்னான அறையில் செய்யும் கடபுடாக்களுக்கு, பங்கு மார்க்கெட்டில் செய்யும் தாம் தூம்கள் ஈடு போடக் காணாது. காரணம், அவர் சொல்வது: ஹமாம் சோப் தான் வாழ்க்கையை சகிக்கும்படி செய்கிறது!
இதை நாங்கள் நம்பாவிட்டாலும்,
ஹமாம் சோப் ஒரு நல்ல டாய்லட்
சோப் என்பதை யாராலும்
மறுக்க முடியாது.






மகிழ்ச்சி கூடிய புத்துணர்ச்சி தருவது

டாடாவின்

# ஹமாம்

டாய்லட் சோப்

டாடா ஆயில் மில்ஸ்

இந்திய மூலதனத்துடன், இந்திய நிர்வாகத்தில், இந்தியாவிலேயே தயாரிக்கப்படுவது.

SISTA'S TOM-I-TAH.

## 35. இருண்ட குகையில்!




ரமணியைக் காணாத மாலதி, "ஐயோ! ரமணி அண்ணாவைக் காணோமே!" என்றாள். உடனே சிற்சபேசனும், "ரமணி! ரமணி!" என்று பலமாகக் கூவினார். ரமணி வரவில்லை.

"எங்கே போயிருப்பான்? சொல்லாமல் போக மாட்டானே. ஒரு வேளை டாக்டர் ஆனந்தராவ் வீட்டுக்குப் போயிருப்பானோ!" என்று நினைத்து வேலைக்காரர்களை டாக்டர் வீட்டுக்கு அனுப்பினார். அங்கேயும் ரமணி இல்லை. அக்கம் பக்கத்து வீடுகளில் தேடிப் பார்க்கச் சொன்னார். அந்த வட்டாரம் முழுதும் அலசிப் பார்த்தும், ரமணியைக் காணோம்! எல்லோருக்கும் ஒரே திகிலாயிருந்தது!

* * *

மூன்று நிமிஷமாகியும் காமாட்சி அம்மாளுக்கு மயக்கம் தெளியாததால், ரமணிக்குப் பயம் அதிகமாகி விட்டது. "சரி, சரி! இனியும் இங்கு இருப்பதில் பயனில்லை. உடனே ஓடிப் போய் நமது டாக்டரை அழைத்து வருவதே நல்லது" என்று தீர்மானித்தான். மறு நிமிஷம், சிற்சபேசனிடம்கூடக் கூறாமல், தலை தெறிக்க அவர்களது குடும்ப டாக்டர் வீட்டை நோக்கி வேகமாக ஓடினான்.

டாக்டர் வீட்டுக்கு இன்னும் ஒரு பர்லாங்கு தூரம்கூட இல்லை. ஒரு சந்திலே ரமணி வேகமாக ஓடிக் கொண்டிருந்தான். அப்போது, யாரோ இருவர் திடீரென்று அவன் மேல் பாய்ந்தார்கள். அவர்களில் ஒருவன் தன் கைகளால் ரமணியின் வாயைப் பலமாகப் பொத்தினான். மற்றொருவன் ஒரு முரட்டுத் துணியால் ரமணியின் முகத்தை நன்றாக மூடி விட்டான். ரமணிக்கு ஒன்றும் புரியவில்லை. எப்படியாவது அவர்களிடமிருந்து தப்பித்துக் கொள்ள வேண்டுமென்று கையையும், காலையும் ஆட்டிப் பார்த்தான். அசைக்க முடியாதபடி அந்த முரடர்கள் இரும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டார்கள். வாய் திறந்து கத்தவும் முடியாதபடி செய்து விட்டார்கள். திடீரென்று ஏற்பட்ட அதிர்ச்சியால் ரமணி மூர்ச்சையடைந்து விட்டான்.

ரமணி கண் விழித்துப் பார்த்தபோது, அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. எழுந்து உட்கார்ந்து கொண்டு, 'நாம் எங்கே இருக்கிறோம்?' என்று கலவரத்தோடே பார்த்தான். அவன் இருந்த இடத்தில் மின்சார விளக்குகள் இல்லை; ஒரே ஒரு பழங்காலத்து லாந்தர் மட்டும் எரிந்து கொண்டிருந்தது. சுற்றிலும் வழவழப்பான சுவர்கள் இல்லை; கரடு முரடான பாறைகளே இருந்தன. சிற்சபேசன், காமாட்சி அம்மாள், மாலதி இவர்களில் யாராவது அங்கே இருக்கிறார்களா என்று பார்த்தான்; யாரையும் காணோம்!

"ஐயோ! இது என்ன குகை மாதிரியல்லவா இருக்கிறது! நம்மை ஏன் இங்கு கொண்டு வந்தார்கள்?" என்று அவன் புரியாமல் விழித்தான். மறு நிமிஷம், 'காமாட்சியம்மாளின் உடம்பு இப்போது எப்படி இருக்குமோ!' என்ற கவலை வந்து விட்டது. உடனே தன்னையும் அறியாமல், 'அம்மா!' என்று வாய்விட்டுக் கதறி விட்டான்.

அவன் அப்படிக் கதறியதுதான் தாமதம். மற்றொரு பக்கத்திலிருந்து நாலு முரடர்கள் அவன் இருந்த இடத்துக்கு ஓடி வந்தார்கள். அவர்களைப் பார்த்ததும் ரமணிக்குப் பயமாக இருந்தது. ஒரு முறை அவர்களை ஏற இறங்கப் பார்த்தான். அந்த நாலு பேரில், மூன்று பேர் பர்மாக்காரர்கள். ஒரே ஒருவன் மட்டும் இந்தியன் – அவனும் தமிழன் என்று ரமணிக்குத் தெரிந்தது.

"தம்பி, பயப்படாதே! உன்னை நாங்கள் ஒன்றும் செய்ய மாட்டோம்" என்றான், அவர்களில் மிகவும் பருமனாக இருந்த ஒரு பர்மாக்காரன். அவன் தான் அவர்களுக்குத் தலைவன்.

"நீங்கள் யார்? எதற்காக என்னை இங்கே கொண்டு வந்தீர்கள்? அம்மாவுக்கு ஆபத்து என்று டாக்டரைக் கூப்பிடப் போன என்னை இங்கே கொண்டு வந்து விட்டீர்களே? ஐயோ! அம்மாவுக்கு என்ன ஆனதோ?" என்று கூறி அழுதான் ரமணி.

உடனே அந்தத் தலைவன், "ஏன் தம்பி அழுகிறாய்? உன் அம்மாவுக்கு உடம்பு சரியாகி விடும். கவலைப்படாதே! உனக்கு இப்போது ஆகாரம் தரச் சொல்கிறேன். சாப்பிட்டு விட்டுச் சுகமாகத் தூங்கு. காலையில் பேசிக் கொள்ளலாம்" என்று கூறி விட்டு, "சுப்பையா, தம்பிக்கு ஆகாரம் கொண்டு வா" என்று அங்கிருந்த தமிழனைப் பார்த்து உத்தரவிட்டான்.

உடனே ரமணி, "வேண்டாம், வேண்டாம். எனக்குப் பசியே இல்லை. என்னை எப்படியாவது டாக்டர் ஆனந்தராவ் வீட்டில் கொண்டு போய் விட்டு விடுங்கள். உங்களுக்குக் கோடிப் புண்ணியம்" என்று மிகவும் கெஞ்சிக் கேட்டான்.

"தம்பி, வீணாக அலட்டிக் கொள்ளாதே! உன் அப்பா மனசு வைத்தால், நீ வெகு சீக்கிரம் வீட்டுக்குப் போய் விடலாம்" என்றான் தலைவன்.

"என்ன! என் அப்பா மனசு வைக்க வேண்டுமா? அவர்தான் எப்போதோ இறந்து போய் விட்டாரே!"

ரமணி இப்படிச் சொன்னதும் தலைவன் பலமாக ஒரு சிரிப்புச் சிரித்தான். பிறகு, "ஓஹோ! அப்பா இறந்து போய் விட்டார் என்றால், நாங்கள் உன்னை விட்டு விடுவோம் என்றுதானே நினைக்கிறாய்? அதுதான் நடக்காது. உன் அப்பா சிற்சபேசனை எங்களுக்குத் தெரியாதென்று நினைத்து விடாதே! அவர்தான் கல்லுப் பிள்ளையார் மாதிரி இன்னும் உயிரோடு இருக்கிறாரே!" என்றான்.

"ஐயோ! நான் ஓர் அனாதை. சிற்சபேசன் என் அப்பா இல்லை" என்று ரமணி சொல்லும்போதே, "சரி, சரி. இப்போது அதைப் பற்றி என்ன கவலை? பேசாமல் படுத்துத் தூங்கு. காலையில் பார்த்துக் கொள்ளலாம்" என்று கூறி விட்டுத் தலைவன் அங்கிருந்த ஒரு கட்டிலில் படுத்துக் கொண்டான். மற்றவர்களும் அங்கேயே படுத்துக் கொண்டார்கள். ரமணிக்குத் தூக்கம் வரவில்லை. "அப்பா மனசு வைத்தால் சீக்கிரம் போய் விடலாம் என்கிறான் இந்த

முரடன். ஆனால், அவர் என்ன செய்ய வேண்டும் என்பதை விவரமாகச் சொல்ல மாட்டேன் என்கிறானே! அது என்னவாக இருக்கும்?" என்று யோசித்துப் பார்த்தான். அதற்குள் காமாட்சி அம்மாள், சிற்சபேசன், மாலதி முதலியோரது நினைவு வந்து விட்டது. அத்துடன், "இன்று கதை கேட்கக் குழந்தைகளெல்லாம் வருவார்களே! அவர்களுக்கெல்லாம் எவ்வளவு ஏமாற்றமாக இருக்கும்?" என்ற கவலையும் சேர்ந்து கொண்டது. இவற்றையெல்லாம் நினைத்து நினைத்துக் கண்ணீர் விட்டுக் கொண்டே இருந்தான்.

வெகு நேரம் ஆயிற்று. தூங்கிக் கொண்டிருந்த தலைவன் சோம்பல் முறித்துக் கொண்டே எழுந்தான். உடனே ஒரு பெரிய கொட்டாவி விட்டான். பிறகு, "டேய், டேய், எல்லோரும் எழுந்திருங்கள். பொழுது விடிந்து விட்டது" என்று கத்தினான். சத்தம் கேட்டு மற்ற மூவரும் எழுந்தார்கள். அப்போதுதான் ரமணிக்குப் பொழுது விடிந்து விட்டது என்பது தெரிந்தது. அந்தக் குகை இரவிலும் பகலிலும் ஒரே இருட்டாகத்தான் இருந்தது. சூரிய வெளிச்சம்தான் அங்கே நுழைய முடியாதே!

எழுந்தவுடனே அந்த முரடர்கள் அங்குள்ள விளக்குகளையெல்லாம் ஏற்றினார்கள். எல்லாம் அகல் விளக்குகள். விளக்குகளையெல்லாம் ஏற்றியதும், குகையில் வெளிச்சம் நன்றாகத் தெரிந்தது. ரமணி அந்த வெளிச்சத்தில் சுற்றிலும் ஒரு பார்வை பார்த்தான்.

குகையின் ஒரு மூலையைப் பார்த்ததும், ரமணிக்கு ஆச்சரியமாயிருந்தது. "யாரது! நம்மைப் போல் அங்கே ஒரு பையன் உட்கார்ந்திருக்கிறானே!" என்று கூர்ந்து பார்த்தான். அந்தப் பையன் மூலையிலுள்ள ஒரு பாறை மேல் உட்கார்ந்திருந்தான். அவன் ரமணியை விடக் கொஞ்சம் சின்னவன். அவனும் தமிழ் நாட்டைச் சேர்ந்தவனாகத்தான் இருந்தான்.

"இவன் யார்? எப்படி இங்கே வந்தான்? ஒரு வேளை இவர்கள் பிள்ளை பிடிக்கிறவர்களோ...!" என்று நினைத்துக் கொண்டே அந்தப் பையனையே ரமணி உற்றுப் பார்த்தான். அந்தப் பையனும் ரமணியைப் பார்த்து விட்டான். உடனே அவன் ஒரு புன் சிரிப்புச் சிரித்தான். வேறு ஒன்றும் செய்யவில்லை. ரமணியும் அந்தப் பையனும் ஒருவரை ஒருவர் உற்றுப் பார்த்துக் கொண்டே இருந்தார்கள்! (தொடரும்)

# தமிழ் கூறும் நல்லுலகம்

ஜெம்ஷெட்பூர் கோல்மூரி தென் இந்திய சங்கத்தார் தங்களது சங்கக் கட்டடத்தின் முதலாவது ஆண்டு விழாவைப் பிப்ரவரி 19-ந் தேதி டின்பிளேட் கம்பெனி ஜெனரல் மானேஜர், எம். ஆர். ஸி. எச். வாட்சன் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடினார்கள்.

ஆண்டு விழாவை டாக்டர் ஸி. பி ராமஸ்வாமி அய்யர் அவர்கள் துவக்கி வைத்தார். தென் இந்தியர்களையும், ஸ்காட்லாந்து தேசத்து மக்களையும் வெகு அழகாக ஒப்பிட்டுப் பேசினார். சங்கத்தலைவர், ஸ்ரீ என். எஸ். மகாதேவ அய்யர் அவர்கள் வந்தனோபசாரம் வழங்கினார். மாலை ஆறு மணிக்குக் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

• ★ •

முத்தமிழில் ஒன்றான நாடகத் தமிழில் இப்பொழுது மக்களுக்கு ஆர்வம் மிகுந்து வருகிறது. நாகபுரி தென் இந்திய மாதர் சங்க அங்கத்தினர்கள் 11-2-56 சனிக்கிழமை யன்று 'ஸ்ரீ ஆண்டாள்' என்னும் நாடகத்தைத் தமிழில் விமரிசையாக நடித்தனர்.

அன்றைய விழாவுக்கு நாகப்பூர் லேடி அமிர்தா பாய் டாகா மாதர் கல்லூரியின் தலைமைப் பேராசிரியை டாக்டர் மிஸ் அய்யங்கார் அவர்கள் தலைமை வகித்து, அன்று நடிக்கப்பட்ட 'ஆண்டாள்' நாட



கத்தைப் பற்றியும், மாதர் குழுவினர் திறமையாக நடித்ததைப் பற்றியும் பாராட்டிப் பேசினார்கள்.

• ★ •

பர்மாவில் நாட்டுக்கோட்டை வர்த்தகர்கள் சமூகம் மிகவும் செல்வாக்குப் பெற்ற சமூகம். அவர்கள் வர்த்தக சங்கம் ஒன்று அமைத்துத் திறம்படத் தமிழர் உரிமைகளைப் பாதுகாத்து வருகிறார்கள்.

அடியிற் கண்டுள்ள உத்தியோகஸ்தர்களும் நிர்வாக சபை அங்கத்தினர்களும் 9-2-56 தேதியில் நடைபெற்ற சங்க மகா சபைக் கூட்டத்தில் 1956-ம் ஆண்டின் வர்த்தக சங்க நிர்வாகத்துக்காகத் தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளனர்.

தலைவர்: திரு பெரி. அ. மு. மாணிக்கம் செட்டியார். உப-தலைவர்: திரு அரு. அரு. நாராயணன்செட்டியார், காரியதரிசி: திரு பெரி. ராம. பழ. காசிவிஸ்வநாதன் செட்டியார், உதவிக் காரியதரிசி: திரு கரு. தெ. வேலாயுதம் செட்டியார், பொக்கிஷதார்: திரு அரு. சா. அரு. மெய்யப்ப செட்டியார், கணக்குப் பரிசோதகர்: திரு லெ. வி. வினைதீர்த்தான் செட்டியார்.

நிர்வாக சபை அங்கத்தினர்கள்: திரு ராம. வீர. ராமசாமி செட்டியார், திரு முத்து. கரு. அரு. பழ. லெ. செல்லப்ப செட்டியார், திரு கண. மா. கண்ணப்ப செட்டியார், திரு மு.ப. அ. சொ. கருப்பையா செட்டியார், திரு மெ. பழ. மலையாண்டி செட்டியார், திரு வ. சுப. நாச்சியப்ப செட்டியார்.

பர்மாவிலுள்ள அகில பர்மா தமிழர் சங்கத்தினர் தமிழ் நாட்டில் புயலின் கொடுமையினால் நிகழ்ந்துள்ள துயரைத் தீர்க்க முன் வந்திருக்கிறார்கள். தமிழ் நாடு புயல் நிவாரண நிதிக் கமிட்டி ஒன்று நிறுவி, முதல் நன்கொடையாக ரூ. 35,000 வழங்கி யிருக்கிறார்கள்.

• ★ •

பீகார் மாகாணத்தில் நிலக்கரிச் சுரங்கங்களுக்கு மத்தியிலுள்ள சிந்திரியைப் பற்றி அனைவருக்கும் தெரிந்திருக்கலாம். உரம் உற்பத்தி செய்யப்படும் இத் தொழிற்சாலையில் சுமார் 600 தென்னிந்தியர்கள் வேலை பார்த்து வருகிறார்கள்.

சிந்திரித் தென்னிந்தியர்களின் "கர்னாடக மண்டலி" சார்பில் இவ்வருடம் தியாகப் பிரும்ம உத்சவம் பெப்ருவரி 12-ந் தேதி யன்று விமரிசையாக நடந்தேறியது.

ஆராதனைக்குப் பிறகு மாலை நான்கு மணி முதல் ஒன்பது மணி வரை நடைபெற்ற பாட்டுக் கச்சேரிகள் அனைவரையும் கான வெள்ளத்தில் ஆழ்த்தியது. இவ்வைபவத்துக்குச் சிந்திரி தொழிற்சாலையின் உற்பத்தி அதிபர் டாக்டர் கே. எல். ராமசாமி, மானேஜிங் டைரக்டர் திரு நீலகண்டன் அவர்கள், மனைவி ஸ்ரீமதி நீலகண்டன் முதலியவர்கள் வந்திருந்து பாட்டுக் கச்சேரிகளில் பங்கெடுத்துக் கொண்டவர்களை உற்சாகமூட்டினர்

ருஷ்ய நாட்டு நாடோடிக் கதை

# யமனும் சிப்பாயும்

மொழிபெயர்ப்பு:

**எஸ். வி. எஸ்.**

இருபத்தைந்து வருடம் ராணுவத்தில் சேவை செய்த பின் அந்தச் சிப்பாய் வீட்டுக்கு அனுப்பப் பட்டான். அவன் போகும்போது அவனுக்கு மேல் அதிகாரி பின் வருமாறு சொல்லி யனுப்பினார்: "இந்த இருபத்தைந்து வருட காலமும் நீ ராணுவத்தில் திறம்பட வேலை செய்து விட்டாய். இனி நீ சுதந்திர புருஷன். எங்கே வேண்டுமானாலும் போகலாம்!"

இதைக் கேட்டு விட்டு அவன் யோசித்துக் கொண்டே நடந்தான். "ஸார் மன்னனுக்கு இருபத்தைந்து ஆண்டுகள் சேவகம் செய்திருக்கிறேன். என்ன பிரயோசனம்! இருபத்தைந்து முள்ளங்கிகள்கூட என்னிடம் இல்லை. என் வழிப் பிரயாணத்தில் உண்பதற்கு என்று மூன்று காய்ந்த ரொட்டித் துண்டுகள் கொடுத்திருக்கிறார்கள். அவ்வளவுதான். இனி நான் என்ன செய்வது! சிப்பாயாக வாழ்ந்த நான் எங்கே தலைவைத்துப் படுக்க முடியும்! நேரே வீட்டுக்குப் போக வேண்டியதுதான். என் அப்பா அம்மா உயிரோடிருக்கிறார்களோ என்னவோ! இறந்து போயிருந்தார்களானால் அவர்கள் கல்லறைகளுக்குப் பக்கத்தில் நானும் உட்கார்ந்து காலத்தைக் கழிக்கப் போகிறேன்."

இப்படி யெல்லாம் சிந்தித்துக் கொண்டு வீட்டை நோக்கி நடந்தான். நடந்தான், நடந்தான், அப்படி நடந்தான். கையிலிருந்த மூன்று ரொட்டித் துண்டுகளில் இரண்டைச் செலவழித்து விட்டான். ஒன்றுதான் பாக்கியிருந்தது. ஆனால் அவன் நடந்து போய்ச் சேர வேண்டிய ஊரோ இன்னும் வெகு தூரத்தில் இருந்தது.

வழியில் அவன் ஒரு பிச்சைக்காரனைப் பார்த்தான். அவன், "ஐயா சிப்பாய்! நான் ஒரு மூடவன். ஏதாகிலும் தின்பதற்கு இருந்தால் கொடுங்களேன்" என்றான்.

சிப்பாய் தன் கையிலிருந்த கடைசி ரொட்டித்துண்டையும் எடுத்து அவனிடம் கொடுத்து விட்டான். ஆம், நான் ஒரு சிப்பாய். எப்படியாகிலும் உணவைத் தேடிக் கொள்ளலாம். ஆனால் இந்தப் பிச்சைக்காரன் என்ன செய்வான், பாவம்! கிழவன், மேலும் மூடவன் என்று நினைத்துத் தன் ரொட்டித் துண்டைக் கொடுத்து விட்டு மேலே நடந்தான்.

சாலையோரம் ஒரு ஏரியைப் பார்த்தான். அந்த ஏரியில் காட்டு வாத்துகள் நீந்திக் கொண்டிருந்தன. ஏரியில் இறங்கி, சிப்பாய் மெல்ல ஊர்ந்து சென்று, சமயம் பார்த்து மூன்று வாத்துக்களைக் கொன்றான். "இன்றையச் சாப்பாட்டைப் பற்றிய கவலை விட்டது" என்று நீண்ட பெருமூச்சு விட்டான்.





மூன்று வாத்துக்களைக் கையில் எடுத்துக்கொண்டு மீண்டும் சாலையில் நடக்கலானான். கொஞ்ச தூரம் நடந்ததும் அங்கே ஒரு ஊர் தென்பட்டது. ஊரில் எங்கேயாகிலும் உணவு விடுதி யிருக்கிறதா என்று தேடிக் கண்டு பிடித்தான். அந்த உணவு விடுதியின் சொந்தக்காரரிடம் மூன்றுவாத்துக்களையும் கொடுத்து, தனக்குச் சாப்பாடு போடச் சொன்னான். அந்த விடுதிக்காரருக்கு ஒரே சந்தோஷம். நல்ல சாப்பாடாகச் சமைத்துப் போட்டார்.

சிப்பாய் சாப்பாட்டை ரொம்பவும் அனுபவித்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அந்தச் சமயம் தெருவின் எதிர் வரிசையில் ஒரு புதுக் கட்டடம் இருப்பது அவன் கண்ணில் பட்டது. "இது யாருடைய கட்டடம்!" என்று உணவு விடுதிக்காரரைக் கேட்டான்.

"இந்த ஊரிலேயே பெரிய பணக்கார வியாபாரி ஒருவர் இருக்கிறார். அவர் தமக்கென்று இந்தக் கட்டடத்தை எவ்வளவோ ஆசையோடு கட்டி முடித்தார். ஆனால் பாவம், அவரால் அங்கே போய்க் குடி யிருக்கத்தான் முடியவில்லை!" என்றார் மிக்க வருத்தத்துடன்.

"ஏன்!" என்று கேட்டான் இளம் சிப்பாய்.

"ஏனென்றால் அந்த வீட்டில் ஒரே பிசாசுகள். ராத்திரி வேளையானால் பிசாசுகள் கூப்பாடு போட்டு, கூத்தாடி, பண்ணும் அட்டகாசம் கொஞ்ச நஞ்சமல்ல. இருட்டி விட்டதானால் ஜனங்கள் அந்த வீட்டின் பக்கமாகப் போகக்கூடப் பயப்படுகிறார்கள்."

சிப்பாய் இதைக் கேட்டதும், "அந்த வியாபாரி எங்கே இருக்கிறார்! அவரை எனக்குப் பார்த்துப் பேச வேண்டும் போலிருக்கிறதே. என்னால் ஏதாகிலும் உதவி அவருக்குச் செய்ய முடியும் போலவும் தோன்றுகிறது!" என்றான்.

உணவு விடுதிக்காரர் விலாசத்தைச் சொன்னார். சிப்பாய் அன்றிரவு விடுதியிலேயே படுத்துத் தூங்கி விட்டு, விடியற்காலை சூரியோதயமாவதற்கு முன்பே அந்த வியாபாரியின் வீடு நோக்கிப் புறப்பட்டான்.

சிப்பாயைப் பார்த்ததும் வியாபாரி, "என்ன ஐயா சிப்பாய்! உனக்கு என்ன வேண்டும்!" என்று மிருந்த அன்புடன் கேட்டார்.

"நான் ஒரு வழிப்போக்கன்; எனக்கு வேண்டியது என்ன இருக்கிறது! ஒன்றுமில்லை. ஆனால் உங்கள்

புது வீடு காலியாக இருப்பதாகக் கேள்விப் பட்டேன். அந்த வீட்டில் இன்றைய ஓர் இரவு தங்க அனுமதி கொடுத்தால் போதும்."

வியாபாரி, "ஏன் ஐயா, உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா! அல்லது உனக்கு வாழ்ந்தது போதும் என்று சலிப்புத் தோன்றி விட்டதா! வேறு எங்கேயாவது இடம் பார், ஐயா! ஊரில் வேண்டிய வீடுகள் இருக்கின்றன. என் புது வீட்டில் பிசாசுகள் இருக்கின்றன. அவற்றை விரட்டவே முடியவில்லை!"

"ஒரு வேளை என்னால் விரட்ட முடியலாம். அந்தப் பிசாசுகள் இந்தக் கிழச் சிப்பாயின் உத்தரவுக்குக் கீழ்ப் படிந்து வீட்டை விட்டு வெளியே போனாலும் போய் விடலாம். யார் கண்டார்கள்!" என்று உறுதியாகக் கூறினான்.



"உன்னை விட எவ்வளவோ வீரமும் திறமும் பெற்றவர்கள் எல்லாம் முயன்று பார்த்தார்கள். அவர்கள் முயற்சிகள் எல்லாம் வீணாயின. பலிக்கவில்லை. அவற்றை விரட்டுவது என்பது முடியாத காரியம். போன வருஷம் ஒரு வழிப்போக்கன் வந்திருந்தான். அவனும் உன்னைப்போல் அந்தப் பிசாசுகளை விரட்டி விடுகிறேன் என்று சொல்லிக் கொண்டு வந்தான். அது மட்டுமல்ல; இரவு அந்த வீட்டில் படுக்கக் கூடத் துணிந்தான். மறுநாள் காலை நாங்கள் வீட்டுக்குள் போய்ப் பார்த்தால் ஆளைக் காணவில்லை. அவன் எலும்புகள் தான் இருந்தன. பிசாசுகள் ராத்திரி அவனைக் கொன்றிருக்கின்றன!"

"ஆனால் ஐயா சொல்லுகிற சமாசாரம் வேறு. அவனைத் தீ பொசுக்காது! தண்ணீரும் மூழ்க அடிக்காது! நான் இருபத்தைந்து வருஷம் பட்டாளத்தில் வேலை செய்திருக்கிறேன். எல்லா வகைச் சண்டைகளும் போட்டிருக்கிறேன். எல்லாவித போர்களிலும் பங்கு எடுத்துக் கொண்டிருக்கிறேன். இத்தனைக்கும் பிறகும் நான் உயிரோடிருக்கிறேன், அந்த வீரப்போர்க் கதைகள் எல்லாம் சொல்லுவதற்கு. அதனால் இந்தப் பிசாசுகள் ஒரு பெரிய காரியமில்லை. அவற்றை நிச்சயம் வென்று விடுவேன் என்ற துணிச்சல் எனக்கு இருக்கிறது" என்றான்.

"சரி. எல்லா விஷயங்களும் உனக்கே நன்றாகத் தெரியும். தெரிந்தும் உனக்குப் பயமில்லை; தைரியந்தான் என்றால் போ. என் வீட்டை விட்டு இந்தப் பிசாசுகளை விரட்டினாயானால் உனக்கு நல்ல வெகுமதிகள் தருகிறேன்" என்றான் வியாபாரி.

சிப்பாய் "எனக்குக் கொஞ்சம் மெழுகு வர்த்திகள், வறுத்த வேர்க்கடலை, வேக வைத்த ஒரு பெரிய சீமை முள்ளங்கி ஆகியவை வேண்டும்" என்று கூறினான்.

வியாபாரி "ஓ, பேஷாக! என் கடைக்கு வந்து உனக்கு என்னவெல்லாம் வேண்டுமோ அவற்றை எடுத்துக் கொள்" என்றான்.

அவ்வளவுதான்; கிழவன் கடைக்குள் நுழைந்தான். ஒரு டஜன் மெழுகுவர்த்திகள், ஒரு கிலோ வேர்க்கடலை, வியாபாரியின் வீட்டு அடுப்பங்கரைக்குப் போய் அங்கே வெந்து கொண்டிருந்த முள்ளங்கிகளில் பெரிய முள்ளங்கியாக ஒன்றை எடுத்துக் கொண்டு புது வீட்டை நோக்கிப் புறப்பட்டான்.

சரியாக நடு நிசி வேளை. அப்போது திடீர் என்று 'ஹா ஹா' என்று ஒரே ரகளையும் கூச்சலும் கேட்டது. வீட்டுக் கதவுகள் எல்லாம் கடகட என்று அலறின. மரப் பலகைகள் தெறிச்சிட்டன! 'டாம்' 'டூம்' என்று குதித்து எழுப்பப்பட்ட ஓசை கல்லறைகளில் புதையுண்டு கிடப்பவர்களையும் எழுப்பி விடும்படி பலத்திருந்தது! அந்த வீடு ரணகளப்பட்டது!

இவ்வளவு சத்தத்திலும் கிழச் சிப்பாய் நிம்மதியாக உட்கார்ந்து ஒவ்வொரு கடலையாக வெடித்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். கிழவன் உட்கார்ந்திருந்த அறைக் கதவு இருந் திருந்தாற் போல் திறக்கப் பட்டது. ஒரு குட்டிப் பிசாசு தலையை நீட்டி எட்டிப் பார்த்தது. சிப்பாய் உட்கார்ந்திருப்பதைக் கண்டதும், "ஓ! ஒரு மனிதன் வந்திருக்கிறான். நமக்கு இன்றைக்கு நல்ல விருந்து!" என்று கூப்பாடு போட்டது.

எல்லாப் பிசாசுகளும் இடித்து மோதிக் கொண்டு ஓடி வந்தன. கதவோரமாக நின்று ரகசியமாகப் பேசிக் கொண்டன.

"நாம் அவனைப் பற்றித் துண்டு துண்டாகக் கிழித்தெறிவோம்! அப்படியே அவனைச் சாப்பிட்டு விடுவோம்" என்றெல்லாம் பேசின.

"அப்படி யொன்றும் சர்வ நிச்சயமாக இருந்து விடாதீர்கள். உங்களைவிட பலம் பொருந்திய கோரப் பிசாசுகளைப் பார்த்திருக்கிறேன். அவர்களுக்கு நல்ல பாடமும் கற்றுக் கொடுத்திருக்கிறேன். அது போகட்டும். என்னைச் சாப்பிடப் போவதாகச் சொன்னீர்களே, நான் உங்கள் தொண்டையில் சிக்கிக் கொள்ளாமல் இருப்பேனா என்பதைப் பார்த்துக் கொள்ளுங்கள்!"

இதைக் கேட்டதும் தலைமைப் பிசாசு தள்ளிக் கொண்டு முன்னால் வந்தது: "நம்மில் யார் அதிக பலசாலி என்று சோதனை செய்து பார்த்து விட்டால் போகிறது!" என்றது.

சிப்பாய், "ரொம்ப சரி, உங்களில் யாராவது ஒரு கல்லின் சாறு எல்லாம் வெளியே வரும்படி நன்றாகப் பிழிய முடியுமா!" என்று கேட்டான்.

தலைமைப் பிசாசு தெருவிலிருந்து ஒரு கல்லைக் கொண்டு வரும்படி கட்டளை யிட்டது. உடனே ஒரு குட்டிப் பிசாசு ஓடிப் போய்க் கொண்டு வந்து, "இந்தா, எங்கே பிழி பார்ப்போம்" என்று கொடுத்தது.

"உங்களில் யாராவது முதலில் பிழியப் பாருங்கள். நான் அப்புறம் பார்க்கிறேன்" என்றான் கிழவன்.

தலைமைப் பிசாசு அதை வாங்கி அழுத்தி அழுத்திப் பார்த்தது. கல் பொடிப் பொடியாகி மணலாயிற்றே தவிர ஒரு சொட்டுத் தண்ணீர் கூட வெளிவர வில்லை.

"பார்த்தாயா! உங்களால் முடியவில்லை!" என்று கூறிக் கொண்டே தன் பையிலிருந்து

சீமை முள்ளங்கியைத் தன் கையில் எடுத்தான். "இதோ பாருங்கள். உங்கள் கல்லைவிட என் கல் எவ்வளவு பெரிதாக இருக்கிறது" என்று கூறிக் கொண்டே முள்ளங்கியைப் பிழிந்தான். முள்ளங்கியிலிருந்த சாறெல்லாம் வெளியே ஒழுக வந்தது. "பார்த்தீர்களா!" என்றான் சிப்பாய் பிசாசுகளைப் பார்த்து.

பிசாசுகள் பிரமிப்பில் பிளந்த வாய் பிளந்தபடி நின்றன! மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்ட நாக்கு கீழே வந்த பிறகு, "அப்போதே பிடித்து ஏதோ தின்று கொண்டிருக்கிறாயே, என்னது அது!" என்று கேட்டன.

"நிலக் கடலை. ஆனால் நான் சாப்பிடும் நிலக் கடலையை உங்கள் ஒருவராலும் தோலைக்கூட உரிக்க முடியாது!" என்று சொல்லிக் கொண்டே துப்பாக்கி ரவை குண்டைத் தலைமைப் பிசாசிடம் கொடுத்தான். "எங்கே உங்களால் இதன் தோலை உரிக்க முடிகிறதா பாருங்கள்!" என்றான்.

பிசாசு ரவை குண்டைப் பல்லில் வைத்துக் கடித்தது. ரவை சப்பையாயிற்றே ஒழியப் பிளக்கவில்லை. ஆனால் கிழவனோ வேர்க் கடலையை 'டப்' 'டப்' என்று விரல்களால் வெடித்து உள்ளிருக்கும் பருப்பை வாயில் போட்டுச் சாப்பிட்டுக் கொண்டே யிருந்தான்!

இதைப் பார்த்ததும் அந்தப் பிசாசுகளுக்கு ரொம்பவும் வெட்கமாகப் போய் விட்டது. தங்கள் தலைகளைக் கவிழ்த்துக் கொண்டன. அலைகடலில் தத்தளிக்கும் படகைப் போல, சிப்பாயின் முன்னால் நிற்கக் கூட முடியாமல் அவை தவித்தன.

அப்போது சிப்பாய் "நீங்கள் எல்லாம் தந்திர வித்தை செய்வதில் கெட்டிக்காரர்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அதாவது நீங்கள் சின்ன உடம்பிலிருந்து பெரிய உடம்பாக எடுத்துக் கொள்வீர்களென்றும், பெரிய உடம்பிலிருந்து சின்ன உடம்பாக எடுத்துக் கொண்டு சின்னஞ்சிறிய துவாரம் வழியாகத் தப்பித்துக் கொண்டு போய்விடுவீர்கள் என்றும் கேள்விப்பட்டிருக்கிறேன்! இது வாஸ்தவமா!" என்று கேட்டான்.

"ஆமாம், ஆமாம், அதை எங்களால் செய்ய முடியும்!" என்றன.

"அப்படியானால் என் பைக்குள் நீங்கள் அத்தனைபேரும் நுழையமுடியுமா, பாருங்கள்!" என்றான்.

பிசாசுகள், ஒன்றோடு ஒன்று போட்டி போட்டுக் கொண்டு அவசரம் அவசரமாகச் சிப்பாயின் பைக்குள் நுழைந்தன. ஆம், ஒரு நிமிஷத்தில் அறை காலியாகி விட்டது. எல்லாப் பிசாசுகளும் கிழவனின் பைக்குள் நுழைந்து விட்டன. அவ்வளவுதான்! கிழவன் பையை இறுக மூடி முடிபோட்டு வைத்து விட்டு, "இனிமேல் நான் நிம்மதியாகத் தூங்கலாம்" என்று சொல்லிக் கொண்டான்.

அப்படியே அவனுடைய பெரிய 'கோட்'டை விரித்துப் போட்டு நிம்மதியாகத் தூங்கினான்!

மறுநாள் காலை, வியாபாரி தன் கடைச் சிப்பந்திகளை அழைத்து, "நீங்கள் அந்த வீட்டுக்குப் போய்க் கிழச் சிப்பாய் உயிரோடிருக்கிறானா என்று பாருங்கள். அவன் இறந்திருந்தால் அவன் எலும்புத் துண்டுகளைப் பொறுக்கிக் கொண்டுவாருங்கள்!" என்றான்.

இதோ இருக்கிறார்களே தம்பதிகள், இவர்கள் யார் தெரியுமா! அமெரிக்காவில் காமிராக்கள், லென்ஸுகள் மற்றும் போட்டோ கலப் பொருள்களை உற்பத்தி செய்யும். மிகப் பெரிய கம்பெனியான பெல் அண்டு ஹௌல் (சிகாகோ) கம்பெனியின் தலைவர் திரு சார்லஸ் பெர்ஸியும் அவர் மனைவியும். இலினோய் பொறி இயல் கல்லூரியின் போஷகர்களில் ஒருவர் இவர். முதியோர் கல்வி என்று ஏற்படுத்தப்பட்ட போர்டு சாசவத நிதியின் டைரக்டர்களில் ஒருவர். இவர் தம் மனைவியுடன் நம் நாட்டைப் பற்றி நேர்முகமாகத் தெரிந்து கொண்டு போக வந்திருக்கிறார். இவர் பம்பாயில் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் "எங்கள்நாட்டிலும் சென்ற இரண்டு ஆண்டுகளாக மத சம்பந்தமான படங்களுக்கே மிகுந்த வரவேற்பு இருக்கிறது" என்று கூறினார்.



"பாரதநாட்டுப் படங்கள் அங்கே காட்டப்படுகின்றனவா!" என்று கேட்டதற்கு, "உங்கள் படங்கள் மிகுந்த நீளமாக இருக்கின்றனவே. அமெரிக்கர்கள் 90 நிமிஷங்களுக்கு மேலுள்ள எந்தப் படங்களையும் பார்க்க மறுக்கிறார்களே!" என்று கூறியிருக்கிறார். இந்த நண்பர்களின் விஜயம் இந்தியாவைப் பற்றிச் சரியாகப் புரிந்து கொள்ள உதவியிருக்கும் என்றே நம்புகிறோம்.

கடைச் சிப்பந்திகள், கிழவன் அறையில் புகை பிடித்துக் கொண்டே உலாவிக் கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். "வணக்கம், சோல்ஜர் ஐயா! நீர் உயிரோடிருப்பீர் என்று நாங்கள் நம்பவே இல்லை. நீர் இறந்துபோயிருப்பீர்கள், உம்முடைய எலும்புகளைப் பொறுக்கிக் கொண்டு போகவேண்டும் என்று ஒரு பெட்டி சகிதம் வந்திருக்கிறோம்! உங்களை உயிரோடு பார்த்ததில் எங்களுக்கு அளவு கடந்த சந்தோஷம்" என்றார்கள். சோல்ஜர் சிரித்துக் கொண்டான்.

"என்னைக் கொல்வது என்பது அவ்வளவு சுலபமா! எவ்வளவோ சிரமப்பட வேண்டும். அது கிடக்கட்டும். இந்தப் பையை எனக்குக் கொல்லுலைக்குக் கொண்டு போக வேண்டும். தயவுசெய்து, எனக்குக் கொஞ்சம் உதவுங்களேன். கருமான் வீடு இங்கிருந்து ரொம்ப தூரமா, என்ன!" என்று கேட்டான் கிழவன்.

"தூரம் ஒன்றுமில்லை. பக்கத்திலேதான் இருக்கிறது!" என்றுகூறி, அந்தப் பையைத் தூக்கிக் கொண்டு கருமான் சாலைக்குப் போனார்கள்.

உலைக்களத்திலிருந்த கருமார்களைப் பார்த்து, "இந்தப் பையை உங்களிடமுள்ள பட்டறைக் கல்லில் வைத்துச் சம்மட்டி கொண்டு நன்றாக அடியுங்கள்" என்றான்.

பாவம், பிசாசுகள்! அவைகள் பட்ட அடிகளைச் சொல்வானேன்! ரொம்பவும் கஷ்டப்பட்டு விட்டன என்று சொன்னாலே போதும்.

"ஐயா, சோல்ஜர் ஐயா! எங்கள்மீது இரக்கங் கொள்ளுங்களேன். எங்களை வெளியே விட்டு விடுங்களேன்!" என்று கெஞ்சின.

கருமார்கள் விடவில்லை. சம்மட்டியால் அடித்துக் கொண்டேயிருந்தார்கள். கிழச் சிப்பாய், "போடுங்கள், நன்றாகப் போடுங்கள். ஜனங்களை ராத்திரி வேளையில் வந்து தொந்தரவு செய்வது என்றால் எப்படி யிருக்கும் என்று இவைகளுக்கும் தான் தெரியட்டும்!" என்றான்.

"ஐயா! நாங்கள் இனி அந்த வீட்டில் அடியெடுத்து வைக்க மாட்டோம். நாங்கள் உயிரோடிருக்கும் வரை அந்தப் பக்கம் தலை வைத்துப் படுக்க மாட்டோம். நாங்கள் வரவே மாட்டோம் என்பது மட்டுமில்லை; எங்கள் இனத்தைச் சேர்ந்த மற்றவர்களையும் போகாமல் எச்சரிக்கை செய்து வைக்கிறோம். எங்களை உயிரோடு விட்டால் உனக்கு வெகுமதி தருகிறோம். எங்களை விட்டு விடேன்!" என்றன பிசாசுகள்.

"இப்பொழுதுதான் நீங்கள் பணிவாகப் பேசுகிறீர்கள். இன்னொரு தரம் இந்தமாதிரி செய்தீர்களானால், ருஷ்ய சிப்பாயினிடமிருந்து தப்புவது ரொம்பவும் கஷ்டம் என்று ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். ஜாக்கிரதை!" என்று சொன்னான்.

பிறகு கருமார்களைப் பார்த்துச் சம்மட்டியால் அடிப்பதை நிறுத்தச் சொன்னான். தனது பையின் மூடியை அவிழ்த்து, வாயைச் சிறிதாகத் திறந்து ஒவ்வொன்றாக வெளியே விட்டான்—தலைமைப் பிசாசைத் தவிர. ஆம், தலைமைப் பிசாசு பைக்குள்ளிருந்தது. அப்போது பையை மூடிவிட்டான். பிறகு வெளியிலிருந்த மற்றப் பிசாசுகளைப் பார்த்து, "நீங்கள் எனக்குக் கொடுப்பதாகச் சொன்ன பரிசுப் பொருளைக் கொண்டு வந்தாலொழிய உங்கள் தலைவனை விட மாட்டேன்" என்றான்.

இப்படிச் சொல்லிவிட்டுச் சற்றுப் பொறுத்தான். ஒரு பிசாசு ஒரு பழைய பெட்டியைத் தூக்கிக் கொண்டு வந்தது. கிழச் சிப்பாய் அதை வாங்கிப் பார்த்தான். ரொம்ப இலேசாக இருக்கிறதே என்று நினைத்தான். திறந்து பார்த்தான். பெட்டிக்குள் ஒன்றுமே இல்லை. காலியாக இருந்தது!

"என்ன என்னைப் பைத்தியமாக அடிக்கவா பார்க்கிறாய்! என்னை ஏமாற்றவா பார்க்கிறாய்! இரு. இரு. சம்மட்டி கொண்டு உன் தலைவனுக்கு இரண்டு அடிகள் கொடுத்து உனக்குப் புத்தி புகட்டுகிறேன்" என்றான். சம்மட்டிகள் வேலைசெய்ய ஆரம்பித்தன.

பைக்குள்ளிருந்த பிசாசுத் தலைவன் அலறினான். "ஐயா! ஐயா! என்னை அடிக்காதே! என்னைத் தொந்தரவு செய்யாதே! நான் சொல்வதைக் கேளேன். அந்தப் பெட்டி பார்ப்பதற்குச் சாதாரணப் பெட்டி போல் தோன்றலாம். ஆனால் அது சாதாரணப் பெட்டியல்ல, விரும்பியதைக் கொடுக்கும் பெட்டி. இத்தகைய பெட்டி உலகிலேயே இது ஒன்றுதான் உண்டு. மனதில் ஒன்றை விரும்பி விட்டுப் பிறகு பெட்டியைத் திறந்து பாருங்கள். நீங்கள் விரும்பிய பொருள் பெட்டிக்குள் இருக்கும். ஒரு பறவையைப் பிடிக்க வேண்டும், அல்லது ஒரு புஷ்பம் வேண்டும் என்று நினைத்துக் கொண்டு பெட்டியை ஆட்டி, இரண்டே இரண்டு வார்த்தைகள் 'உள்ளே போ!' என்று சொல்லுங்கள். அவ்வளவுதான்; அப் பொருள் பெட்டிக்குள் இருக்கும்" என்றது பிசாசு.

"நீ உண்மையைத்தான் சொல்லுகிறாயா, இல்லையா என்று பார்த்துவிடுகிறேன்" என்று சொல்லிவிட்டுக் கிழச் சிப்பாய் பின்வருமாறு நினைத்துக் கொண்டான்: "எனக்கு மூன்று சீசா பானங்கள் வேண்டும்."

அவ்வளவுதான்; பெட்டி கனக்கத் தொடங்கியது. திறந்து பார்த்தான். மூன்று சீசாக்கள் நிறையப் பானம் இருந்தது. அவற்றை அந்தக் கருமார்களுக்குத் வழங்கினான். "நண்பர்களே, சாப்பிட்டு மகிழுங்கள்" என்றான் கிழவன்.

பிறகு அவன் வெளியே போய்ப் பார்த்தான். ஒரு சிட்டுக் குருவி ஒரு குடிசையின் கூரையின் மீது உட்கார்ந்திருக்கப் பார்த்தான். அவ்வளவுதான்! கிழவன் தன் பெட்டியை ஒரு ஆட்டு ஆட்டி, "உள்ளே போ!" என்றான்.

அவன் வாயிலிருந்து வார்த்தைகள் வெளிவரு முன்பே, சிட்டுக்குருவி பெட்டிக்குள் பறந்து போய் உட்கார்ந்து கொண்டு விட்டது.

சிப்பாய் கொல்லுலைக்குப் போனான். "உண்மையைச் சொன்னாய். என்வரை யோக்கியமாக நடந்து கொண்டாய். என் போன்ற சிப்பாய்க்கு இம்மாதிரியான பெட்டி ரொம்பவும் உபயோகமாக இருக்கும்" என்று சொல்லிக் கொண்டே பையைத் திறந்து, தலைமைப் பிசாசை வெளியே விட்டான்.

அப்பொழுது தலைமைப் பிசாசைப் பார்த்து, "இப்பொழுது நீ தப்பி ஓடிப் போ. ஆனால் ஒன்று மட்டும் ஞாபகம் வைத்துக் கொள். நான் இனி எப்பொழுதாகிலும் உன்னைப் பார்க்க நேர்ந்தால், உனக்கு என்ன ஏற்படுமோ என்னால் சொல்ல முடியாது. ஜாக்கிரதை" என்றான். (அடுத்த இதழில் முடியும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram.

ஆரோக்கியமுள்ள ஜனங்கள்
தினமும் லைப்பாய் சோப் உபயோகித்துக் குளிக்கிறார்கள்!

அது தினந்தோறும்* சேரும் அழுக்கிலுள்ள கிருமிகளை கழுவிக் களைகிறது!







* தினமும் நம் தேகத்தில் ஒட்டிக்கொள்ளும் சாதாரண அழுக்கிலுள்ள கிருமிகளினால் பல வியாதிகள் வரும் அபாயம் எல்லோருக்கும் உண்டு. அதனால்தான் நீங்கள் லைப்பாய் சோப்பை உபயோகிக்க வேண்டும்—அது சரீரத்தைசுத்தமாக்குவதுடன் புத்துணர்ச்சியையும் தருகிறது!

L. 256-50 TM

இந்தியாவில் தயாரித்தது

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

டால்டா
எனக்கு
நல்லது!

டால்டா பிராண்டு
வனஸ்பதியை
உபயோகித்துச் சமையுங்கள்




அது சமையல் செய்வதற்கு சிறந்ததாய் இருப்பதோடு போஷாக்கையும் தரும்

HVM. 263-50 TM